

# ஸ்ரீ மத் பாகவத மகா புராணத்தின்

# * கோபி கீதம் *



உரை ஆசிரியர் :

**ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்**

(வேதாந்த ஆச்சாரியார்)

தலைவர் : ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் மடாலயம்

30, அவனியாபுரம் சாலை. மதுரை-12



# ஸ்ரீ மத் பாகவத மகா புராணத்தின்

# ⋆ கோபி கீதம் ⋆





உரை ஆசிரியர் :

**ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்**

(வேதாந்த ஆச்சாரியார்)

தலைவர் : ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் மடாலயம்

30, அவனியாபுரம் சாலை. மதுரை—12.

1996 விலை : ரூ. 40—00





ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

19-6

# நன்றியுரை

கண்ணுக்கு அழகுக் கருணை. கரத்திற்கு அழகு ஈகை.
ஈந்தவன் உயர்கிறான். ஈயாதவன் தாழ்கிறான்
''தானேந பாணி:'' பாணி - கை. என்பது நீதிவாக்கியம்.

இவ்வாக்கியத்திற்கு இணங்க

## கொடைவள்ளல்

## ஸ்ரீ மான் இராம சுப்ரமண்ய இராஜா

அவர்களும் அவரது பாரியாள்

## சுதர்சனம் அம்மையார்

அவர்களும் இரப்பார்க்கு இல்லை யென்னுது மாரி போல் வாரி வாரி வழங்கி வருகிறார்கள்.

அவர்களின் பெரும் உதவியாலும் மற்றயைர் சிறிய உதவியாலும் கோபிகீதம் என்னும் இப்புனிதநூல் உங்கள் கர கமலத்திற்கு வருகிறது.

குவலயம் போற்றும் கொடைவள்ளலாகிய ஸ்ரீமான் இராம சுப்ரமண்ய இராஜா அவர்களுக்கும் அன்னர் குடும்பத்திற்கும் கோபாலன் குறையாத செல்வத்தையும் நிறைந்த ஆயுளையும், ஆரோக்கிய முழுவதையும், அர்ளிக் கொடுக்கட்டும் என்று பாலமுகுந்தனைப் பணிவுடன் போற்றுகின்றேன்.

இங்ஙனம் :

சுவாமி யோகானந்தகிரி

சுபம்.

# முன்னுரை

யாருடைய இதயத்தில் உண்மையான அன்பு உதய-மாகிறதோ, அந்த அன்பின் பெருமை ஒருவராலும் உரைக்க முடியாது என்று நாரதர் நவில்கின்றார். அன்பினது மகிமை அளவிடில் அரியது. அன்பினது பெருமையும் அவ்வாறே.

அது அமங்கலத்தை மங்கலமாக்கும், அசுபத்தைச் சுபமாக்கும், அவனது ஊர், அவனது குலம் புனிதமாகும். அவன் நடந்து செல்லுகின்ற நிலம் தூய்மை உறுகின்றது.

இறைவன் சத்துச் சித்து ஆனந்த வடிவினன். மனிதன் எப்பொழுது இறைவன் பக்தியை அடைய விரும்பு-கிறானோ - அதற்கு முயற்சி செய்கின்றானோ அப்பொழுது இறைவனது எண்ணம் இதயத்தில் உதயமாகின்றது. அவ் வெண்ணத்தால் ஆற்றில் ஊற்று ஊறுவது போல் இதயத்தில் பக்தி ஊறுகின்றது. எனவே அவனை நினைக்க வேண்டும்.

அன்பிற்கு இருவடிவம். ஒன்று தாகம், மற்றொன்று திருப்தி. திருப்தி - போதும் என்னும் தந்நிறைவு. தாகம் - ஆன்மாவை அடைய வேண்டும் என்னும் தணியாத ஆசை.

''ஞானதீர்த்தம் படிந்திடப்பதறினனே'' கைவல்யம். ஞானம் ஒரு புனித புனல். அதில் நீராடவேண்டும் என்னும் வேட்கை. இவ்வேட்கை இல்லாமல் இறைவனை எளிதில் எய்த இயலாது.

ஞானத்தில் வைக்கின்ற வேட்கைக்கு ஜிக்ஞாசை. யாருக்கு ஞானத்தை அடைய வேண்டும் என்னும் தாகம் உண்டாகுமோ, அவனுக்கு ஞானம் எளிதில் உண்டாம். அஃதில்லாருக்கு எங்ஙனம் உண்டாம்? உண்டாகாதென்பது குறிப்பு. இம்மாதிரி மோட்சத்தில் உண்டாகும் தாகம் முமுட்சுதா என்று பெயர். பகவானை அடைய வேண்டும் என்னும் தாகம் பக்தி.

அன்பிற்கு இரண்டாவது வடிவம் திருப்தி. இறைவன் திருநாமங்களைக் கேட்டு அவனது உருவத்தை உள்ளத்தால் உள்ளி ஓயாது நினைக்கும் போது சுகாநுபவம் உண்டாகு-மாயின் அப்பொழுது இறைவன் இன்பம் எழுகிறது எனலாம். பொருளுக்காக அழுகிறோம். பெண்டிர்க்காக அழு-கிறோம், பிள்ளைக்காக அழுகிறோம், உற்றார் உறவினர்க்காக அழுகிறோம். நலனுக்காக அழுகிறோம், பதவிக்காக அழுகிறோம் அழுது அழுது அனந்த நாட்கள் கழிந்தன, இவ்வழுகையால் துன்பத்தைக் கண்டதே யல்லாது ஒரு பயனும் அடைந்திலேம். இன்பத்தை பெற்றிலேம். இறைவனுக்காகக் கண்ணீர் என்று வடிக்கிறோமோ அன்று ஆனந்தம் உண்டாகும்.

அழாமல் ஞானமும் வாராது. "காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி என்றும், வணங்கி நின்று அழுது சொல்-வான்" என்றும் முறையே தேவாரமும், கைவல்யமும் கூறுகின்றன. இதனால் அழுகையும் தத்வ ஞானத்திற்குச் சாதனம் ஆகுகின்றது. மனித வாழ்க்கையில் இறைவனை ஏற்றுக் கொள்வது ஒரு விதம், அவனை உள்ளன்போடு வழிபடுவது மற்றொரு விதம். விரிவான கடலைப் பார்த்து கையெடுப்பதும், காலையில் கதிரவனைக் கண்டு வணங்கு-வதும் ஆஸ்திகம். இது அன்பாகாது. எப்பொழுது இறை-வனுக்காக இதயத்தில் துடிப்பு உண்டாகிறதோ அப்பொழுது அது அன்பாகும். அதுவே பக்தி.

ஈரமில்லாத நெஞ்சத்தவர் இருக்கட்டும் அவரைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை. ஈண்டு, ஈகையும் இரக்க-மும் உடையவரைச் சிந்திப்போம். திருப்தி இறைவனை அடைந்த பிறகு உண்டாகும் இரசவிசேஷம். அன்பு முக்கியம். அன்பு ஆண்டவனிடத்தில் குறையக்கூடாது. பகவானது பிரிவால் வாழ என்றால் எவ்வாறு முடியும்? என்னும் எண்ணம் இதயத்தில் உதிக்கவேண்டும். அந்தோ, அந்தோ

இறைவனைக் காணாது ஒவ்வொரு பொழுதும் ஒவ்வொரு யுகமாகக் கழிகிறதே! என்று அன்பன் அலறுகிறான்.

"ஆற்றேனே ஐயா அரனேயோ வென்றென்று" திருவாசகம். பொருள்வெளி.

நாத்திகன் அறிவாளியாக இருப்பான். ஆஸ்திகர்கள் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரியவர்கள். இறைவனை நேரில் காணாது இருப்பினும் நம்பிக்கையில் உறுதியாக இருக்கிறார்கள். ஆனால் இவர் இருவரைப் பார்க்கினும் அன்பன் மிகச் சிறந்தவன். ஏனெனின் காதலாகிக் கண்ணீர் மல்கி உள்ளம் உருகி வெள்ளமாய்ப் பெருகி தமது நாயகனை நாடிக் கொண்டேயிருக்கிறான்.

அவன் மனம் ஹரியையே நாடிக் கொண்டு இருக்கிறது. கற்புடைய மங்கை கணவன் பிரிவாற்றாது கண் கலங்குவது போல் அன்பன் தனது இன்ப நிலையமாகிய இறைவனைக் காணாது தவிக்கிறான். அன்பு என்கின்ற மலர் பிரிவு என்கின்ற பொய்கையில் மலர்கின்றது. கமலம் கதிரவனைக் கண்டதும் விரிகிறது. கோபிகளுள்ளம் கோபாலனைக் காணாமல் கொதிக்கிறது. ஆயர்குலப் பெண்கள் அகத்தில் ஹரியைக் காணாமல் தாகம் தணியவில்லை. அகம்-நெஞ்சு. அவர்கள் உள்ளத்தில் அமைதியில்லை. அவர்கள் தங்கள் செவிகளால் கண்ணன் குழலோசையைக் கேட்டார்கள்.

கண்களால் கண்ணனை நேரில் கண்டார்கள். அக்காட்சிகள் இப்போதும் மாட்சிமையாக முன்னே தோன்றுகின்றன. முன்னே தேனு - பசு பாதத்தில் ரேணு - தூளி, வாயில் வேணு - புல்லாங்குழல், முடிமிசை மகுடம் மயில்பீலி இவ்வளவும் அணிந்து எதிரே காணப்பட்டான்.

''கிருஷ்ணாத்பரம்கிமபி தத்வம் அஹம் நஜாநே'' நாரதர் சொன்னது. கிருஷ்ணனுக்கு அன்னியம் மேலான தத்வம் ( ஒன்று இருப்பதாக ) நானறியேன் என்பது பொருள். பார்க்கும் இடம் எல்லாம் பரமன்காண் அம்மானே, எங்கெங்கும் பார்த்தாலும் இறைவனடி அம்மே என்றபடி. முகுந்தன் ஞானிகளுக்கு தமது வடிவமாகக் காணப்படுவான். பக்தனுக்குப் பகவானுகக் காணப்படுவான். கோபிகளுக்கு எங்கு பார்த்தாலும் கோபாலனுகக் காணப்படுகிறான். கண்ணனைப் பெறவேண்டும் என்னும் இச்சை உன் இதயத்தில் இருக்குமானுல் முதற்கண் கோபியை வழிபடு. இறைவன் நமக்குத் தெரியவில்லை யென்றால் அவனைக் காணமுயலவேண்டும். காணமுயலுமின்- என்பது ஆன்றோர் வாக்கு.

இறைவன் நம்மைப்பார்ப்பதால் நமக்கு ஒரு பயனில்லை அவன் பொதுவாக எல்லோரையும் பார்க்கத்தான் செய்கிறான். அதனுல் பயன் என்? நாம் அவனைப் பார்க்க வேண்டும். அவன் சர்வசாட்சி ''சீவசாட்சி மாத்திரமாய் நிற்கும்'' என்பது கைவல்யம். நாம் அவனை நோக்குங்கால் நமக்கு இன்பம் உண்டாகிறது.

வேதாந்தி - நான் திருஷ்டா என்கிறார். (திருஷ்டா-பார்ப்பவன்) ஜகத்திருஸ்யம். ஜெகதீசனும் திருஸ்யம் நான் திருசியம் பகவான் திருஷ்டா என்கின்றனர் அன்பர்கள். அன்புமார்க்கத்தில் பகவான் ஒரு முறை திருசியம் ஆகவும் மற்றொருமுறை திருஷ்டாவாகவும் ஆகிறார்.

''அன்பனுக்கு அன்பனடி ஆறுமுக வேலனடி''

என்கின்றது காவடிச்சிந்து. ''பரஸ்பரம் பாவயந்த; ஸ்ரேய;'' கீதை. நாம் அவனிடத்தில் அன்பு செலுத்த வேண்டும். அவன் நமக்கு அருள் பாலிக்க வேண்டும் என்பது கீதையின் பொருள். நாம் அவனிடம் அன்பு செய்யவில்லையெனின் அவன் நம்பால் அருள் ஏன் செய்ய வேண்டும்? நாம் கள்ள

மிலாது அன்பு செய்யவில்லை யெனின் இறைவன் நமக்கு அருள் செய்யவில்லையே என்று வருந்துவதற்கு என்ன நியாயம்?

பாலம் கட்டினால் இருதலைக்கும் பொருந்த வேண்டும். நட்பு இருதலையும் இருக்க வேண்டும். அப்போது தான் காதல் நிலைத்திருக்கும். இருவர் கருத்தும் ஒத்து இருக்க வேண்டும்.

"காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்" அவ்வையார். இருவர் இனிமையாகக் கூடும் போது இன்பம் நிறைவு உறுகிறது. ஒருபட்சமாக அன்பு மலர்கிறதில்லை. அன்பனும் பகவானும் தனியே இருந்தால் நட்பை எவ்வாறு அறிய இயலும்? சக்ரவாகம் என்னும் ஒரு ஜாதிப்பறவை. அவை ஆண் பெண் இணைந்தே இருக்கும். எப்போதும் கணவனும் மனைவியும் கசிந்தே வாழும். ஒரு போதும் பிரிகிறதில்லை. எனவே அவ் இரு பறவைகளுக்கும் பிரிவினால் உண்டாகும் துன்பம் தெரிகிறதில்லை. அன்பு மார்க்கம் வாசனை மார்க்கமல்ல. சாதனைக்கு உரியமார்க்க மாகும். தவத்திற்கு உரியமார்க்கம். வாசனை வழிசெல்பவன் அன்பு மார்க்கத்தை அறியான். கடலைக் கண்டதும் முத்தை எடுக்க முடியாது. எவன் அதில் மூழ்குவானோ அவன் அதைப் பெறுவான். அது முத்து. அது போல் இறைவன் பக்தியில் எவன் தோய்வானோ அவன் அவனை அடைவான்.

ரோசாமலரைப் பார்த்தோம். நமக்கு இன்பம் தோன்றியது. இது காமம். மலரை நோக்குவதால் வரும் இன்பம் இறைவனுக்காக இருக்குமானால் அது பக்தி. அன்பும் காமமும் ஒன்று போல் தோற்றினும், இரண்டும் வேறு வேறு தன்மையை உடையன.

கோபிகள் முதலாவது வீடு வாசலைத் துறக்கவில்லை. பின்னை? அச்சுதன் ஊதுகின்ற குழலோசை அவர்கள்

செவியில் விழுந்தது. அதனுல் நடநாகரன் ஞாபகம் அவர்கள் மனதில் உதித்தது. அவனை அடைய வேண்டுமென எண்ணி காத்தியாயனிக்கு நோன்பு இருந்தார்கள். காத்தியாயனி-பார்வதி. நோன்பு விரதம். கவுரியின் கிருபையால் பகவானுக்காக தியாக உணர்வு அவர்கள் இதயத்தில் உதயமானது.

இரவு நடுநிசி. விஷ்ணுவிற்காக வீடு வாசலைத் துறக்கத் துணிந்தனர். கோபாலன் குழல் ஊதியதும் நம்மைக் காணக் கண்ணன் விரும்புகிறான் என்று கோபிகள் நினைத்தார்கள். ஆகா? அச்சுதன் நம்மைப் பார்க்க விரும்புகிறானே என்று ஆயர் மாதர் அனைவரும் நீரிலா மீன் போல் நெடிது துடித்தனர்.

மீளவும் குழல் ஓசை அவர்கள் செவியில் விழுந்தது. வாத்யம் பலவிதம். 1. தாட்டியவாத்யம். தட்டி, கொட்டி, அடித்து வாசிப்பது. அவை - தவில், மிருதங்கம், பேண்டு வாத்தியம் முதலியன. 2. சங்கர்ஷவாத்யம் - சிங்கி, ஜாலரை, ஒன்றோடொன்று மோதி ஒலி தருவன. 3. தந்து வாத்யம் - சிதாரை, வீணை - நரம்புகளைச் சுண்டி ஒலி எழுப்புவது, 4. சுஷூரவாத்யம்-சங்கு, பேரி, புல்லாங்குழல். வாத்யத்தில் புல்லாங்குழல் வாத்தியம் சிறந்த வாத்தியம். இதற்குப் பிராண வாத்தியம் என்று பெயர். இதயத்திலுள்ள எண்ணத்தை எடுத்துக் காட்டுவதில் இது மிகச் சிறந்த வாத்தியம்.

குழலை ஊதியதும் கோபிகள் எண்ணினார்கள். நம்மைக் காண நடநாகரன் துடிக்கிறான். ஆகலின் அவனைக் காண நாம் செல்ல வேண்டும் என்றார்கள். தாமோதரனுக்காக சகலத்தையும் தியாகம் செய்தார்கள்.

விட்டவன் வீடு பெறுவானென்று விளம்பிய பழமொழி மெய்யாகாதோ என்பது சமயோசிதமாலை. தியாகத்தால்

இறைவனை எளிதில் எய்தலாம் என்பது இதன் பொருள். சகலத்தியாகம் - வீட்டையும், பரிவாரத்தையும், அவைகளிலுள்ள அகந்தையையும், மமதையையும், அகப்பற்று புறப்பற்றுக்களையும் விட்டு விடுவது.

அவர்கள், நாம் ஆனந்தத்தை அடைய செல்லவில்லை. பின்னை? அச்சுதனுக்கு ஆனந்தத்தை அளிப்பதற்காக அவன் பால் சென்றனர். கோபாலன் கோபிகள் துகிலை உரிந்தான். இதனுல் அவர்கள் அகத்தில் உள்ள மறைப்பு நீங்கியது. பக்தி பாவம் மேலிட்டது. பகவானுக்கும் பக்தனுக்கும் உள்ள இடைவெளி நீங்கி விட்டது. இருவரும் ஒருவராகும் தன்மை நிலவியது. சங்கோச்சம் அகன்றது.

துகிலை உரிவது மறைப்பபை அகற்றுவது என்பது தத்வார்த்தம். வேதாந்தத்தில் இதற்கு ஆவரணபங்கம் என்று பெயர். வாசுதேவன் வனிதைகளோடு ஆடினுன். உலகில் எல்லோரும் ஆடுகின்றனர். மனிதனுடைய கை பணத்தோடும், கண் உருவத்தோடும். காது சப்தத்தோடும், நாக்குச் சுவையோடும் ஏனைய பொறிகள் அதனதன் புலன் களோடும் ஆடுகின்றன. எப்போதாவது நீ இறைவனேடு ஆடியதுண்டா? கோபிகள் கண்ணனோடு தாண்டவம் ஆடுகிறார்கள்.

மாதா யசோதை தன் மைந்தனையும் பார்க்கிறாள். வீட்டையும் பார்க்கிறாள். வீட்டு வேலையும் பார்க்கிறாள். பால் தயிர் வெண்ணெய் முதலிய பொருள்களையும் பார்க்கிறாள். எல்லாவற்றிலும் கவனத்தைச் செலுத்துகிறாள். வாத்சல்ய பாவத்தில் பிள்ளையையும் பார்க்கலாம். பிற பொருளையும் பார்க்கலாம். குற்றம் ஒன்றுமில்லை.

பத்னிபாவத்தில் பர்த்தாவைத் தவிர பிறரைப் பார்க்கப்படாது. கோபிகளுக்குப் பகவான் சன்மானம் அளித்தார். அவர்கள் என்ன சொன்னுலும் அதன் படி நடந்தார். ஆடு

என்றால் ஆடுவார், பாடு என்றால் பாடுவார். கோபிகள் இங்கிதப்படி நடப்பார். கண்ணாடி உடையும் போது அதில் விழும் பிரதிபிம்பமும் உடைந்து போகும், அல்லது தானுக நீங்கி விடும்.

மகாத்மா முக்தாத்மா. தாங்கள் கூறிய வண்ணம் சஞர்தனன் நடப்பதைக் கண்டு அவர்கள் அகத்தில் அகம்பாவம் வந்தது. அகம்பாவம் என்னது? ஏண்டி கிர்த்திகுமாரி! நம் அழகைக் கண்டு அச்சுதன் நம் பின்ஞல் திரிகிறான் என்று ஆணவம் வந்து விட்டது.

" ஆத்மானம் மேநிரே ஸ்திரீணும் " பாகவதம். தங்களைப் பெரிதாய் கருதிக் கொண்டார்கள். முன்னே நிற்கின்ற முகுந்தனை மறந்து தங்கள் அழகை எடை போட ஆரம்பித்தார்கள். எனதழகைப்பாரடி, உனதழகைப்பாரடி என்று ஒருவருக்கொருவர் உரையாடத் துவங்கினார்.

நமக்குச் சமானம் சௌபாக்கிய சாலினி யார்? தேவகன்னிகையா? இல்லை. இராசகன்னிகையா? இல்லை. வனதேவதையா? இல்லை. நாமகளா? இல்லை. பூமகளா? இல்லை. நாககன்னிகையா? இல்லை. இல்லை. இல்லவே இல்லை. இவ்வாறு ஒருத்திக்கு ஒருத்தி உல்லாசமாக உரையாடினார்கள். இம்மாதிரி நினைத்துக் கொண்டிருக்கும் போதே கேசவன் மறைந்தான்.

கேசவனுக்கு- கஸ்ச- அஸ்ச- ஈசஸ்ச- தான் நயதே பிரஸாஸ்தி இதி கேசவ; என்பது இலக்கணம். ஸ்ரீ கிருஷ்ண பகவான் சகல செல்வங்களுக்கும் நிலையம். குரங்காட்டி குரங்கை ஆட்டுவது போல் மும்மூர்த்திகளையும் மூவுலகத்தையும் முகுந்தன் ஆட்டுகிறான். மு-முத்தி; கு புத்தி; இவை இரண்டையும் ஞானிக்கும், அன்பனுக்கும் அளிப்பவன். பரமாத்மா. கிருபை வடிவினன் கேசவன். கோபி நிலைகளைக் கண்டான். ஆணவத்தை அகற்ற எண்ணினான்.

ஆணவம் மனிதனை நரகத்தில் தள்ளும் (நன் மொழிக்களஞ்சியம்) வையகம் மாறுபாடுடையது. இறை-வன் ஒரு படித்தானவன். இன்பவடிவினன். அவனது இன்பத்தில் குறைதல் கூடுதல் ஒருபோதும் இல்லை. ஆக்கல் அளித்தல் அழித்தல் இம்மூன்று நிலையிலும் அவன் நிலை-மாறாது. அவன் நிலைமாறானந்தன். அவன் - இறைவன்.

ஒருமுறை ஒருபக்தன் இறைவனிடத்தில் பிரார்த்தனை செய்தான். என்ன செய்தான்? ஏ பிரபோ! எவ்வளவு சுவையான அல்வா இருந்தாலும் நாளாக நாளாக சுவை குறைந்து விடுகிறதே, அதல்லாமல் மாறியும் விடுகிறது. உமது ஆனந்தத்தில் மாற்றம் வர வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? என்று பிரார்த்தனை செய்தான்.

ஸ்ரீ ஹரி- அன்பனே! எனது ஆனந்தத்தில் சுவை குறைய வேண்டுமானால் இதோ பார், மறைந்து விடுகிறேன் என்று மறைந்து விட்டார். இறைவன் மறைந்ததும் அன்பன் பதறினான். அழுதான், தொழுதான், கண்ணீர் வடித்தான். அதை அறிந்து அச்சுதன் வெளிப்பட்டான். ஹரி வெளிப்-பட்டதும், அன்பன் மகிழ்வுற்றான். ஏ, மதுசூதன! இன்று உனது இன்பம் நிறைந்து விட்டது என்றான். இவ்வின்பம் எங்கிருந்து நிறைந்தது? பதில் -எனது பிரிவால் நிறைந்தது, இறைவன் பிரிவில்லாமல் ஊடலில் கூடல் வராது. ஊடல் = இன்பம். உணவு உண்ணும்போது இடை இடையே ஊறுகாய். துவையல், சட்னி முதலியவை உட்கொள்ளும் பொழுது உணவில் அதிகம் பிரியம் உண்டாகிறது.

அதுபோல் இடை இடையே பிரிவு உண்டாகிறபோது அன்பும் ஆனந்தமும் அதிகம் உண்டாகின்றன. வெயிலின் கொடுமை நிழலில் போகும் போது தான் தெரியும். அது போல் கூடுதலால் வரும் இன்பம், பிரிவால் அதிகரிக்கிறது. இறைவனது இன்பம், எங்கும் நிறைந்தது. எல்லை இல்லது.

அளவில்லது. அழிவில்லது. தேசம், காலம், வஸ்து இம்மூன்றையும் கடந்தது.

இன்பம் ஒன்று தான். அதை நுகர்வோர் அநேகராதலால் இன்பம் மென்மேலும் பெருகுகிறது. எவ்வாறு கங்கை பிரவாகம் (வெள்ளம்) ஒன்றாக இருப்பினும் நீராடுபவர் பலராகையால், அவ்வாறு அநேகமாகக் காணப்படுகிறது. இறைவன் இன்பத்தை நுகர்பவர் கோபிகள். அவர்களுக்கு ஆனந்தம் பொங்கினால், அச்சுதனுக்கும் பொங்கும். நீராம்பல்போல.

நீரளவேயாகுமாம் நீராம்பல் என்பது அவ்வை அருள் வாக்கு. ஆகலின் அவர் முன்னிலையில் அச்சுதன் மறைந்து விட்டான். இறைவன் மறைவதிலும் அன்பிருக்கிறது. நன்மையும் பல இருக்கின்றன.

நண்பன் நெடுநாள் வரவில்லையென்றால் அவன் ஞாபகம் அதிகமாக உண்டாகும். ஒரு அறையில் ஒளிரும் மணியிருந்தது. அங்குள்ளவர் அனைவருக்கும் மணியில் கவனம் இல்லை. யாரோஒருவன் திடீரென அம் மணியைத் துணியை வைத்து மறைத்து விட்டான். ஒளி மறைந்தது. எல்லோருக்கும் அதில் கவனம் திரும்பியது. உடனே மற்றொருவன் அத்துணியை எடுத்து விட்டான். மீளவும் பிரகாசம் வந்தது. அவையிலிருந்த அனைவரும் ஆரவாரமாகப் பார்த்தனர். ஒளியைப் புகழ்ந்தனர்,

இவ்வாறு கோபிகள் அன்பை உலகிற்குத் தெரிவிப்பதற்காகக் கோபாலன் மறைந்தான். இறைவன் திருவுளப்படி அவனது மாயை கோபிகள் உள்ளத்தில் செருக்கை உண்டு பண்ணியது. எனவே அவர்கள் மோகத்தை அடைந்தனர். "தாசாம்தத் சௌபகமதம் வீட்சியமானஞ்ச கேசவ" என்கின்றது பாகவதம். அவர்கள் உள்ளத்தில் எழுந்த

மங்கையைக் கண்ட மாதவன் மறைந்தான் என்பது மேற் கூறிய வாக்கியத்தின் பொருள்.

கவுடிய சம்பிரதாயம் என்று ஒன்று உண்டு. அவர்கள் கருத்து என்ன? அவர்கள் கருத்தாவது கோபிகள் உள்ளேயே பலதரப்பட்ட பாவம். அவர்கள் உள்ளே குழப்பம், கோவர்த்தனன்-எல்லாரையும் போல நம்மை நேசிக்கிறானா? வித்தியாசமாக நினைக்கிறானா? என்று குழம்பிக் கொண்டிருந்தனர் என்பது கௌடிய சம்பிரதாயம். இராதையை மட்டும் அதிகமாக நேசித்தான் என்பர் சிலர். சம்சாரிகள் தன்னைப் போல பகவானையும் எண்ணுவார்கள்.

பகவானிடத்தில் பாரபட்சம் ஒரு போதும் கிடையாது சீவன் எண்ணத்தில் தான். இறைவன் பார்வையில் இல்லை. "ததா திருஷ்டு; சொரூபே அவஸ்தானம்" (யோக சூத்திரம்) யோகத்தில், திருஷ்டா - பார்ப்பவன். நிசவடிவத்தில் நிலைத்திருக்கவேண்டும். சாதனை நிறைந்த சமாதியின் உச்ச நிலை இதுதான். உயர்ந்த நிலை என்பது கருத்து. ஆனால் இது அன்பு மார்க்கத்தில் ஒரு பெரியதடை, உலகத்தில் எல்லாவற்றையும் மறந்து விடவேண்டும், ஆனால் பகவானை மட்டும் மறக்கலாகாது. அவனை மறப்பது நன்றன்று. நன்றல்லா தன்றே மறப்பது நன்று.

தனது வடிவத்தில் இன்பத்தை நுகருபவன் ஞானி, இறைவனிடத்தில் இன்பத்தைத் துய்ப்பவன் பக்தன்.

"ஏவம் பகவத: கிருஷ்ணாத் லப்தமானா மகாத்மந:" (பாகவதம்) ஸ்ரீ கிருஷ்ணன், உண்மையில் பகவான். அவனிடத்தில் செல்வம், அழகு, இனிமை, இன்பம், எல்லாம் இருக்கின்றன. உலகத்தையும் உலகில் உள்ள உயிர்களையும் தன்வயமாக ஈர்க்கும் இயல்பினன், ஆனால் மகாத்மா. மகாத்மாவிற்குப் பொருள் விமுக்தச்சித்த. சித்தத்திலிருந்து விடுதலை பெற்றவன், ஆற்று நீர் கடல் நீரோடு கலந்து

ஒன்றாவது போல, சிவாத்மா பரமாத்மாவோடு கலந்து ஒன்றாவது மகாத்மா. அவர் யாண்டும் இடும்பை இலாதவர். இடும்பை - துன்பம்.

"அந்தர் ஹிதே பகவதி" (பாகவதம்) உள்ளே மறைந்து கொண்டார். மறைந்து கொள்வதற்குப் பொருள் என்னெ? உள்ளேயிருந்து அன்பனுக்கு அருள் புரிவதென்பது. கோவர்த்தனன் மறைந்ததும், கோபிகள் துடிக்கத் துவங்கினர்,

சிந்தாகுலத்தொடு, செடி, கொடி, லதை, வனஸ்பதி, தருக்கள் இவைகளிடத்தில் கேட்க ஆரம்பித்தனர். தருக்களே! தாமோதரனைக் கண்டதுண்டா? மரங்களே! மாதவனைப் பார்த்தீர்களா? செடி கொடிகளே! திருமாலைக் கண்டதுண்டா? என வினவினர். இந்நிலையில் தன்னை மறந்தாள் தலைப்பட்டாள், நங்கை தலைவன்தாளே என்றபடி. (தேவாரம்) சிவத்தன்மை இழந்து திருமால் தன்மையை அடைந்தாள் என்பது கருத்து. மண்ணளந்த மணிவண்ணா! மாயவனே! நின் திருமுகத்தைக் காட்டாயோ, என்று மறுகி மருவி நின்றனர்.

மாதவனை நினைந்து நினைந்து மருவியதால் மங்கையர் மனத்தில் படிந்த மாசு மடிந்தது. மாசு - குற்றம். வளர்பிறை மதியம் போல அவர்கள் உள்ளம் தூய்மையானது. அடியவர் பால் ஹரியைக் கேட்கவேண்டும். அறியாப் பொருளை அறிந்தவர் பால் கேட்டுத் தெரியவேண்டும்.

ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு இறைவனைக் காணவேண்டும் என இச்சை எழுந்தது. யாரிடம் கேட்ப தென்று எண்ணினான். தன்னைப் போல் ஆடம்பரத்தில் வாழும் அடியவர் பால் கேட்க நினைத்தான். இதனால் என்ன தெரிகிறது? ஹரியை தெரியவும் விரும்புகிறான். ஆணவத்தைத் தனக்கு அணிகலமாக்கவும் விழைகிறான். ஆதலின் அவன் ஹரியை இழந்தான்.

ஞானமும் மானமும் வெவ்வேறு பொருள். மானம்-அபிமானம். பகலும் இரவும் போல. இவையிரண்டும் இணை யாதவை. முன்னே மொழிந்தது தெய்வ சம்பத்து. பின்னே மொழிந்தது அசுர சம்பத்து. முறையே அறிவாளிக்கும், அறிவிலிக்கும் உரியவை. இவையிரண்டும் ஓரிடத்தில் இருக்கமாட்டா.

''ஏகமியானுமே தோ தலவார்'' (துளசி இராமாய ணம்) ஒரு உறையுள் இருவாள் இருக்க இயலாதென்பது பொருள். அன்பு இரசத்தைப் பருக வேண்டுமானல் அபி-மானத்தை அறவே விடவேண்டும். அபிமானம் இன்மையால் ஆயர் மாதர் அனைவரும்] யாரிடத்தில் கேட்க வேண்டும் யாரிடத்தில் கேட்க கூடாதென்று தெரியாமல் ஆலமரம், அரசமரம், பனைமரம், அசோகமரம், அத்திமரம் முதலிய தருக்களிடம் கேட்டனர். மேற்கூறிய மரங்களெல்லாம் உயர்ந்த மரங்கள். கண்ணன் தூரத்திலிருந்தாலும் இவை களால் பார்க்க முடியும் என்றெண்ணி அவைகளிடங் கேட் டனர்.

தருக்கள் ஜடம். அவைகளால் பதில் உரைக்க முடி-யாது. இருப்பினும் கண்ணனிடத்தில் உள்ள வேட்கை மிகுதியால் அவைகளிடத்தில் வினவினர். வானளாவிய எல்லா உயிர்களிடத்திலும் விசும்பு போல் அகமும் புறமும் ஒரே படித்தாக இலங்கும் பரம புருஷனைக் கண்டீர்களா? அவன் எங்குள்ளான் என்று அவைகளிடத்தில் வினவினர்கள்.

மனம் கரைந்து வினவியும் மரங்கள் உரையாது இருப்பதைக் கண்டு அம்மம்ம! மரங்களுக்கு இவ்வளவு மமதையா? பதில் கூற கூசுகின்றனவே என்று அங்கிருந்து அகன்று எமுனை நதிக்கரைக்குச் சென்று நதிகளிடம் வினவினர். அவையும் பதில் உரையாதது கண்டு திகைத்து நின்றனர்.

யார் சொல்லுவார் யார் சொல்லார் என்பதை நினையாமல் கேட்டுக் கொண்டே சென்றனர். யாரிடங் கேட்க வேண்டும் என்பதை கோபிகள் மறந்தனர். இது தான் பிரிவின் ஆற்றாமையின் நிலை. பிரிவிற்கு இது ஒரு வடிவம். இன்னது என்று தெரியாத நிலை.

ஒரு முறை நாங்கள் சித்திரக் கூடத்திலிருந்து பஞ்சவடி சென்றோம். கதிரவன் சாய்ந்தான். மாலை வந்தது. மார்க்கம் தெரியவில்லை. எதிரில் யாரைக் கண்டாலும் கேட்கத் தொடங்கினோம். சிறு குழந்தையைக் கண்டாலும் பஞ்சவடி எங்கே என்று கேட்போம். நடப்பவரிடம், நிற்பவரிடம், கேட்டுக் கொண்டே போவோம். எங்களுக்கு இன்பம் வந்து கொண்டே இருக்கும். இது பிரிவினால் உண்டாகும் ஆனந்தம்,

ஒரு சீடன் குருவிடம் சென்று அய்யனே! இறைவனை எய்துவதற்கு எப்படி முயற்சிக்க வேண்டும் என்றான். குரு சிறிது நேரம் மவுனமாயிருந்தார். அவனை அழைத்தார். அவன் வந்தான். அவனை அழைத்து நதிக்கரைக்குச் சென்றார். அவனைமுழுகச் சொன்னார். அவன் முழுகினான். அவர் அவனைத் தண்ணீரில் அமிழ்த்தினார். அய்யோ என அலறினான். இவர் கையை விட்டு விட்டார். மேலே எழுந்தான். அய்யனே! அப்பனே! குருபரா! என்னைக் கொல்லத் துணிந்தீரே, நான் என்ன செய்தேன் என்றான். குரு, மகனே! நீ வினவிய வினாவிற்குத்தான் பதிலளித்தேன் என்றார்.

நீரிலிருந்து கரையேறுவதற்கு எவ்வளவு துடிதுடித்தாயோ! அவ்வளவு துடிப்பு இருந்தால் இறைவனை எளிதில் எய்தலாம் என்றார். கோபிகள் கோபாலனுக்காக முற்றிலும் சிந்தாகுலமானார்கள், மீளவும் கொடி செடிகளிடம் கேட்டனர். கணவனை இழந்த காரிகை கதறி அழுவது போல் அழுதார்கள்,

கண்ணனுக்காக காரிகையர் கானக முழுவதும் கண்ணீர் சிந்தினர். அவர்கள் மனம் அச்சுதனை நினைந்து நினைந்து அவன் மயமாகி விட்டது. நினைப்பவர் மனத்தைக் கோயிலாக் கொண்டவன் என்றபடி. அஃதன்றியும் அவர்-களே அவர்களுக்குள் கிருஷ்ண லீலை கொண்டாடினார்கள், "கிருஷ்ணோஹம் பஸ்யதககதிம் லலிதாமிதி தந்மநா". (பாகவதம்) நான் கிருஷ்ணன். எனது விழியைப் பார். இம்மாதிரி ததிகணத்தம் போட்டு நடனம் ஆடினார்கள். அவர்களில் சிலர் தன் மேலே துகிலை வீசி கோவர்தன மலையைத் ,தாங்குவது போல் அபிநயம் பண்ணினார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான லீலையைச் செய்து நடனம் ஆடினார்கள். எங்ஙனம், வேதாந்த சித்தாந்தத்தின் கண் சிவோகம் பாவனைக்கு அனுபவம் உண்டாகிறதோ அது போல் கோபிகள் கிருஷ்ணோகம் பாவனைக்கு அனுப வம் செய்தார்கள்.

பகவானுடைய நடன அனுபவம் அவர்கள் கண்-ணொளி முன்னே வருகின்றது. அச்சுதனடிக் கமலம் அவர்கள் மனக் கண்ணாடியில் தோன்றுகிறது. கமலக் கண்ணன் அடிக் கமலத்தோடு இராதையின் மலரடியும் தோன்றுகின்றது. இருவருடைய திருவடி அடையாளமும் தென்பட்டன. அதோ அச்சுதன் அடிக்கமலம் காணப்படு-கின்றது. சற்று தள்ளிப் பார்ப்போம் என்று முன்னே சென் றனர். பாதத்தைக் காணோம் என்று மயங்கி விழுந்தனர். இதற்கிடையில் ,இராதைக்கு அந்தரங்கத் தோழி கீர்த்திக் குமாரி என்பவள் அவளும் மயங்கிய நிலையில் நின்றாள். பெண்கள் தமது கணவன் அன்னிய பெண்களோடு உற-வாடுவதைச் சகிக்க மாட்டார்கள். இது பெண்ணின் தன் மையாகும். கண்ணன் இராதையைக் கூட்டிக் கொண்டு கோபிகளை விட்டு தனியே சென்று விட்டார். இதற்குள் இராதை-அய்யனே! ஆனந்த மூர்த்தியே! என்னால் நடக்க

முடியவில்லை என்று தன்னைத் தோளில் தூக்கச் சொன்னாள். இதற்குள் கேசவன் மறைந்து விட்டான். இராதை அழ ஆரம்பித்தாள். கோபிகள் வந்து அவளைத் தேற்றினர்.

கோபிகள் இவ்வாறு நெடுநேரம் தேடியும் காண-வில்லையே என்று கண் கலங்கினர். தேடியதற்குரிய பலன் கிடைக்கவில்லை. எவ்வளவு தூரம் எவ்வளவு நேரம் தேடுவது இது என்ன விந்தை? நாம் வெளியை தேடுகிறோம், அவன் உள்ளே நுழைகிறான். இரவு நேரம். இருட்டு அதிகம். கொடிய மிருகங்கள் திரிகின்ற இடம்.

அவன் எங்கு ஒளிந்திருந்தாலும் இருக்கட்டும். அவனைக் காணுமல் எவ்வளவு துயரமானுலும் சகித்துக் கொள்வோம். ஆனுல் அவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கக் கூடாது என்று எண்ணினர். கோபிகள் இங்ஙனம் எண்ணி வீடு திரும்பினர். எப்பொருள் எங்கு மறைந்ததோ அப்-பொருளை அங்கு தேட வேண்டும். அது தான் முறை. ஒரு கிழவி இல்லத்திலிருந்து துணி தைத்துக் கொண்டிருந்தாள், திடீரென தீபம் அணைந்தது. கையிலிருந்த ஊசி கீழே விழுந்-தது. அதை எடுக்க மிக முயன்றும் ஊசி கிடைக்கவில்லை. நேரம் இரவு. உடனே வீதிக்கு வந்தாள். கம்பத்தடியில் விளக்கொளி இருந்தது. அங்கே தேடினுள். வழிப்போக்கர்-பாட்டி, என்ன தேடுகிறாய்? மாது - அப்பா - வீட்டில் ஊசியைப் போட்டு விட்டேன். அங்கு ஒளியில்லாததால் வெளியில் தேடுகிறேன் என்றாள். அவள் மதி நலத்தை எள்ளி நகைத்தனர்.

கண்ணன் எமுனை கரையில் மறைந்தான். பாவம் இவர்களோ மடந்தையர். வனத்தில் என் செய்வர்? கோபிகள் நிலையைப் பாகவதம் கூறுகிறது. தன்மநஸ்கா: கோபிகள் மனம் அவர்கள் வசமில்லை. ததாகாரம் மனம், எங்கே போயிற்று? பகவானது வடிவம் ஆயிற்று. அவர்கள் சியாமனைப் பாடத்துவங்கினர். அவர்கள் உள்ளம் இறைவ-

னிடத்தில் ஒடுங்கிவிட்டது. உள்ளத்தை அக்கள்ள மாயன் கவர்ந்து கொண்டான். அவர்களுக்குத் தன்னையும் தெரிய வில்லை, பிறரையும் தெரியவில்லை. அந்த நிலையில் இருக்கி-றார்கள். சுவசனம் - சொந்தசனம். உறவினர்களும் தெரி-யவில்லை. கோபிகளுக்கு அருத்தம் கோபனசீலம். தனது அன்பை மறைத்து வைப்பவர்கள். அன்பு வீதியில் விற்கிற பொருளல்ல. பின்னை? இதயத்தில் இருக்கப்பெற்ற ஒப்பற்ற ஒள்ளியமணி.

அந்த நட்பு உள்ளத்தில் மிளிரும் கருப்பொருள், வாய் வழியாக வெளியே வருமானுல் பலர் செவிகளில் பட்டு வாயு முலமாக அணைந்து விடும், அல்லது குறைந்து விடும். நாலுபேர் வாயில் விழுந்தவனும் நாலுபேர் செவிகளில் விழுந்த சொல்லும் முறையாக அழிந்து போவான், அழிந்து போகும். காதல் வெண்ணெயைப் பார்க்கினும் மென்மை யானது. அது மக்கள் பார்வையைப் பொறுத்துக் கொள்ளாது.

கோபிகள் அன்பு வடிவினர். கோபிகள் அன்பு மய-மாக இருக்கிறார்கள். ஆகலின் தனது கேண்மையை வெளிப்படுத்துவதில்லை, மனத்தில் மறைத்து வைத்திருந்-தார்கள். பகவான் கோகுலத்தில் மறைந்து வாழ வந்திருக்-கிறார். இறைவனுக இருக்க வேண்டுமானுல் மதுராபுரியில் இருந்திருப்பார். தன்னைக் கிருஷ்ணனென்று வெளிப்படுத்-தினுல் நாளை வருகின்ற கம்சன் இன்றே வந்து விடுவான். அதற்காக அம்மாதர்கள் நட்பை மறைத்து வைத்தி-ருந்தார்கள்.

குருநாதன் ஒன்றை மறைக்க விரும்புகிறார். அதை மாணவன் வெளிப்படுத்தினுல் அவனை உத்தமமாணவ-னென்று எவ்வாறு உரைக்க இயலும்? ஸ்ரீ கிருஷ்ணன் கோகுலத்தில் மறைவதற்காக வந்திருக்கிறான். வந்த

வாசுதேவன் - நான் இறைவனல்லன், நான் மனிதன் என்கிறான்.

கோபிகள்-இவன் நந்தகுமாரனல்லன் என்கிறார்கள். அவர்களில் ஒருத்தி, ஏண்டி கீர்த்திகுமாரி! இவன் சிறந்த மனிதனும் அல்லன். மற்றொருத்தி இவன் திருடன் என்றாள். வேறொருத்தி - ஆமாடி, என் வீட்டில் பால், தயிர், வெண்ணெய், நெய். இவைகளைத் திருடினுன் என்றாள். வேதாந்தத்தில் இவை பாவம் எனப்படுகின்றன. இல்லத்தில் வெண்ணெய், உள்ளத்தில் பாவம். இவன் நண்பனுமல்லன், அன்பனுமல்லன். இவன் நம்மை கேலி கிண்டல் செய்கிறான். இங்ஙனம் இருக்க ஈசுவரன் எங்ஙனமாவான்?

( அஹேரிவகதி : ப்ரேம்ண :

சுபாவ குடிலா பவேத் )

காதல் பாம்பின் கதிக்குச் சமானம். கதி - செல்லுதல். சிறந்த மனிதர்கள் செல்லும் போது தரையைப் பார்த்துச் செல்வார்கள். இவன் முன்னும் பின்னும் அக்கம் பக்கம் மேல் கீழ் எங்கும் பார்த்துக் கொண்டே செல்கிறான். கண்ணைச் சிமிட்டிக் கொண்டு செல்கிறான்.காதல் நெறியும் மாறுபட்டது. சமிபம் அழைத்தால் தூரம் செல்வாள். தூரம் செல் என்றால் கிட்டே வருவாள்,

பேச ஆரம்பித்தால் மவுனம் ஆவர். மவுனம் காணப்படுமானால் பேச எண்ணம் தோன்றும். இது உலகில் உள்ள காதல் நெறி. இந்நெறி ஈண்டில்லை.

இறைவனது இறைநிலையை மாயவன் மறைத்து வைத்திருக்கிறான், கோபிகள் கண்ணனின் கேண்மையை ஒளித்து வைத்திருந்ததால் அவர்கள் அந்தரங்க கோபிகளானுர்கள். கோபிகள் என்னும் சொல்லுக்கு இலக்கணம் - கோபி : இந்திரியை : பிபதி கிருஷ்ணரசம் இதிகோபி. கோ - இந்திரியம். தங்கள் பொறிகளால் கிருஷ்ண இரசா-

மிருதத்தைப் பருகுவதால். ஆயர்குலமாதர்களுக்குக் கோபி கள் என்று பெயர். அவர்கள் அழகிய கண்களால் மாயவன் மதுர இரசத்தை மாந்திஞர்கள். மாந்துதல் - பருகுதல். சியாமசுந்தரன் வம்சி (புல்லாங்குழல்) தொனி அவர்களால் சுவைக்கப்பட்டது, வம்சி ரசாமிருதம் பருகப் பருக அவர்கள் அகமும் முகமும் அலர்ந்து மலர்ந்தன.

அவர்கள் உடல், உறுப்புக்கள் எல்லாம் மாயவனிடம் மாய்ந்தன. எவருடைய மநத்தில் இறைவன் அருவமோ, அவர்கள் மதத்தில், அருவத்தைப் பார்க்கவும் இயலாது, தீண்டவும் முடியாது. அவர்கள் நிராகார விருத்தியில் நிலேத்து இருப்பார்கள். அல்லது தனது சொரூபத்தில் இருப்பார்கள். தே வந்நியா. அவர்கள் வழிபடுவதற்குரி-யவர்கள். நாத்திகர் எவரோ. அவர் நற்குணங்களேத் தேடட்டும். வாழ்க்கையை மாற்றி அமைக்கட்டும். ஆனுல் அன்புமார்க்கம் இத்தனேக்கும் வேறானது. பக்திமார்க்கம் வாளின் நுனியில் நடப்பது. "நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" (திருவாசகம்) இறைநிலே நுண்ணிய மதியினர் அடைதற்குரியது. தியானம் செய்பவர் மனத்தில் இறைவன் வருகிறான். அவர் அவனே மனக்கண் ணுல் பார்க்கிறார்கள். அவனே-ஈசனே. ஞானிகள் ஞானப் பார்வையால் பார்க்கிறார்கள். இருப்பினும் அன்பர்கள் இன்ப நிலேயமாகிய இறைவனே இந்த ஊனக் கண்ணுல் பார்க்கிறார்கள்.

அவதாரத்தின் மகிமையும் இதுதான். இறைவனே இருகண்களால் கண்டு களிப்பது. பரமனது பாவன உருவத்தைப்பார்த்து இன்ப இரசத்தை நிறையச் சுவைப்பது தான். ஈசுவரன் நிராகாரன். அருவன், சிவன் வெவ்வேறு. செகத்து பிரகிருதியின் காரியம், இவ்வாறு எண்ணுவது அவதார சித்தாந்தம் அல்ல. அவதார சித்தாந்தத்தில் இறைவனேத் தவிர ஒரு பொருளும் இல்லே. இறைவனே

சிவனுகவும், மாயையாகவும், மாயா காரிய உலகமாகவும் காணப்படுகிறான். எல்லா வடிவமும் இறைவனேயாவான்.

ஞாலமேயான நாரண நின்னை நான் கண்டு உய்வ-தென்னாளோ (சமயோசிதமாலை) எப்பொழுது பக்தனுடைய இதயத்தில் அன்பு பெருகுகிறதோ அப்பொழுது பகவான் தனது வடிவத்தை வெளிப்படுத்துகிறார்' இவ்வாறு யார் முன்னிலையில் தோன்றினரோ அவர்கள் கோபிகள்.

கோபிகள் வழி நல்ல வழி. மனக்கட்டுப்பாடுடையது. மனம் போன போக்கில் திரிபவர்கள் அல்லர். பெரிய வீட்டுப் பெண்ணை எவ்வாறு அடக்கமாக வைத்திருப்பார்களோ அவ்வாறு கோபிகளும் தங்கள் பொறிகளை அடக்கி இருந்தார்கள்.

(சந்தியஜ்ய சர்வ விஷயான் தவபாதமூலம்) சார்ங்க பாணே! சகல விஷயங்களைத் துறந்து உனது சேவடியை சேவிக்க வந்தோம் அய்யா! என்றார்கள். ''ததர்த்தவிநி வர்த்தித சர்வகாமா:'' (பாகவதம்) இதை சுகதேவர் ஒப்புக் கொண்டார். மாதர்கள் மாதவனுக்காக மானத்தைத் துறந்தார்கள். இச்சை அனைத்தையும் மிச்சமில்லாமல் தியா-கஞ் செய்தனர். சஞர்தனனின் தாளில் விழுந்தனர். இவ்வாறு இருந்த கோபிகள் இன்று, அவனைப் பிரிந்து நின்றனர்.

லலிதா-சக்ரபாணி நம்மை வெறுத்து இருட்டில் ஒளிந்திருக்கிறான். அவன் இல்லாமல் நாம் எவ்வாறு வாழ்வது என்றாள். கோபிகள் அடக்கமுடையவர்களாக இருப்பார்களானுல் ஏன் புலம்புகிறார்கள்?

மகளிர்களுக்கு மன அடக்கம் வேண்டும். அஃதில் லாமையால் வனராஜிகளோடு வருந்தினுர்கள். அம்மங்-கையர் மனம் அவர்கள் வசமல்ல. பின்னே? கண்ணன் வச மாயது. அவன் பிரிவால் அவர்கள் மனம் உடைந்து விட்டது. நாம் இறந்து விடுவோமோ என்ற பயமில்லை. பிராணன்

னும் நாம் சியாமனுடைய திருவடியைச் சேருவோம் என்று தெரியும். ஆண்டு அவனை அடைந்து விடுவோம் என்று எண்ணம் இருந்தது.

கோபிகள் வீட்டிலுள்ள மாது ஒருத்தி வயது வந்த பேத்தியை நோக்கி பேத்தி! மாதவன் வனத்திலிருந்து வரும் நேரம் மாடிக்குப் போகாதே என்றாள். பேத்தி! பாட்டி! மனம் என் வயமில்லை, அவனைக் காணுமல் உறங்கேனே என்குதே, என் செய்வேன் என்றாள் பேத்தி.

கோபிகளுக்குத் தமது மரணத்தைப் பற்றியோ தமது துன்பத்தைப் பற்றியோ கவலை இல்லை. பிறகு? நாம் கோபாலன் பிரிவால் இறந்து போனுல் இம் மரணம் அவனுக்குத் தெரியாமல் இருக்காது, தெரிந்தால் அவன் துன்புறுவான் என்று ஆவி பிரியேனே என்குதே என்றாள்.

மேலும் முராரிக்கு அபகீர்த்தியுண்டாகும். மண்ண-ளந்த மாயவனை உலகம் பழிக்கும், மாயவனுல் மாதர்கள் ஆவி துறந்தார்கள் என்று மாநிலம் நிந்திக்கும், இப்பழியில் இருந்து பரந்தாமனைக் காப்பதற்கு ஆவியோடு போராடிக் கொண்டிருக்றோம் என்றார்கள்.

மழையால் குளம் பெருகிக் கொண்டே போனுல் உடைவதற்கு வாய்ப்பு உண்டு. சுற்றி இருக்கும் குக்கிரா-மங்கள் அழிந்து போகும். நாம் அதை உடைத்து விட்டால் கிராமம் பிழைத்து விடும். அது போல் இதயத்தில் இறைவன் பிரிவால் எழும் கவலை என்கின்ற நீர் பெருகிக் கொண்டே போனுல் இதயம் உடைந்து போகும். உயிர்ச் சேதம் உண்டாகும். அதைக் களைவதற்கு உபாயம் அழ வேண்டும். அல்லது சிரிக்க வேண்டும். இவ்விரு உபாயங் களில் சிரிப்பே சிறந்தது. அழுகை அறிவிலிக்கும் நகை நன் மக்களுக்கும் ஆம்.

இடுக்கண் வருங்கால் நகுக. (திருக்குறள்) துன்பம் வந்துழி நகுக. சிரிக்க என்பது குறளின் பொருள். மாதர்கள் மாயனுக்காக அழுதார்கள். அழுகையால் தங்கள் இதயத்-தைக் காத்துக் கொண்டார்கள். நாம் இறந்தால் நாரணனும் இறந்து விடுவான் என்றெண்ணி அவனையும் காத்துக் கொண்டார்கள்.

கோபிகீதத்தின் விருத்தத்திற்குப் பெயர் கனகமஞ்சரி கனகம்-ஊமத்தம். அது ஒரு செடி. அதன் இலை தங்கநிறம் அதனால் கனக தாரையெனும் பெயர்ப் பெற்றது. இவ்விருத்-தம் கருணை இரசம் உடையது. ஈண்டு ஒரு கேள்வி, கோபிகள் பகவானிடத்தில் வியாகுலம் அடைந்தார்கள். இந்நிலையில் சுலோகங்களை முறையாக எப்படிப் பாடினார்கள்? இரண்டாவது கேள்வி - கோபிகள் பலர் அங்ஙனம் இருப்ப பத்தொன்பது மட்டும் எங்ஙனம் பாடினர்? மூன்றாவது கேள்வி கிரமங்கள் இருக்கின்ற-னவா? இல்லையா? பதில். கோபிகள் மாதவன் மையலில் விழுந்து படிக்கின்றார்கள். அன்பின் கதிக்குப் பெயர் ஆட்டம். அன்பர்கள் படிப்பதற்குப் பெயர் கீதம். சங்கீதம். விரஜபூமியிலுள்ள குழந்தைகளுக்கு வெளியிலிருந்து வந்து கானவித்தைக் கற்பிக்கிறதில்லை.

அக்குழந்தைகளுக்கு ஆடலும், பாடலும், தானாக வரும். அப்பூமியின் பெருமை இது. இப்பொழுதும் கூட கண்கூடாகக் காணலாம். விரஜபாலர்கள் இப்போதும் டுமுக்கு டுமுக்கு வென்று இருகைகளையும் வைத்துக்-கொண்டு ஆடுகின்றனர், பாடுகின்றனர்.

இந்த நிருத்தியத்தையும் இப்பாடல்களையும் யார் கற்பித்துக் கொடுத்தார்? உள்ளிருக்கும் கள்ளமாயன்தான். இதயத்தில் சிநேகம் வந்ததும் உலகம் நாட்டியமயமாகவும், சங்கீதமயமாகவும் ஆகிவிடுகின்றன. கோபிகள் பிங்கல முனிவரிடம் விருத்தம் படிக்கவோ, துன்புரு நாரதரிடம்

சங்கீதம் படிக்கவோ இல்லை. அவர்கள் உள்ளத்தில் பிறவியி-லேயே உதித்த கிருஷ்ண பிரேம் கவிதையானது. கவிதையாகி வெளிப்பட்டது. பல பேர்கள் கூடி படிக்கும் போது ஒரே விருத்தமாக ஆகிவிடும். எண்ணம் ஒரே மாதிரி இருந்தால் எல்லோரும் ஒரே மாதிரி பாடமுடியம். கோபி கோபாலர்களுக்கு பாலமுகுந்தன் மேலானதெய்வம். கோபி-களுக்குக் குலதெய்வமும் பாலமுகுந்தன்தான்.

எல்லோரும் கோவிந்தனைக் காணுமல் ஆகுலம் அடைந்தார்கள். ஆகுலம் - கவலை கூடுகிறபோது எல்லாரு-டைய எண்ணம் வேறுபட்டிருந்தாலும், பிரிகிறபோது ஒன்று பட்டு தான் இருக்கும், எல்லார்க்கும் மதனமோகனன் வெளிப்படட்டும் என்பது தான் கருத்து. அவன் பார்வையால் நம் சந்தாபம் தணியட்டும் என்று எல்லாருக்கும் எண்ண்ம் இருப்பதால் அவர் சுவரமும் பாடலும் ஒன்று பட்டு இருந்தன. எல்லாருக்கும் ஒரே மாதிரி அமைந்தன,

வல்லபஆசாரியார் மதத்திலும் கோபிகள் பத்தொன் பது விதம் தான். ஆதலின் சுலோகங்கள் பத்தொன்பது என் கின்றார் எனவே சுலோகங்கள் பத்தொன்பது பொருந்துமா என்று கேட்பது பொருந்நாது.

இதைப் பற்றி விவாதம் பண்ண வேண்டியதில்லை என்கின்றார் வல்லபஆசாரியார். கோபிகள் தனித்தனியாக இருப்பதால் விருத்தங்கள் பொருந்துமா?வென்றும் கேட்க வேண்டியதில்லை என்கின்றார் ஸ்ரீ தரசுவாமிகள்.

எமுனைக்கரை. நவமணிகள் போன்ற மணல். நிறை மதிகதிர்கள் நிறைந்த பௌர்ணமி இரவு. கலகலவென்று வெள்ளம் போய்க் கொண்டிருக்கிறது. கரை முடிவடைந்ததும் வனம் தொடர்கின்றது. இவ்வெண்ணிலாவில் எல்லா சிருஷ்டியும் நீராடி முழுகியெழுகின்றது. முல்லை, மல்லிகை' சம்பங்கி, ரோஜா, தாமரை, சிவந்தி முதலிய மலர்களில் உள்ள மணத்தை வாரி எடுத்துக் கொண்டு எமுனை நதியில் நனைந்து காற்று வீசுகின்றது.

இந்நிலையில் உள்ள இனிய வனத்தில் ஆயிரம் ஆயிரம் கோபி சமுதாயம் கோபாலனைக் கூவி அழைக்கிறது.

கோபிகீதத்தின் முன்னுரை முற்றிற்று.





ஸ்ரீமத் பாகவத மகாபுராணத்தின் கோபி கீதம்.
கோபிகள் கூறுகிறார்கள்.

## சுலோகம் 1

ஜயதிதே அதிகம் ஜன்மநா விரஜ:

சிரயத இந்திரா (கிருஷ்ண) சஸ்வதத்ரஹி. தயித திருஸ்யதாம் திட்சு தாவகா

துவயி திருதாசவ: துவாம் விச்சின்வதே பொ.ள். கோப்ய ஊச்சு:- கோபிகள் கூறுகிறார்கள், கோபிகள் அடக்கம் உடையவர்கள். இருப்பினும் தனது வேதனையை வெளிப்படுத்துகிறார்கள். ஏன்? தனது உயிரைக் காப்பதற் காக காவாக்கால், கண்ணன் வருந்துவான் என்று தனது மனநிலையை வெளிப்படுத்துகிறார்கள். தயித! அருள் பாலிக்கும் அண்ணலே! அன்பின் வடிவமே! எங்கள் ஆருயிர் தோழனே! என்று ஆயர் குல மாதர்கள் கூறுகின்றனர். தயை, அருள், கிருபை, ஈகை, இரக்கம் என்னும் பொருள் பட வரும். தயை என்பது கருமத்தையும், தயித என்பது கர்த்தாவையும் குறித்து வரும். பிறர் கண்ணில் கண்ணீர் வந்தால் தன் கண்ணிலும் கண்ணீர் வர வேண்டும், அப்படிப் பட்டவன் தயிதனுவான். இரக்கம் உடையவன் என்று பெயர்.

தேவிரஜ: ஜயதி. நினது விரஜபூமி விஜயம் அடைகி-றது. வெற்றிக் கொள்கிறது. மாதவா! மணிவண்ணு! இம் மண்ணில் நீ என்று பிறந்தாயோ அன்று முதல் இவ்விரஜ பூமி பெருமை அடைகிறது. தவ ஜன்மநா-உனது பிறவி-யால் அதிகம் எழில் காணப்படுகிறது. அழகு பெறுவதற்குக் காரணம்? அது உனது பூமி. உண்மையாக அப்பூமி

எல்லாரையும் வெற்றிக் கொள்கிறது. விரஜபூமி யாரை வெற்றிக் கொண்டது? வைஷ்ணவ சமயத்தில் மேலான இடம் வைகுண்டம். நாராயணன் என்பது பொருள். "திருஸ்யதேது அக்கிரியா புத்தியா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்ம தர்சிபி:" க.உ. ஸூக்ஷ்ம தர்சிபி: தத்வ ஞானிகளால் அக்கிரியா புத்தியா - கூர்மையான மதியினால் ஆனந்த நிலையமாகிய ஆன்மாவை அடைகிறார்கள் என்பது பொருள்.

ஆதவன் ஒளி அவனி முழுவதிலும் படுகிறது. ஆனால் அவ்வொளி சூரியகாந்த மணியில் பட்டதும் அதன் அண்மையில் உள்ள பொருளை எரிக்கின்றது. அம்மாதிரி பரமாத்மா எங்கும் நிறைந்திருக்கிறார். இருப்பினும் தூய்மையான உள்ளத்தில் அவரனுபவம் உண்டாகிறது, எல்லா மகிமை வாய்ந்ததும் எழில் நிறைந்ததுமான வைகுண்டத்தையும் இவ்விரஜபூமி வென்றது. ("திரிபாதஸ்ய அமிருதம் திவி") சுருதி. மூன்று நிலைக்கும் மேல்பட்டது வைகுண்டம். மூன்று நிலையாவது- உருவம், அருவம், அருஉருவம். அந்நிலையில் உள்ள வைகுண்டத்தை இவ்விரஜபூமி வென்று விட்டது. விஜயங் கொண்டது என்று கோபிகள் கூறுகிறார்கள்.

மேலும் வைகுண்டத்தைப் பார்க்கிலும் விரஜபூமி எவ்வாறு சிறந்தது? வைகுண்டத்தில் நாராயணனுக்கு ஜயந்தி கொண்டாடப்படுகிறதா? பிறவாத இறவாத பெருமானுக்கு ஆண்டுவிழா நடந்ததுண்டா? நடக்கிறதா? விரஜபூமியைப் போல ஜென்ம ஜெயந்தி, காது குத்துதல், முடி இறக்குதல் முதலிய உத்சவம் வைகுண்டத்தில் எங்கே நடக்கிறது?

நிற்குண விஷயத்தில் உத்தவரிடத்தில் கோபிகள் கூறியதாவது, உத்தவரே! "நிற்குண பிரம்மம் எந்த ஊரில் வசிக்கிறது என்று வினவினர். (நிற்குணபிரம கௌநு தேச கோவாசி)" ஹிந்தி, எங்களுக்கு நன்றாகத் தெரியும்.

உத்தவர் - என்ன தெரியும்? கோபிகள் - விரஜபூமியில் நந்தகோபன் பவனத்தில் புரட்டாசி மாதம் அஷ்டமி இரவில் நவமி காலையில் பகவானுக்கு ஜென்மம் ஆனது என்று தெரியும். அவ்வாறு வைகுண்டத்தில் விழாக்கள் நடத்த முடியுமா? நாராயணன் எப்போது பிறந்தான் என்று தெரியுமா? யாவராலும் சொல்ல முடியுமா? ஒருமுறை திருமகள் திருமாலிடத்தில் பெருமால் கொண்டு அய்யனே! எனது திருமணத் திதியைக் கொண்டாட வேண்டும் என வேண்டினாள். ஸ்ரீநிவாசன் + மகாதேவன் தங்கையே! நாம் இருவரும் பழமையான தம்பதி, அங்ஙனம் இருக்க விவாகத்திதி எங்ஙனம் கொண்டாட முடியும் என்றார். இப்பதில் இந்திராவிற்குப் பிடிக்கவில்லை. இந்திரா = லெட்சுமி. அவள் மனம் சோர்ந்து இருந்தாள்.

இவ்வாறு இருந்த கமலாயை நோக்கி ரிஷிகேசன் - கமலே! வருந்தற்க இதோ விழாவிற்கு ஏற்பாடு செய்கிறேன் என்றார். கமலா = லெட்சுமி. அசுரர்களுக்கும் அமரர்களுக்கும் போர் நடந்தது. அமரர்களை அசுரர்கள் வென்றனர். அமரர்கள் - அயனைக் கூட்டிக் கொண்டு வைகுண்டம் சென்று ஹரியை வேண்டினர். ஹரி - அயனே! நீங்கள் அவுணர்களோடு ஒப்பந்தஞ் செய்துப்பார்க் கடலைக் கடையுங்கள் என்றார்.

வானவரையும், தானவரையும் நிமித்தமாகக் கொண்டு கடலைக் கடையச் சொன்னார். பகவான் தானாகவே சமுத்திரத்தைக் கடைந்தார். தாமே ஆமை வடிவத்தை எடுத்தார். தாமே மந்திரமலையைத் தாங்கினார். அவரே வானவராகவும், தானவராகவும் ஆகி இரு மருங்கிலும் நின்று வாசுகியை இழுத்தார். இவ்வாறு கடைகிற போது மகாலெட்சுமியை அழைத்து கடலரசனுக்கு மகளாகப் பிறக்கச் சொன்னார். அவள் அவ்வாறு போய் மறைந்தாள். கடலில் இருந்து, காமதேனு, சிறந்த குதிரை. கற்பகத்தரு,

சிந்தாமணி முதலிய பொருள்கள் தோன்றின. அவைகளோடு அலைமகளும் பிறந்தாள். பிறகு திருமண விழா நடந்தது. ஆனாலும், இது உண்மையான விவாகம் அல்ல.

விரஜபூமியில் கண்ணன் காலணி இல்லாமல் நடக்கிறான். புழுதியில் உருளுகிறான். மடியில் விளையாடுகிறான். தாய் தனப்பாலை ஊட்டுகிறாள். நண்பர்கள் கோவிந்தனோடு கொஞ்சிக் குலாவி விளையாடுகிறார்கள். சண்டை இடுகிறார்கள். இவ் இன்பம் அனைத்தும் வைகுண்டத்தில் கிடைக்குமா? கிடையாது தானே. வைகுண்டத்தில் மலரவன் கூட மாலுடைய மலரடியைத் தொட அஞ்சுவான். தனது நான்கு முகுடங்களால் நாரணன் பாத பீடத்தை மட்டும் வணங்கி தன் ஊருக்குத் திரும்புவான். மலரவன், இந்திரன், அமரர் முதலியோர் அலைமகளை வணங்குவர். கமலாயை வணங்குவதற்குக்காரணம், அவள்தயவு நமக்குவேண்டும்என்றுதான். மேலும். பொருள், அருள், அழகு, கல்வி, தியாகம். யோகம், பக்தி, முக்தி, எல்லாம் அவள் அருளால் வரும். ஆகையால் அவளை அனைவரும் தொழுவர். அவளைத் தொழாதார் உலகில் ஒருவருமிலர். அத்தகையத் திருமகள் யாருடைய மலரடியை மனம் குளிர சேவிக்கின்றாளோ, அந்த நாராயணன் விரஜபூமியில் வந்து விளையாடுகிறார். இதனால் இப்பூமி வைகுண்டத்தை வென்று விட்டது.

வைகுண்டம் ஸ்ரீயைப் பற்றி இருக்கிறது, லெட்சுமியோ விரஜபூமியைப் பற்றி இருக்கிறாள். வைகுண்டத்தில் திருமகள் தலைவி, வைகுண்டவாசிகள் கமலயைப் பற்றுகின்றனர். அவளுக்குப் பணிபுரிகிறார்கள். இங்கு அவள் தானாக சேவை செய்கிறாள். இங்கு (விரஜ பூமியில்) அன்னை போல் கோபிகளுக்குச் சேவை புரிகிறாள். சில காலமா? இல்லை "சஸ்வத்,, நிரந்தரம். பணிசெய்கிறாள் என்பது குறிப்பு. "ரமாகிரீடம் அபூத் நிருபா" என்பது பாகவதம். விரஜபூமி அச்சுதன் பிறந்த நாள் முதல்

கமலேக்கு விளையாட்டு ஸ்தலமாகி விட்டது. அவள் மலரில் மணமாகவும், பூமியில் கந்தமாகவும் வனராஜிகளில் எழலா கவும் வாசம் பண்ணத் தொடங்கினுள். ''பத்மாகர சுகந்தி நா'' பாகவதம். அந்த பத்மாவின் கரத்தினுல் ஒவ்வொரு மலர்களிலும் மணம் வீசத்தொடங்கியது. பத்மா - திருமகள். மரங்களையும், கொம்புகளையும் விரஜபூமியில் உள்ள அணு, அணுக்களையும் அலங்காரம் பண்ணத் தொடங்கினுள். அவள் ஒவ்வொரு புல்லேயும், இலேயையும், மலரையும் தானுகவே அலங்கரிக்கிறாள். லெட்சுமி இவ்வாறு ஏன் அலங்கரிக்கிறாள்? நமது சுவாமி இங்கு வந்து இன்பத்தை நுகரட்டும் என்று தான்.

கோபிகள் - தமது இதயத்தில் இருக்கும் சியாம சுந்தரனிடங் கூறுவதாவது- (திருஸ்யதாம் மணிவண்ணு! இப்பூமியைப் பார். கண்ணன் - கோபிகளே! எனக்கு விரஜ பூமியைக் காண்பிக்க வந்தீர்களா? காலேயும் மாலேயும் நான் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறேன் என்ருன். மீண்டும் விரஜபூமியையும் அதன் வனப்பையும் நாள்தோறும் காண்கிறேன். அப்பூமியைக் கண்டு களிக்கிறேன் என்ருன்.

திருஸ்யதாம் - கண்கூடாகக் காண்பாயாக. மாயவா! புலனுக்கு வெளிப்படுவாயாக. எங்கள் முன்னிலேயில்' ஓடி வருவாயாக. திருஸ்யதாம் - நாங்கள் உனக்காக இரவில் வனவனமாகத் திரிகிறோம். எங்களேப் பார். கோவிந்தா! வீரனே! உனக்கு ஈரமில்லேயா? என்று கோபிகள் கூறி ஞர்கள்.

தாவகா:- உனது பக்தர்கள் நாங்கள், துவயி திருதா ஸவ:- எங்கள் (ஆவியை) பிராணனே உனக்கு அர்ப்பணித்து இருக்கிறோம். துவாம் விசின்வதே- உன்னேத் தேடுகிறோம், நாங்கள் பக்தர்கள் இல்லாமல் இருந்தால் தரிசனம் கொடுக்க வேண்டாம். அதனுல் குற்றமில்லே. ஆனுல்

நாங்கள் நின்னுடைய தாசிகள். உன்னிடத்தில் எங்களுடைய பிராணனை வைத்திருக்கிறோம். எங்கள் ஆவி உன்பால் மேவி இருக்கிறது. எனவே உன்னை, நாடுகிறோம் என்ன விந்தை? வைகுண்டத்தில் எளிதில் கிடைக்கின்றாய். உனது தரிசனமும் எளிதில் கிடைக்கிறது. இங்கு கிடைப்பது அரிதாய் இருக்கிறது. என்ன புதுமை? துவயி திருதாஸவ: துவாம் விசின்வதே. எவன் ஒருவன் தனது வாழ்வையும், பிராணனையும், உடைமைகளையும், நின்பால் அர்ப்பணஞ் செய்திருக்கிறானோ, அவனுக்கு நீ கிடைக்கவில்லை. உனது தரிசனமும் கிடைக்கவில்லை என்றால் உன் பக்தி மார்க்கத்தில் யார் செல்வார்? தாமோதரா! நீ இங்கு வந்தது எதற்காக? மக்களைப் பக்தி மார்க்கத்தில் ஈர்க்கத் தானே? ஆனால் உன்னுடைய செயலைப் பார்க்கும் போது அன்பு மார்க்கம் அழிந்து விடுமோ என அஞ்சப்படுகிறது. அவ்வாறு செய்யற்க கோபாலா!

உன்னையே அடைக்கலமாக வந்திருக்கிறோம். மாதவா! உன்னை அன்றி உறுதுணை உலகில் ஒருவருண்டோ? உன்னிடத்தில் எங்கள் பிராணன் வசிக்கின்றது. சார்ங்கப்பாணே! நீ மறைந்தால் நாங்கள் எங்ஙனம் வாழ்வது? நீரில்லாமல் மீன் எவ்வாறு வாழ இயலும்.

கோகுல நகரத்தின் அன்பு விலட்சணம். வழிகள் பல. அறவழியில் தருமமார்க்கம் ஒன்று. தருமமார்க்கத்தில் தருமத்தைச் செய்யவேண்டும். செய்பவன் அதிகாரி. கடமையை முன் வைத்து வினைகளைச் செய்யவேண்டும். தருமத்தில் விதிபிரதானம். கடன், கடமை கண்ணியம், கட்டுப்பாடு என்பது ஆன்றோர் வாக்கு. "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்றார் ஞானசம்பந்தர்.

பக்தி மார்க்கத்கில் பணி முக்கியம். முறையோடு வினைகளைச் செய்தோமானால் பலன் அவசியம் கைகூடும்,

யோகமார்க்கம். யோகமார்க்கத்தில் எட்டு விதமான அங்கங்களோடு பயிற்சி செய்ய வேண்டும். அவை - 1. இயமம் 2. நியமம் 3. ஆசனம் 4. பிராணாயாமம் 5. பிரத்யாகாரம் 6. தாரணை 7. தியானம் 8. சமாதி.

இயமத்திற்கு ஐந்து உறுப்புக்கள் உள்ளன. 1. அகிமிசை 2. சத்தியம் 3. அஸ்தேயம் 4. பிரஹ்மச்சரியம் 5. அபரிகிரகம். முக்கரணங்களால் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தல். சத்தியம் - வாய்மெய், வாயில் மெய். வாயால் பொய் பேசாதிருத்தல். உள்மெய் உள்ளத்தில் மெய் ஒருபோதும் பொய் உள்ளாதிருத்தல் உள்ளம்-மனம். மனத்தால் பொய்யை நினையாமல் இருத்தல். மெய்மை மெய்-காயம் அதில் உண்மை. காயத்தால் பொய்க் காரியத்தைச் செய்யாதிருத்தல்.

அஸ்தேயம்- ஸ்தேயம் - திருடுதல், அஸ்தேயம் - திருடாதிருத்தல். பிரஹ்மச்சரியம் — மங்கையர் உறவு இல்லாதிருத்தல். அபரிகிரகம்- பரிகிரகம் - சேமித்து வைப்பது. அபரிகிரகம் - நாளை வேண்டும் என சேமித்து வையாதிருத்தல். மற்றவைகளுக்குப் பொருள் கூறின் விரியும் என்றஞ்சி விடுத்தனம். இவ்வாறு யோகமார்க்கத்தில் உள்ள முறைகளை உள்ளவாறு ஒழுகி வந்தால் சமாதி கூடும். மனக்கட்டுப்பாடிருந்தால் குடும்பக்கட்டுப்பாடு தேவையில்லை.

ஞானமார்க்கம் - நிஜ சொரூபத்தை அறிவது. இதில் வஸ்துவின் வடிவத்தைப் பார்க்கிறதில்லை. காரிய உபாதியையும், காரண உபாதியையும் களைந்து ஜீவனும் ஈசனும் ஒன்றென உணர வேண்டும். காரிய உபாதி - அந்தக்கரணம், காரண உபாதி - அவித்தை, சீவனும் பிரம்மமும் ஒன்றென்பது குறிப்பு.

இத்தனை மார்க்கங்களிருந்தும் பக்தி மார்க்கம் வேறு. அன்பு மார்க்கத்தில் கருமமோ, தருமமோ, முக்கியமல்ல. சித்தவிருத்தி நிரோத யோகமும் முக்கியமல்ல. தத்பதத்தையும் துவம்பதத்தையும் சோதித்து சீவேஸ்வர ஐக்கியமும் முக்கியமல்ல. அன்புமார்க்கம் சம்பந்தமார்க்கம். இஃது நான் என்னும் மார்க்க்ம் அல்ல. எனது என்னும் மார்க்கம். பரிச்சின்னத் (அளவை) தை ஞானம் நீக்கி விடுகிறது. அவ்வாறு மமதை (எனது)யை அன்பு மார்க்கம் அகற்றி விடுகிறது.

உலகில் பிதாபுத்திரன், பதிபத்தினி தம்பி, தமையன் என்னும் இவர்கள் சம்பந்தம் போல இறைவனோடும் சம்பந்தம் வைத்துக்கொள்வது அன்புமார்க்கம். உறவை உறவுதான் முறிக்கும். உலகில் சம்பந்தம் நீங்காது போனுல் மமதையும் நீங்காது. அதனுல் அகந்தையும் நீங்காது. அகந்தையும் மமதையும் விலகாது போனுல் ஆண்டவனிடத்தில் அன்பு எவ்வாறு உண்டாகும்?

மமதை. அந்தக் கரணத்திலுள்ள அசுத்தி. அது அகந்தையைப் பற்றி இருக்கிறது. ஆயும்பொழுது அகங்காரம் என்னும் ஒரு பொருள் இல்லை. எது மமகாரமோ அது அகங்காரம். மமகாரம் - மமதை. வீட்டை உடையவன் நான், மனைவி மக்களுடையவன் நான், மானம் உடையவன் நான் என்னும் இவையும் மமதைதான். இம்மமதையை இறைவனுக்கு அற்பணம் செய்து விட வேண்டும்.

மமதை இருவகைத்து. நான் பகவானுக்கு, பகவான் நமக்கு என்னும் தன்மை. தாவாகா :— மணிவண்ணு! மங்கையர்களாகிய நாங்கள் உனக்குத்தான். நின்னுடைய சென்மத்தினுல் இப்பூமி மிகச் சிறந்து விட்டது. இம்மாதிரி சம்பந்தம் வைத்துக் கோபிகள் அச்சுதனிடத்தில் அன்பு வைத்தார்கள். உள்ளம் உருகிப் பாடினுர்கள்.

பிள்ளைகள் மூலமாகப் பெற்றோர்களையும், சீடர்கள் மூலமாகக் குருமார்களையும் ஊரார் வந்திப்பர், அல்லது நிந்திப்பர். பிள்ளைகள் நல்லவைகளாக இருந்தால் புகழ்வர், கெட்டவைகளாக இருந்தால் இகழ்வர் என்றறிக. அது போல் சீடர்களையும் எடுத்துக் கொள்ள வேண்டும். மண்ணளந்த மாதவா; விரஜபூமி இயல்பாகவே திகழ்கின்றது. உன்னோடு சம்பந்தப்பட்டதால் இப்பூமி மூவுலகத்திற்கு மேலாகவும், மூவுலகத்தார் வழிபாட்டிற்குரியதாகவும் ஆகிவிட்டது.

வைகுண்டம் போகும் போது விரஜா நதியைத் தாண்டித்தான் செல்ல வேண்டி இருக்கிறது. ஜெயன் விஜயன் என்னும் இருவரும் சனகாதிகளைக் கூட தடுத்து நிறுத்தினர். பொதுவான மக்களைப் பற்றி என்ன சொல்வது. ஆனால் கோகுலபூமியோ எல்லோர்க்கும் எளியது. இப்பிர்ந்தாவனம் பிருதிவியின் புகழை விரிவாக்குகிறது. கோவிந்தன் மலரடி இம்மண் மிசைப் பட்டதால் இந்நிலத்திற்கு அழகு கிடைத்தது.

ஸ்ரீநிவாசன் வைகுண்டத்தில் கனகாசனத்தில் அமர்ந்திருக்கிறான். அங்கு பக்தர்கள் பகவானை அடைய விரும்புகிறார்கள். அவர் அண்மைக்குச் செல்கிறார்கள், பிருந்தாவனத்திலோ ஸ்ரீகிருஷ்ணன் எல்லோரையும் இனிமையாக ஈர்க்கும் இயல்பினன். ஈண்டு வீடு வீடாக அலைகிறான்.

இவனை யாரும் பார்க்காது போனால் இருமி விடுவான். பாதத்தில் அணிந்திருக்கின்ற சலங்கைகளை ஒலிக்கும் படி ஆடுவான். இந்நிலையிலும் நோக்காது போனால் புல்லாங்குழலை ஊதுவான். இப்போதும் தன்னைப் பார்க்காவிட்டால் சிறிய கற்களை எடுத்து சாந்தமாக வீசுவான். இன்னும்

பார்க்கவில்லையானல் முந்தித்துணியைப் பிடித்து இழுப்-பான். எப்படியாயினும் அனைவரையும் தன்வயப்படுத்துவான்.

இலட்சுமியை நாராயணன் மார்பில் வைத்திருக்-கிறார். சில அன்பர்கள் பகவானை வழிபட வந்தால் மார்பில் இருக்கும் மகாஇலட்சுமியை வணங்கி விட்டு சென்று விடுகின்றனர். யாரோ ஒருவர் அவளை ஒதுக்கி விட்டு மாயவனை வழிபட்டுத் திரும்புகிறார். ஒருநாள் கமலா, பத்மநாபரிடம் சென்று கைகூப்பி நின்றாள். ஸ்ரீ ஹரி, இரமா! உனக்கு என்ன வேண்டும் என்றார். இரமா—லெட்சுமி.

மகாலெட்சுமி - அமலனே! நான் உனது மார்பில் இருக்க விரும்பவில்லை என்றாள். மாயவன் - அங்ஙனம் ஆயின் எங்ஙனம் இருக்க விரும்புகிறாய் என்றான். ரமா-உம்முடைய பாதத்தூளியில் இருக்க ஆசைப்படுகிறேன் என்றாள். சக்ரபாணி - எனது அடிப் பொடியில் என் அன்பர்கள் வசிக்கிறார்கள் என்றான். இரமா - பரவா இல்லை, அங்கு இருக்க விரும்புகிறேன். மாயவன் - தூயவளே! ஆண்டு அன்பர்கள் கூட்டமாக இருக்கிறார்கள். உனது சக்களத்தியும் அங்குதான் இருக்கிறாள். அவள் நாமம் பிருந்தா. (துளசி)

இந்திரா - கூட்டமாக இருந்தாலும் சரி. சக்களத்தி துளசியாக இருந்தாலும் சரி அவர்களுக்குக் கீழ்படிந்து வாழ்வேன். உனது மார்பில் இருக்கமாட்டேன் என்றாள். பகவானுடைய பாதத்தூளியில் பத்மா=லெட்சுமி இருக்கச் சம்மதிக்கிறாள். ஏன்? இந்தப் பாதத்தூளி வைகுண்டத்தில் கிடைக்குமா? கிடையாதல்லவா. மாதவன் மலரடியில் உள்ள மண் வைகுண்டத்தில் இல்லை. பின்னை? விரஜபூமியில் இருக்கிறது. எனவே திருமகள் எப்போதும் இங்கு வாசம் பண்ணுகிறாள். இங்கு விரஜபூமியில் ''தயித திருஸ்யதாம்''

கோபிகள் - எங்கள் சுவாமின்! நீ அருள் வடிவானவன். பக்தியைக் கண்டு நின் இதயம் எப்பொழுதும் இளகிக் கொண்டே இருக்கிறது. உனது சம்பந்தத்தினுல் இப்பூமி மேன்மை அடைந்தது. நாங்கள் உனக்கே ஆளாயினேம். உனக்காக வாழ்கிறோம். இருப்பினும் உன்னைத்தேடும்படி-யாக இருக்கிறது. என்னே விந்தை? பார். கோபாலா! சற்று உற்று நோக்குவாயாக. விரஜபூமி உறங்குகிறது. நேரம் நடுநிசி. இரவு வேளை. பவுர்ணமி நிலவுப் பட்டப் பகல்போல தன்னுடைய வெண்ணிற கதிர்களை அள்ளித் தெளிக்கின்றது.

அமிருதகிரணங்களை எமுனைகரையில் பொழிகின்றது. எங்கள் மனம் உன்னை நாடுகின்றது. இன் நிலையில் எங்களை ஏங்கவிட்டு எங்கே சென்றாய்? மாயவா! இத்தூயவர் உள்ளத்துடிப்பைப் பார். "திருஸ்யதாம்" அன்பு வழியில் மூன்று வித பாவங்கள் உள்ளன. பாவம் - எண்ணம். பாவம் எனினும் சம்பந்தம் எனினும் ஒக்கும். ததீயதா, மதீயதா, துவதீயதா. ததீயதா - பரோட்சம். நூலாலும், ஆசானுலும் கேட்ட இறைவனை நம்பி அவனுக்கு ஆளாவது. துவதீயதா- கண்கூடாகக் காணும் இறைவனை நேரில் கண்டு இவன் இறைவன், இவனுக்கே மீளா ஆளாவோம் என்று எண்ணுவது. மதீயதா - இறைவா! நீ எனக்கு, எனக்கே நீ சொந்தம் என்று எண்ணுவது. முகுந்தனுடைய காது, கண், மூக்கு, நாக்கு முதலிய உறுப்புகளும் எங்களுடையவை என்று எண்ணம் இருப்பது. கோபிகள் - நாங்கள் எவ்வாறு எண்ணுவோமோ அவ்வாறு நீ நடக்கவேண்டும் என்றூர்கள். அன்பு மிகுதியால் அங்ஙனம் சொல்லுகிறுர்கள்.

இதன் மூலமாக ஆயர்குலமாதர் மனத்தில் அபிமானம் வந்தது. புருஷோத்தம! நீ எங்களுக்குச் சொந்-தமானபிறகு பிறரைப் பார்க்கலாமா? அவர் தனது பிரேம

பாசத்தால் தாமோதரனைக் கட்டி வைக்கப் பார்க்கிறார்கள். முரளிதரனும் அவர் முன்நிலை தனது இறைநிலையைத் தூர எறிந்து விட்டான். ஈசுவரத்தன்மையை மறைத்து விட்டான். என்பது பொருள்.

நான் ஒரு மகானிடம் சென்று சுவாமின்! ஈசுவரன் தனது தன்மையை எவ்வாறு மறைக்க முடியும் என்று கேட்டேன். மகாத்மா - வேதாந்தியாகிய நீங்கள் வேதாந்தத்-தில் ஈசுவரனிடத்தில் உள்ள ஐஸ்வரியம் மாயையால் மறைந்-திருக்கிறது என்றும், ஜீவனிடத்திலுள்ளஜீவத்வம் அவித்தை-யால் மறைந்திருக்கிறது என்றும் கூறுகிறீர்கள். அது போலறிக என்றார் மகாத்மா. இதில் என்ன புதுமை. தத்துவ பாவத்தில் ஈசுவரத்வம் - ஈசுவரபாவம்நீங்கும் போது, பக்தி மார்க்கத்தில் நீங்குவதால் என்ன விரோதம் இருக்கிறது? இல்லை என்பது குறிப்பு.

''பக்தே: யாஹி பராகாஷ்டாசா ஞானமிதி கத்யதே, ஞானஸ்ய யா பரா காஷ்டா சைவ பக்தி: சா.உதாஹிருதா'' பொருள் - பக்தியின் இறுதிநிலை ஞானம் என்றும் ஞானத்-தின் இறுதிநிலை பக்தி என்றும் பகரப்படுகின்றன. ஆயும் பொழுது இரண்டும் ஒன்றுதான். ஞானத்தினால் விசாரம் செய், அல்லது பக்தியினால் விசாரம் பண்ணு.

அரசன் அவையில் அமர்ந்து இருக்கும் போது சிரசில் முகுடமும், கழுத்தில் ஆபரணமும். இடையில் வாளும், மார்பில் கவசமும் அணிந்திருப்பான். அந்தப்புறத்திற்குச் செல்லும் போது அனைத்தையும் கழற்றி விடுவான். அவன் கழற்றாது போனால் அவனுடைய மனைவியார் கழற்றி விடுவாள். வீட்டில் செல்வம் களையப்படும்.

அன்பு நிலைமை அற்புதம். அதில் தமது தலைவன் முன்னை நின்றால் வெகுண்டு பேசுவாள். முகத்தை மாற்றிக்

கொள்வாள், என்ன சொன்னாலும் அவர் நம்மவர் தானே என்ற எண்ணம் அவளிடம் இருக்கும். அப்பொழுது தன் தலைவனிடம் என்ன வேலை செய்ய வேண்டுமானாலும் செய்து கொள்வாள். தலைவனும் தலைவியும் நெருங்கி இருக்கும் போது சந்திரன் குளிர்ச்சி வடிவமாக இருந்து இருவருக்கும் சீதளத்தை அளிக்கின்றான். இன்பத்தைப் பரப்புகின்றான்.

அவ்வாறு இருந்த சந்திரன் பிரிவு நேரத்தில் அவன் ஆதவனாகி விடுகிறான். அது தமது தலைவனுக்குப் பிரகா-சத்தை அளிக்கிறது. வெப்பத்தையும் தருகிறது. பிரிவில் இவ்விரு குணங்களும் இருக்கின்றன.

கோபிகளின் மகிமை மிகச் சிறந்தது. எல்லை இன்றியது. பொதுவாக பிரிவில் இரக்கம் உண்டாகும், நாங்கள் உனக்கே என்ற எண்ணம் உதயமாகும்.

ஒருவன் கோபிகளைப்பார்த்து-''கோபிகளே! கண்ணன் உங்களை அறவே மறந்து விட்டு மதுரைக்குச் சென்று விட்டான்'' என்றான். மதுரை-வடமதுரை. மேலும் கண்ணன் இனி கோகுலத்திற்குத் திரும்பி வரமாட்டான் என்றான்.

கோபிகள் -எங்களுக்கு மிகுந்த சந்தோஷம். அவன் இங்கு வரக்கூடாது. மதுரையில் பாதுகாப்பான இடத்தில் இருக்கட்டும். அங்கு முகுந்தனைக் காப்பவர்கள் நிரம்ப இருக்கிறார்கள். முதியவர், அறிவாளிகள், மெய்ஞ்ஞானிகள், முதலிய அன்பர்கள் இருக்கிறார்கள். இங்கு அத்தகையர் யாரும் இலர். ஜராசந்தன் முதலிய பகைவர்கள் வந்தால் முராரியை யார் காப்பது? ஆகையால் மதுரையில் இருக்-கட்டும் என்றார்கள்.

மேலும் பிரிவாற்றாமையால் நந்தலால்! நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு ஓர் நாயகமே என்றபடி, கோபிகள் - கோவிந்தா! உனைக் காண உயிர்

துடிக்கிறதே என்றூர்கள். "கோபிஜனு: தாவகா, பிரிவில் வேதனை உண்டாகும். கரும்பாலை கரும்பைப் பிழிவது போல, பிரிவு வேதனை உள்ளத்தை உருக்கிவிடும். பிராணனைக் காப்பது அரிது. கபடமில்லாத பிரேம் மனிதனுக்குத் தோன்றுவது எளிதல்ல.

வஞ்சனை இல்லாத நட்பு வாசுதேவனுக்குப் பிரியம். வஞ்சனையோடு கூடிய நட்பும் நஞ்சு கலந்த அமுதமும் சமமாகும். ஈண்டு கபடம் என்பது தன்னலம் பேணுதல். யாரிடத்தில் யார் நட்புக் கொள்கிறூரோ, அவர் சுகத்தை விரும்பித் தான் நட்புக் கொள்வார்.

(ஆத்மனஸ்து காமாய சர்வம் பிரியம் பவதி) பி.உ. தன் பொருட்டாகவே எல்லாரும் பிறர்பால் நட்பு வைப்பர் என்பது பொருள். தன்னலம் இல்லாத நட்பில் பிரிவு உண்டாகும் போது கவலை வருவதற்குக் காரணமில்லை. இவ்வளவு விரக வேதனையிலும் கோபிகள் வாழ்ந்தார்கள்! என்பது கேள்வி. பதில் - துவயி திருதாஸவ:- கிருஷ்ணு! உன்னிடத்தில் நாங்கள் நம்பிக்கை வைத்து வாழ்கிறேம். எங்களுக்குத் தெரியும், உன்னை நம்பினபேர்களைக் கைவிடமாட்டாய் என்று.

எங்கள் ஆவி உன்னிடத்தில் மேவி இருக்கிறது. உனக்காக நாங்கள் வாழ்கிறேம். திரும்பி வருவாய் என்று எங்கள் பிராணன் எங்கள் உடலில் மருவி இருக்கிறது. வைராக்கியத்தில் நிராசை உண்டாகிறது. நிராசை-ஆசை இன்மை.

காதலில் ஒன்பது பொருள்கள் உண்டாகின்றன.

1. கலகம் வந்தாலும் பொறுத்துக் கொள்வது.
2. காதலனுக்காகவே பொழுதைக் கழிப்பது.
3. காதலனைத் தவிர வேறு யாரோடும் பேசாதிருத்தல். நட்புக் கொள்ளாதிருத்தல்.

4. தன்னிடத்தில் எவ்வித அபிமானமும் வராதிருந்தல்.
5. அச்சுதன் அவசியம் கிடைத்து விடுவான் என்று நம்புவது.
6. அவனைப் பற்றிய மிகுந்த வேட்கை.
7. அவன் நாம ஜெபம் பண்ணுவது.
8. பிரியனுடைய குணங்களை உரைப்பது.
9. தமது பிரியதமன் எங்கு வசிக்கிருனோ அங்கு வாழ விரும்புவது.

ஏ தயாநிதே! எங்கள் பிராணன் எனும் பறவையைப் பறிக்க எமன் என்னும் பருந்து வருகிறது. இருப்பினும் விரகம் என்னும் கனல் எரிவதால் எங்கள் ஆவியைப் பறிக்க இயலவில்லை.

''திட்சுத்துவாம் விச்சின்வதே இதிபஸ்யதாம்'' பிராணநாத! உன்னுடைய சம்பந்தத்தால் இப்பூமியின் மகிமை சிறந்து விட்டது. எங்களுடைய பெருமை குறைந்து விட்டது. முராரே! இரவில் உன்னை நாடித் தவிக்கிறோம். வாசுதேவ! முன்னமே எங்களிடத்தில் கோபம் இருந்திருக்கலாம். அதனுல் ஆவேசத்தில் தூரத்தில் சென்று விட்டாய் என்று நினைத்தோம். இன்னும் வெகுளி தணியவில்லையா? சக்ர-பாணே! ''திருஸ்யதாம்'' எங்களைப் பார்.

தானம், ஜபம், தவம். எக்ஞம், விரதம், கல்வி, பொறி. அடக்கம் மற்றுமுள்ள நற்செய்கையால் இறைவனுடைய இனிய பக்தி அடையப் படுகிறது, உலகில் பொதுவாக சாமான்ய மக்கள் இறைவனைத் தேடுவதில்லை. அவர்கள் போகத்தில் அழுந்திக் கிடக்கின்றனர். தேடுகிற மக்களும் பல சாதனங்களில் மூழ்கி இருக்கிருர்கள், நாங்கள் உனக்கு அடிமை, உமது தாசிகள். ஆனுலும் உன்னைத் தேடுகிறோம். இது என்ன விந்தை?

தாவகா :— ஆயும் பொழுது உண்மையில் ஜீவன் இறைவனுக்கு. அனாதிகால அவித்தையினுல் ஜீவன் பொன்-னுக்காகவும், பொருளுக்காகவும். பெண்டிர்பிள்ளைகளுக்கா-கவும், சம்சாரத்திற்காகவும் ஆகி விட்டான். இராமானுஜ ஆச்சாரியாள் கூறுவதாவது - ''நானும் என் உறுப்புகளும் உனக்கே அடைக்கலம் என்கின்ருர். எனது ஆத்மாவை உனக்கே விண்ணப்பிக்கின்றேன்'' என்று மீண்டும் மீண்டும் விண்ணப்பிக்கிருர்.

உயிர்கள் பகவானது (பூமியில்) நிலத்தில் நடக்-கின்றன. அவனது வாயுவில் சுவாசம் நிசுவாசம் பெறு-கின்றன. அவனுடைய இருப்பில் இருக்கின்றன. இதனுல் எல்லா உயிரும் இறைவனுக்குச் சொந்தம். இந்நிலையை ஜீவன் எப்பொழுது அறிகிருனே அப்பொழுது அவனிடத்தில் கோபிகள் பாவம் வருகின்றது. கோபிகளுக்கு நாம் கோபாலனுக்கு என்ற எண்ணம் திடமாக உண்டு.

திருஸ்யதாம் — பிராணேசுவர! நேரில் வா, இவ்வாறு விளையாடுவாரும் உன்டோ? இல்லை. இம்மாதிரி முனிவாரு முளரோ? இலர் என்பது கருத்து. நீ திருஷ்டா அசங்கன் இருப்பினும் இப்பொழுது திருஸ்யமாகி விடு, எங்கள் கண் முன்வா. ரிசிகேச! உன்னோடு யார் தொடர்பு வைக்கிருரோ, அவர் உலகில் பெரியவர்.

டாக்டரோடு விவாகஞ் செய்த பின்னர் படியாத மனைவியும் டாக்டராணி ஆகிவிடுகிருள். பகவானுடைய அவதாரம் எதற்காக? நிற்குணபிரஹ்மத்தில் யாருடைய மதிசெல்ல வில்லையோ, யோகம், சமாதி, தியானம் இவை-களில் யாருடைய மனம் செல்ல வில்லையோ, அவர்களைத் தன்வயமாக இழுக்கவும், அவர்களுக்கு ஆனந்தம் அளிக்கவும் அவதாரம் உண்டாகிறது. இறைவனை நேரில் கண்டு களிக்கும் போது அவன் புண்ணியன் ஆகிருன், பவக் கடலை எளிதில் கடக்கிருன். அவனது துன்பம் தொலைகிறது. தொன்மையான இன்பம் வருகிறது, இது உறுதி.

பக்தியைப் பாரில் பரப்புவதற்காக வந்தாய் கண்ணு! உன் செயலை உன்னும் போது அன்பு மார்க்கம் அடியோடு மறைந்து போகும் போலத் தெரிகிறது. ஆருயிர் தோழனே! அன்பின் உருவமே! அவ்வாறு செய்யாதே. நினைக்கவும். தொழவும் நீ எழுந்தருளப் பெற்றும், நாங்கள் தவிக்கிறோம். இது நியாயமா?

நண்பனே எங்கள் கோவே! நாதனே ஆதிமூர்த்தி! நீ எங்கள் நாதனல்லவா? எங்கள் முன்னே வராது போனாலும் நீ இருக்கிற இடத்திலிருந்து பார். சம்சாரிகள் இறைவனை வழிபடுகிறார்கள். அது ஒரு விதம். அன்பர்கள் வழிபடுவது மற்றொரு விதம். சம்சாரிகள் வழிபடுவது தன்னலங்கருதி. நாலணாவிற்குப் பூவை வாங்கிக்கொண்டு அங்கையர்கண்ணி திருவடியில் சாத்தி பிரார்த்தனை செய்யத் தொடங்கினர், பிரார்த்தனை அம்பிகை! மலையரசன்பாவையே! பன்னிரண்டு திங்கள் கழியுமுன் எனக்கு வெண்ணிறமாகவும், ஆரோக்கியமாகவும், ஆயுள் நூறும் நிரம்பிய ஒரு ஆண்குழந்தை தர வேண்டும் என்று வேண்டினர். வேண்டுவது = பிரார்த்தனை செய்வது.

மணிவண்ணு! ஆண்குழந்தை அவசியம் தரவேண்டும், பிறக்கிற குழந்தை கருப்பா இருக்கக் கூடாது, இப்படியா வேண்டுவது? இறைவனை வேண்டுவதா, இறைவனுக்கு ஆணையிடுவதா? இத்தகைய அன்பன் இறைவனைத் தலைவனாக ஏற்றுக் கொள்வதில்லை, பின்னை? தனக்குச் சேவகனாக எண்ணுகிறான்.

ஒரு மனிதன் ஒரு கன்னிகையை நோக்கி வினவினான். சுந்தரி! உனக்கு எப்படி கணவன் வேண்டும் என்றான். அவள் - ஆரோக்யமாகவும், அழகு உடையவனாகவும், கல்விமானாகவும், நிரம்பிய தனம் உடையவனாகவும், இரண்டு மூன்று கார்கள் உடையவனாகவும், என் சொல்லைத்தட்டாமல்

கேட்பவனுகவும் இருக்கவேண்டும் என்ருள். அதைக் கேட்ட அவன் - மகளே! உனக்கு நாயகன் வேண்டாம், மேற்கூறிய குணங்களோடு கூடிய ஒரு வேலைக்காரன் வேண்டும் என்ருன்.

பக்தன் யார்? எவன் ஒருவன் இறைவனைத் தனக்கு சுவாமியாக நினைக்கிருனே அவன் பக்தனுவான். அவனே உத்தம பக்தன். அவன் இறைவன் எண்ணத்தோடு தனது எண்ணத்தை இணைக்கிறான். அவன் மனம் போல இவன் நடக்கிறான். அவன் - இறைவன். இவன் அன்பன். இறைவன் எண்ணப்படி அவன் வாழ்கிறான்,

பொதுமக்கள் செய்கின்ற பக்தி அபிமானத்தோடு இருக்கும். பொதுவான மக்களிடத்தில் இறைவன் எல்லாம் தெரிந்தவன். எல்லாம் உடையவன், என்ற எண்ணம் உதிக்கும். ஆனுல் விரஜ பூமியின் அன்பு அவ்வாறன்று. இந்தக் கோபிகள் கிருஷ்ணனை ஆக்கல், அளித்தல். அழித்தல் என்னும் முத்தொழிலுக்கும் கர்த்தா என்று எண்ணிப் பக்திப் பண்ணுவதில்லை. கண்ணன் நமது காதலன் என்று அன்பு செய்தார்கள். இவர்கள் நேசம் இயல்பானது.

இவ்வாறு இனிய பக்தி செய்யினும் கண்ணனைக் காண முடியவில்லையே என்று கண் கலங்கி நின்றனர். இப்படி இருந்தால் அன்பு மார்க்கத்தில் யார் அடியெடுத்து வைப்பார்? வையாது போனுல் அம்மார்க்கம் முற்றிலும் தூர்ந்துதானே போகும்.

இவ்வாறு என்றார்கள் கோபிகள். இவ்விஷயத்தை முதல் சுலோகம் கூறியது.

முதல் சுலோகம் முற்றிற்று.

---

# சுலோகம் 2

சரதுதாசயே சாது ஜாத சத்
சரசி ஜோதர ஸ்ரீ முஷா திருசா
சுரத நாத! தே அசுல்க தாசிகா
வரத ! நிக்னதோ நேஹ கிம் வத: 2

## பொருள்

முந்திய சுலோகத்தில் - திக் - திசைகள், தேசங்கள் என்று விரஜ பூமியின் பெருமை பேசப்பட்டது. இவ்விரண் டாவது சுலோகத்தில் திருக்கு, திருசியம், திருஷ்டி ஞானத்தின் பெருமை கூறப்படுகிறது.

'' பிரேயசிமன : கிம் குருவதாஸ்தே '' அறிய வேண்டிய விஷயம் என்னவெனின்? அன்பன் தனியே இருக்கும் பொழுது அவன் மனம் என்ன செய்கின்றது? ஒரு வேளை காதலனை விட்டு எங்கே போகும்? எங்கும் போகாது. அது போல் அன்பன் மனத்தை விட்டு அகன்று ஆண்டவன் செல்லமாட்டான்,

ஆகலின் கோபிகள் மனம் கோவிந்தனை விட்டு வேறிடம் செல்வதில்லை. கண்ணனை விட்டகலாத மனம் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறது. அந்நேரத்தில் அன்பன் இதயத்தில் அவன் தோற்றாது போனால் அன்பன் இறந்து போவான். அவன் = கிருஷ்ணன். பிரிவு எப்போதும் நிலைத்து இராது. இப்ரேம் கிடையாத வஸ்து அல்ல. இஃது எல்லோருடைய இதயத்திலும் இருக்கும்.

நீங்கள் உங்கள் நட்பை யாரிடம் செலுத்துகிறீர்கள்? இறைவனிடத்திலேயா ? உலகத்திலேயா ? தீபம் உன் கரத்தில் இருக்கிறது. அதில் எதைப் பார்கிறாய்? சுத்தத் தைப் பார்க்கிறாயா? அசுத்தத்தைப் பார்க்கிறாயா? உனது

மனத்தில் பொருளைப்பற்றி, பவனத்தைப் பற்றி, ஆடை அணி கலங்களைப்பற்றி உலோபம் வருமானால் நீ என்ன நினைக் கிறாய்? இந்த லோபம் இறைவனைப் பற்றி வருமானால் அது பக்தியாகி விடும்.

உனது உள்ளத்தில் ஆசை வருகிறது. அதைக்கண்டு அஞ்சாதே. யாரிடமும் ஆசை வராதென்பது இல்லை. வரத் தான் செய்யும், எல்லார் இதயத்திலும் இச்சை எழுவது இயல்பு. தாய் தந்தையரிடம் காமம் வந்ததனால் நமக்கு உடல் கிடைத்தது. காமத்தினால்தான் சிருஷ்டி உண்டா யிற்று. அயனிடத்தில் ஆசை எழாதுபோனால் உலகம் வந் திருக்காது. பகவானுடைய படைப்பில் மனிதப்பிறவி மிகச் சிறந்தது. அவர்களில் ஆசை யில்லாதவர் ஒருவரும் இல்லை.

காமம் வந்ததும் மனிதன் மடந்தையை நினைக்கி றான். உனக்குக் காமம் வந்தால் இறைவனை நினை. ஆடவர் அரிவையர் இடத்தில் இறைவனை வை. அப்பொழுது காமம் இராமனாகிவிடும்.

காமிஹி நாரி பியாரி ஜிமி லோபிஹிபிரியஜிமிதாம்! திமிரகு நாத நிரந்தரபிரியலாகஹு மோஹிராம்!! (துளசி) உன்னுடைய மனத்தில் மோகம் வருகிறதா? பெண்டு பிள்ளை, மண், மனை இவைகளிடத்தில் மோகம் வருகிறதா? வந்தால் அதைப் பகவானிடத்தில் பொருத்து. இறைவனிடம் மோகம் வை. இம் மோகம் பக்தியாகி விடும். காமம். லோபம், மோகம் இம் மூன்றும் முறையாகப் பெண்ணிடத்திலும், பொருளிடத்திலும், தேகத்திலும் வரும்.

இம் மூன்றும் இவ்வாறு யாருக்கு வருமோ அவர் சம்சாரி. அபக்தன். மேற் கூறிய மூன்றும் அன்பில்லாத வர்க்கும் அதுவே அடையாளம். கடலில் அலை யெழுவது போல் அன்பன் அகத்திலும் எழும். ஆனால் அவைகளுக்குப் பகவானோடு தொடர்பு உண்டாவதால் முன் போல நிலை

எவ்வாறு உண்டாகும்? கோபிகளைப் பார்த்தால் வரும். இனி சுலோகத்தைச் சிந்திப்போம்.

திருசாசுரத நாத. திருசாவரத. திருசா நிக்நத : இங்கு திருசாவத : கிம்வத : ந பஸ்யதி

கோபிகளுக்கு வியோகத்தில் சம்யோகம் உண்டாகிறது. வியோகம் = பிரிவு. சம்யோகம் - கூடுதல். மாதவன் மடந்தையர் இதயத்தை விட்டு தூரத்தில் இல்லை. மதுராவிற்குச் சென்ற பின்பு உத்தவரிடம் சொல்லி அனுப்பினான். சொல்வீரன் என்ன சொன்னான்? நங்கையர்களே! உங்கள் பார்வையிலிருந்து ஒதுங்கி இருக்கிறேனே தவிர இதயத்திலிருந்து அல்ல என்றான். "தூரே வர்த்தே பிரியே! திருசாம்" பாகவதம். மனத்தில் உங்களோடு இணைந்திருக்கிறேன். உங்கள் முன்னிலையில் நின்று நீங்கள் சொன்னதெல்லாம் கேட்டு நடந்து வந்தேன். அப்பொழுது நீங்கள் முகத்தை மாற்றி விட்டீர்கள். தற்சமயம் எனக்காக அழுகிறீர்கள். அழுங்கள். நான் வரமாட்டேன் என்றான் முகுந்தன்.

கோபிகள் - நீ வரவில்லையானால் நாங்கள் அழுது அழுது மடிவோம். இதனால் எங்களைக் கொலை செய்த பாவம் உன்னை பிடிக்கும் என்றார்கள்.

முராரி - என்னை ஏன் பாவம் பிடிக்கும்? நான் வனத்தில் உங்களை அழைத்தேனா? மாதர்கள் - (திருசாசுரதநாத) நீ நேத்திரத்தினால் சுரதத்தை விரும்புகிறவன். சுரதம் = விஷய சுகம். நீ நினது பார்வையால் எங்களை விரும்பினாய். உனது கண்களில் எங்களை அடையவேண்டும என விருப்பம் இருந்தது. அது அழைக்கவில்லை? சுரத நாத! விளி. பிரேமிக்கு யார் எப்படியோ அவர் அப்படியே இறைவனையும், இறைவன் நாமத்தையும், கூறுவர். ஞானத்தை விரும்புபவர் இறைவனை ஞானகணம் என்று அழைப்பார். பொருளை இச்சிப்பவர் ஸ்ரீபதி. ரமாகாந்தன் என்று கூறுவார்.

துன்பத்தைத் துடைக்க விரும்புபவர் அசரண சரண, மது சூதன, தீனநாத என்று அழைப்பர்.

நாதன் என்னும் சொல்லுக்கு இருபொருள். ஒன்று தலைவன், மற்றொன்று துயரம் தருபவன். ஏபிராணநாத! எங்களைப் பார்த்து எங்கள் சுகத்தை விரும்பினாய். இப் பொழுது எங்களை ஏங்க விட்டு துயரத்தைத் தருகின்றாய். இது என்ன நியாயமா? கிருஷ்ணன் - நீங்களும் என்னி டத்தில் பிரியத்தை விரும்பினீர்கள். என்னை மருவவேண்டு மென்று காத்தியாயனி (விரதம்) நோன்பு இருக்கவில்லையா? என்னை அடைய வேண்டுமென்று தவம் செய்யவில்லையா? என்று அவர்களைத் திருப்பிக் கேட்டான் யாதவன்.

கோபிகள் - திருசாவரத! நாங்கள் உனக்காக உபாசனை செய்தோம். நீ உனது பார்வையால் வரம் தந்தாய். இப்போது அதைச் சத்தியமாக்கவில்லை. வரத்தைப் பூர்த்தி செய்ய வில்லை. திருஷ்டி-ஞானத்தில் தான் சிருஷ்டியும், பிரளயமும் உண்டாகின்றன.

திருஷ்டியின் விலாசந்தான் சிருஷ்டிவிலாசம் = காரிய வடிவமாய் மாறுதல். அசுல்க்க தாசிக்கா. நாங்கள் உன்னி டத்தில் எதையும் கேட்கவில்லை. எதையும் விரும்பாத எங்களை உனது திருஷ்டி, தாசியாக்கி விட்டது, உனது அதர்சனம் = உன்னைக்காணாதத் தன்மை எங்களைக் கொல்லவில்லையா? அதர்சனம் = தர்சனம் இன்மை. நிக்னத:- உனது அதர்சனம் எங்களைக் கொல்லுகிறது. அரிவாளை யெடுத்து வெட்டுவது தான் கொலையா? எல்லோரும் ஆயுதம் கொண்டு கொல்லு வார்கள். நீயோ உன்பார்வையால் கொல்லுகிறாய். கேசவன்- இக்கொலையால் என்னைப் பாவம் பற்றாது. ந மாம் கர்மாணி லிம்பந்தி நமேகர்ம பலே ஸ்பிருஹா. கீதை. என்னை கர்ம பலம் பற்றாது, பலனை அடைய நான் விரும்பவில்லை. பகவானது இயல்பைத்தெரிந்தவனே முக்தனாவான். இங்ஙனம் இருப்ப, பாவம் என்னை எப்படிப் பற்றும்? என்றான் முராரி.

எங்களைக் கொன்ற பாவம் உன்னைப் பற்றும் என்கிறார் க ள் கோபிகள். இதுவிந்தை? கோபிகள்-திருசாசுரத நாத, திருசாவரத, திருசாஅசுல்க்கதாசிகா திருசாஙிக்னதோ, திரு சாகிம் நவத? என்கிறார்கள். சியாமசுந்தர! எந்தவழியால் எங்களுடைய பிரேமை ஆசைப்பட்டாயோ, எந்த நேத்திரத் தால் ஆறுதலை அளித்தாயோ, எந்தக் கண்ணோட்டத்தால் மூல்யம் விலை இல்லாமல் எங்களைத் தாசி ஆக்கினுயோ, அந்த வழியால் எங்களைக் கொல்லுகிருய். இஃது வதை இல்லையா? வேறு என்ன?

ஸ்ரீ கிருஷ்ணன் விழி எவ்வாறு? சரசுதாசயே சாது ஜாதசத் சரசிஜோதர ஸ்ரீ மு ஷ ா தி ரு ஷ ா. சரத்=கால விசேஷம். சரத் ரிதுவில் உதாசயம் = அழகு பொருந்திய தடாகத்தில் மலர்ந்திருக்கின்ற தாமரை மலரில் வசிக்கும் அழகைப்பறிக்கும் விழி. கிருஷ்ணன் மிகுந்த அழகுடையவன் என்பது பொருள். எல்லோரும் அ வ ர வ ர் வி ழி யை அழகுடையதாக எண்ணுவர். யாரும் தனது விழியை மோசம் என்று எண்ணுவார்களா? எண்ணமாட்டார்கள். விழி அழகு உடையது என்று எண்ணித்தானே மையிடுகிருர்கள்.

சில இளம்பெண்களுக்குக் க ண் ணை ப் பார்க்க மிக அழகாக இருக்கும். அக்கண்ணைக் கொண்டு யாரைப் பார்ப்பாளோ, அவர் மனம் சாகும். பார்ப்பது கண். சாவது மனம். எல்லோருக்கும் அத்தகைய கண் கிடைப்பது அரிது. இனிய கண்கள் இளம் மடந்தையருக்கு உண்டு. இருவர் கண்ணும் கவ்வி கொள்ளும். ஆதலின் அப்பாவி மனம் சாகும்

சியாமசுந்தர! உனது நேத்திரத்தில் பிறரை மயக்குந் தன்மை உளது. அக்கண் எங்கள் மனத்தைப் பந்தத்தில் ஆழ்த்தியது. நான்முகன் எங்கள் கண்களுக்கு இன்பத்தைப் படைக்கவே இல்லை. இது நாங்கள் செய்த பாவம். நீ மூன்னே

வரும்போது, உன்னைப் பார்க்க கண்கள் துடிக்கின்றன ஆனல் பெண்களுக்கு வெட்கம் வந்து தடுக்கிறது. நீ மறைந்த போது மீண்டும் பார்ப்பதற்குத் துடிக்கின்றன.

அன்பு மார்க்கத்தில் கண்ணுக்கு மகத்துவம் அதிகம். இருவரையும் சேர்த்து வைப்பது கண்தான். சிரிப்பு, பரிகாசம், கேலி, கோபம் முதலிய எல்லாம் கண் மூலமாகத்தான். உண்டாகின்றன. ஆனல் விவகாரத்தில் இவ்வாறு செய்வது குற்றம். அன்புமார்க்கத்தில் இஃது நல்லது.

பொதுவாகக் கண் திறந்திருப்பது நல்லது. உலகில் மனிதர்கள் ஆணவத்தில் நிமிர்ந்து, திமிர்ந்து, உயர்ந்து திரிகிறுர்கள். ஆணவமும் அபிமானமும் ஒன்றுதான். சிலர் அழகிலு, சிலர் அறிவிலும்,சிலர் வலியிலும், அதிகாரத்திலும், களிப்புறுவர்.சிலர் தனமதத்தினால் தரையில் கால் வைக்கக் கூசுவார்கள். சிலர் பதவியாலும், பரிஜனங்களாலும், குருடர்களாக இருக்கிறுர்கள். இவர் உள்ளத்தில் இருக்கும் இவ் இழிகுணங்கள் நீங்கி இறைவன் பக்தி வளரவேண்டு-மாஞல் அவன் அருள் வேண்டும்.

அவனருளாலே அவன்றாள் வணங்கி என்பது திருவாசகம். (எம் ஏவ விருணுதே தேந லப்ய:) வேதாந்தம். ஆத்மா யாரை அடைய விரும்புகிறதோ அவரால் அது அடையப்படுகிறது என்பது சுருதிப்பொருள். கண்ணன் ஒரு முறை தனது விழியைத் தன் அருேக இருப்பவர் முன் வீசினுன். அப்பொழுது அவர்கள் அபிமானம் கழன்று விட்டது. கேசவன் விழி மக்களைத் தன் வயமாக்குவதற்காக.

பிரஹ்மம் யாருக்கும் துன்பத்தைக் கொடுத்துத் தன் வயமாக ஈர்க்காது. அருவக்கடவுளும் அழைக்க முடியாது. முகுந்தன் விழியில் மூவுலகத்தையும் தன் வயமாக்கும் வலிமையுள்ளது. ஜெகத்தை ஈர்க்கும் வலிமை ஜெகதீசன் பால் உண்டு.

கோபிகள் — சக்ரபாணே! உனது கண் கள்வன். திருடனுக்குத் தலைவன். சக்ரபாணி — என் கண் எதைத் திருடியது? கோபிகள் — திருடுவது சாமான்யம் அல்ல. சாமான்ய திருடன் புண்ணியகாலத்தில் திருடான். தீர்த்த-தலங்களில் திருடான். நல்ல மக்களிடம் திருடவே மாட்டான்.

ஆனால் உனது கண்களோ, சரத்துரிது, புண்ணிய மாசம், புனிதகாலம், கார்த்திகை, மார்கழி மாதங்களிலும் திருடியிருக்கின்றன. தடாகத்தில் ஆழமான நீரில் திருடி இருக்கிறது. சாதுஜாத சத் உயர்குலத்தில் பிறந்த நல்லவர் இடத்தில் திருடியிருக்கிறது. இக்களவும் இரவில் நடக்க-வில்லை. பின்னை? பகலில் நடந்திருக்கிறது. தூய்மையான பகலில் நடந்திருக்கிறது. இரட்சிக்கப்படாத பொருளைத் திருடவில்லை. சரசிஜோதர ஸ்ரீ முஷா— தாமரைமலர் தனது விரிவான வயிற்றுக்குள் வைத்திருந்த சௌந்தரியத்தைக் களவாண்டிருக்கிறது.

திருடுவது உனக்கு இன்றைக்குள்ளதல்ல, பழங்-காலத்து பழக்கம். "என்னுள்ளம் கவர் கள்வன்" தேவாரம். வாசுதேவனை வந்தனை செய்தால் செய்தவர் பாவத்தைக் கொள்ளைக் கொள்கிறான். பூதகி உயிரைத் திருடினான். கோபகுமாரி கைவளையலையும், அவர்கள் துகிலையும் திருடினான். யாராவது இவன் கண்ணை நோக்கினால் அவர் கண்ணையும் கருத்தையும் திருடுவான். மேலும் "தஸ்கராணும் பதயே நமோ நம" சுருதியும் உன் குணத்தை உள்ளவாறு உணர்த்துகின்றது. திருடர் தலைவனுக்கு வணக்கம் என்று பொருள் கொள்ளவும். ஜனார்தன! உனது விழி மூவுலகு முதல்வன் ஸ்ரீமன் நாராயணன் மனைவி மகாலட்சுமியையும் திருடிவிட்டது. இவ்வளவு வலியது உனதுவிழி.

குற்றத்திற்கு ஒருமுறை இருக்கிறது. ஒரு குற்றம் வந்தால் அடுத்தடுத்து குற்றம் வந்து கொண்டேயிருக்கும். 'சுகர்' நோய் வந்தால் எல்லா நோயும் வரும். இலை அளவு

குற்றமும் பழக்கத்தால் மலையளவு ஆகிவிடும். தரங்கம் கடலாகி விடுகின்றது. ''விஷவிருட்சோபி சம்வர்த்ய சுவயம் சேத்தும் ந சாம்ப்ருதம்'' என்பது பழமொழி. தான் வளர்த்த மரம் நச்சுமரமாக இருந்தாலும், தன் கையால் வெட்டுவது முறையல்ல.

ஜெகதீசுவர! நீயெங்கள் இதயத்தில் அன்பிற்கு வித்திட்டாய், அது உனது நேயத்தால் முளையாகி, கிளையாகி விட்டது. புல்லாங்குழல் ஊதிமரமாக்கினுய்.பூத்துக் காய்த்து கனியாகும் நேரத்தில் சுவைக்கும் தருணத்தில் சுவைக்-காமல் மறைந்து விட்டாய். உழவுத் தொழில் செய்பவன் எவ்வாறு நிலத்தை உழுது நட்டு, நீர் பாய்ச்சி களையெடுத்து விளைந்து அறுவடையாகும் நேரத்தில் அன்னியநாடு சென்று விடுவானே, அவ்வாறு இருக்கிறது உன் செயல். தோழனே! அவ்வாறு செய்யற்க. ''தோஷாகரோபி குடிலோபி'' சந்திரன் இரவிகு சுவாமி, அதனுல் குற்றம் உடையவன், மூன்றாம்-பிறை சந்திரன் வளைந்தவன். இதனுனும் தோஷமுடையவன். இருப்பினும் பகவான் சங்கரன் அதை தன் சிரமிசை வைத்திருக்கிறார்.

காரணம் என்னே? தன்னைப் பற்றிஇருப்பவர் பால் குணதோஷம் பார்க்கப் படாதென்பது கருத்து. நாதனே! எங்களிடம் குணகுற்றங்கள் இருப்பினும் எங்களைத் தியாகஞ் செய்யலாமா? நாங்கள் உன் தாசிகள் அல்லவா? விலை-யில்லாத தாசிகள். நாங்கள் உன்னைப் பற்றிஇருப்பவர்கள்.

சீவர்களுக்கு ஈசுவரானுபவம் குறைவாகத் தான் உண்டாகும். நிரம்பப் பேர்களுக்கு உண்டாகிறதே இல்லை. அருவமாகவோ, உருவமாகவோ, ஆத்மருவமாகவோ, எந்த ரூபமாகவோ இறைவன் கிடைத்து விட்டான் என்ற அனுபவம் வருமானுல் எங்கும் இன்பமே இன்பம். ஆனுல் இவ் வின்பம் ஞானிகளுக்கு உண்டாகும். சம்சாரிகளுக்கு உண்டாகாது. அவர்கள் இதை அனுபவிக்கிறதுமில்லை.

''எங்கெங்கும் பார்த்தாலும் இறைவடிவம் அம்மே'' என்பது சமயோசிதமாலே. இறைவன் தாகம் சம்சாரிகளுக்கு உண்டாகிறதில்லே. ஏன் உண்டாகிறதில்லே? சம்சாரிகள் நெஞ்சம் கல்லாகிவிட்டது. ''நெஞ்சக் கனகல் நெகிழ்ந்துருக'' அனுபூதி. ''கல்லேனும் ஐய ஒரு காலத்திலு ருகும் என் கல் நெஞ்சம் உருகவிலேயே என்ருர் தாயுமானவர். பணம் கிடைக்கவில்லேயே என்று கவலே வருகிறது. பெண்டிர் இல்லேயே என்று கவலே வருகிறது. பிள்ளேயைப் பற்றிய கவலே, உற்றார் உறவினரைப் பற்றிய கவலே. சொத்து சுகத்தைப் பற்றிய கவலே. ஆனுல் இறைவன் நமக்குக் கிடைக்க வில்லேயே என்னும் கவலே மனிதனுக்கு வரவில்லே. இதனுல் இவன் மனம் கல்.

சைதன்ய மகாபிரபு — ஸ்ரீ ஹரே! உனது பிரிவு ஆற்றாமையால் எனக்குத் துன்பத்தைக் கொடு என்ருர். இறைவன் நம்மை விட்டு வெகுதூரம் பிரிந்து விட்டானோ என்னும் வியாகுலம் இதயத்தில் வரட்டுமே. பிரிவாற்ருமை வரும்பொழுது சித்தம் நெகிழ்ந்துருகும். கண்ணீர் மல்கும். அசுருபூர்ண ஆகுலம்-'கீதை. அசுரு - கண்ணீர், ஆகுலம் - கவலே. இந்நிலேயில் வரும் துன்பமும் இன்பமேயாம். காரணம்? பக்தன் துன்பத்தைத் துடைப்பதற்கு இறைவன் முன்னே வருகிறான்.

பாமரமக்கள் விஷய போகங்களில் அழுந்துவர். இம்சை, துரோகம், அனாசாரம், பொய், பித்தலாட்டம், கபடம், சூது, வஞ்சனே, இவைகளில் முங்கிகுளிப்பர். இவர்களுக்கு இறைவன் வேண்டுமென்று எண்ணமே கிடையாது. அன்பர்கள் இவர்களிடத்தில் கவனமாக இருக்கவேண்டும்.

கோடீசுவரன் சூது விளேயாடுகிருன் என்று நாமும் சூதாடவேண்டுமா? லட்சாதிபதி குடிக்கிறான் என்றால் நாமும் குடிக்கவேண்டுமா? இவர்களெல்லாம் காலத்தைப்

பாழாக்கும் போது நாம் மாத்திரம் ஏன் இறைவழிபாட்டில் ஈடுபடவேண்டும் என எண்ணலாகாது. சூதாடிப்பணக் காரனையும், போகி அரசனையும், சண்டையிடும் பயில் வானையும் மதிக்கலாகாது. அவர்களுக்கு மரியாதை அளிக்கக்கூடாது. அன்பன் அடியவரைத் தான் மதிக்க வேண்டும். ''வாழ்க அடியவர் மன்னு மாதவம்'' என்றபடி. சிறந்த அடியவர்களும், நிலைத்த தவமும் நெடிது வாழ்க என்பது பொருள். இறைவனை மறந்து இழிந்த போகத்தில் அழுந்துபவர்க்கு காலம் பதில் சொல்லும். இத்தகைய மனிதன் இறந்த பிறகு மரணவரி கட்டு வானேயொழிய தானம் பண்ணி அதனால் வரும் இன்பத்தை நுகரமாட்டான். ஆவியைத் துறப்பான் பாவிமகன் பணத்தைத் துறக்க மாட்டான்.

நீ உன் உள்ளத்தை நோக்கு. உனது இதயத்தில் எப்போதாவது இறைவனுக்காக எண்ணம் எழுந்தது உண்டா? உள்ளதை ஒளியாமல் உரை. அவனது இரசம் உன் நினைவுக்கு வருகிறதா? இறைவன் எங்கு கிடைத்தாலும் விலை கொடுத்து வாங்கிக்கொள். என்ன விலை கொடுத்தாவது வாங்கு.

சம்சாரி - என்ன வாங்குவது? மகாத்மா - கிருஷ்ண பக்தி கலந்த புத்தி. அது எங்கே கிடைக்கிறது? ம- அதைக் கேளாதே. எங்கே கிடைத்தாலும் கேள். வாங்கு. யாரிடத்தில் கிடைத்தாலும் வாங்கு. இடத்தைப் பாராதே, என்னஜாதி என்று கேளாதே. யாரால் கொடுக்க முடியுமோ அவரிடம் வாங்கு. சம்சாரி - என்ன விலை கொடுக்க வேண்டும்? எவ்வளவு கொடுக்க வேண்டும்? தானஞ் செய்ய வேண்டுமா? எவ்வளவு தானஞ் செய்ய வேண்டும்? எவ்வளவு தவம் செய்ய வேண்டும்? ஜெபம் பண்ண வேண்டுமா? எவ்வளவு பண்ண வேண்டும்?

மகாத்மா - இவைகளைக் கேளாதே அதற்கு விலை ஆர்வத்தோடு செய்யும் முயற்சி தான். அது = பக்தி. சம்... முயற்சி எவ்வளவு செய்ய வேண்டும்.? மகா... வடை, காபி, அப்பம், அதிரசம் இவைகளை உண்ண எவ்வளவு முயற்சி எடுக்கின்றாயோ அவ்வளவு எடுத்தால் போதும்.

இறைவன்பக்தி அடியவர் நட்பால் வரும். வளரும். தானம் தபம் கோடிக்கணக்கில் செய்தாலும் வராது. "நூருகம் செய்யினும் காணுமோ காணுதே" கைவல்யம். ஞானம் இல்லாமல், தானம் தருமம் நூறுயுகம் செய்யினும் முக்தி வராதென்பது முடிபு.

அன்பனை யனுகும் போது, பகவானுடைய ஞாபகம் வரும் வழக்கறிஞரைக் கண்டால் நீதிமன்றம் நினைவு வரும். வைத்தியரைக் கண்டால் பிணிகள் ஞாபகம் வரும். அம்மாதிரி அடியாருறவு கிட்டும் போது ஆண்டவன் எண்ணம் தோன்றும்.

அன்பன் மனத்தொடு நம் மனத்தைப் பொறுத்தும் பொழுது அவன் அனுபவம் மனத்தில் உதிக்கும். அன்பு மார்க்கத்தில் எல்லோராலும் மதிக்கத்தக்கவர் கோபிகள். அவர்கள் இதயத்தோடு தங்கள் இதயத்தை இணைக்கும் போது அவர்கள் உள்ளத்தில் ஊறும் இன்பரசம் நம் இதயத்தில் நிரம்புகிறது.

கோபிகள் சிலர் வெள்ளைச் சிந்தையர். சிலர் ஈரம் உள்ளவர்கள். மாயவனைக் காணமல் அத்தூயவர்கள் மருவுகிறார்கள்.

இரண்டாவது சுலோகம் முற்றிற்று.

---

## சுலோகம் 3

விஷ ஜலாப்யயாத் வியால ராட்சசாத்
வர்ஷ் மாருதாத் வைத்யுதா னலாத்!
விருஷமயாத்ம ஜாத் விஸ்வதோ பயாத்
ரிஷப தேவயம் ரட்சிதா முஹு : 3

கோபிகள் இ . ள் கூ று வ தா வ து — சுவாமின் வாழ்க்கையில் எப்பொழுதெல்லாம் விபத்து நேர்ந்ததோ, அப்பொழுதெல்லாம் நீ ஓடி வந்து எங்களைக் காப்பாற்றினுய். இப்பொழுது விபத்து வந்திருக்கிறது. இதிலிருந்து எங்களை ஏன் காப்பாற்றவில்லை? விஷ ஜலாப்யயாத்— கா ளி ய நாகத்தின் நஞ்சைப் பருகி பசுக்களும், கன்றுகளும், கோபாலர்களும் மடிந்து விட்டார்கள். எங்கள் உறவினர்-களும் பசுக்களும் இல்லாது போனுல் நாங்களும் இறந்-திருப்போம். முகுந்தா! நீ உனது அமிருதமயி (பார்வை) திருஷ்டியால் எங்களை வாழவைத்தாய். ''வியால ராட்சசாத்'' அகாசுரன் மலைப்பாம்பு வ டி வ ம் கொண்டு வந்தான். கோபாலர்களும், பசுக்களும் அதன் வாயில் சென்று விட்டனர். இதைக் கேள்வியுற்று பாம்பின் வாயில் நுழைந்து அவர்களைக் காப்பாற்றினுய்.

வைணதேய வாகன! வ ர் ஷ மா ரு தா த் — வைத்யுதானலாத் - தேவேந்திரன் சீற்றம் கொண்டு பிரளய காலீன மழையைப் பெய்யத் தொடங்கினுன். மேலும் காற்றையும் பெரும் புயலையும் உ ரு வா க் கி னு ன். மின்னலையும் இடியையும் தோற்றுவித்தான். அங்நேரத்தில் மு ரா ரே! கோவர்த்தனகிரியை ஒரு கரத்தால் பிடிங்கிக் குடையாக்கி சகல கோகுலவாசிகளை இரட்சித்தாய்.

அனலாத்—இருமுறை முஞ்சாக்னியும், தாவாக்கினியும் எங்களை எரிக்க வேண்டி எண்ணின. ஒரு முறை யமுனை கரையிலும், மற்றொருமுறை முஞ்சவனத்திலும் எரிக்க வந்தன. இவ்விரண்டில் இருந்தும் எங்களைக் காப்பாற்றினாய்.

விருஷம யாத்ம ஜாத் — காளை வடிவம் கொண்டு அரிஷ்டாசுரன் எங்களைக் கொல்ல வந்தான். அப்போதும் காப்பாற்றினாய். மயதானவனுடைய மைந்தன் வியோமாசுரன் விரஜவாசிகளை அழிக்க வந்தான். அப்பொழுதும் எங்களை ரட்சித்தாய்.

விஸ்வதோ பயாத் ரிஷபதே வயம் ரட்சிதாமுஹஹு:" எங்கள் நாயகனே! எவ்வளவு தான் எடுத்துரைப்பது? திரணவர்த்தன், காளியன், பகாசுரன், வத்சாசுரன், தேனுகாஅசுரன், கேசி முதலிய பல அசுரர்கள் வந்தார்கள். எங்களைக் கொல்லத் துணிந்தார்கள். அவர்களால் எழுந்த அச்சத்தை அச்சுதா! நீ அகற்றினாய். இப்பொழுது உனது பிரிவாற்றாமையால் நாங்கள் சாகட்டும் என்று எங்களைக் காக்கவில்லை. அன்று அவர்கள். இன்று நினது வியோகம் என்னும் அசுரன் வதைக்கிறான். இது நியாயமா? உனக்கு இது தருமமா? அன்று போல் இன்றும் பிரிவு வேதனையால் வாடும் எங்களை இரட்சிக்கவா.

உண்மையான பக்தன் மரணத்திற்கு அஞ்சுகிறதில்லை. மரணம் இறைவனோடு நம்மைச் சேர்ப்பிக்கும் இனிய நண்பன். ஆதலின் மரணத்தைக் கண்டு அஞ்சுவதற்கு என்ன காரணம்? காளியநாகம் தீண்டி இருந்தால், பகவான் இந்திரன் பொழிந்த பெரும் மழையால் செத்து இருப்போமானால், தாவாக்கினியால் மடிந்திருந்தால், ஜனங்கள் கோபிகள் மேற் கூறியவர்களால் இறந்து போனார்கள் என்பார்கள்.

ஒரு அசுரன் கொன்ருல் அவன் மரணத்திற்குக் காரணமானவன். அரிஷ்டாசுரன் கொன்றிருந்தால், அவன் விரஷபன். த ரு ம தே வ தை. தருமத்திற்காக கோபிகள் இறந்தார்கள் என்பார்கள். அறத்தை இரட்சிக்கும் நிமித்தம் என்பார்கள். தருமத்தின் நிமித்தம் இறப்பது மிக நன்று. கேசியென்னும் அசுரன் வேதத்திற்கு அறிகுறி. அவனுல் உயிர் துறந்திருந்தால் வேதத்தைக் காக்கும் பொருட்டு இறந்தார்கள் எனலாம். வியோமாசுரன். வியோமம் - ஆகாசம். ஆகாசம் சமாதிக்கு அடையாளம். சமாதிக்காக இறந்திருப்பார்கள் என்றுங் கூறுவர். ஆனால் உன் நிமித்தமாக, உனது பிரிவால் நாங்கள் இறந்தோமானுல் இக்களங்கம் உன்னைத்தான் சாரும்.

உலகம் என்ன உரைக்கும்? க ண் ண ன் (வம்சி) புல்லாங்குழல் வாசித்து வனத்திற்கு வரச்சொல்லி பிறகு மறைந்து கோபிகள் உயிரைக் குடித்தான் என்று உலகம் சொல்லும். வாழ்க்கையில் நாங்கள் உனக்கு ஒரு சுகமும் தரவில்லை. கையால் உனக்குப் பணிபுரியவில்லை. கால்களால் நடனம் ஆடி வாயார வாழ்த்தி உனது சிறந்த குணங்களை வர்ணித்து இன்பத்தைத் தரவில்லை. ஆனுல் நாங்கள் இறந்து உனக்கு களங்கத்தை அளிக்கிறோம். எனவே எங்களைக் கொல்வது முறைதானா?

இதில் ஒரு தொனி தொனிக்கிறது. அஃதென்னே? நாங்கள்உனக்கு களங்கத்தைக் கொடுத்துச்சாகமாட்டோம். நீ இங்கு அவசியம் வர வேண்டும். நாங்கள் சாகவேண்டும் என்னும் எண்ணம் உனக்கு இருக்குமானுல் உன்னைக் கண் குளிர பார்த்துவிட்டு இறந்து விடுகிறோம் என்றார்கள்.

ரிஷபத்தே — ரிஷபத்திற்குப் பொருள் — விரஷபம். கணவன் "காளியம் இந்திரியாணி ஆகு:, விஷயாத் விஷம் உச்யதே" இந்திரியங்கள் நாகம். விஷயங்கள் விஷம்.

உலகில் முதன் முதலாக விஷந்தான் கிடைத்தது. அதுவும், தண்ணீரில் தான். தண்ணீர் ஜடம். விஷயத்தில் இந்திரியங்கள் போய்ப் பொருந்தினுல் அதிகாரிக்கு அது மரணம் ஆகும்.

பகவான் தனது கிருபையால் மாந்தர்களுக்கும்வாழ்வு அளிக்கிறார். மண்ணில் வாழும் மாந்தர்கள் போகத்தில் அழுந்தும் போது தனது அருளை மீண்டும் பெற்றுக் கொள்கிறார். விஷயம் பழிதரும் படுகுழி. அதில் விழுந்த விடர்களை (காமிகளை) காப்பாற்றினுலும், விஷய வாசனை என்னும் அரவு தீண்டி அன்பை விழுங்கி விடுகிறது. அரவு—பாம்பு. எப்போது சத்சங்க வாசனை, பகவத் வாசனை, இதயத்தில் வளர்ந்து வருமோ அப்போது அகாசுரன் அடியோடு அழிந்து விடுவான். விவகாரத்தில் தடை அசுரன். வேதாந்தத்தில் தடை பாவம். சுரரும் தடை, புண்ணியமும் தடை, பாவமும் தடை. இந்திரன் மழையாலும். இடியாலும், பெரிய புயலாலும் விரஜபூமியை அழிக்கத் துணிந்தான், சொர்க்கவாசனை புண்ணிய வடிவமாக நின்று மனிதன் முன்னேற்றத்திற்குப் பெரும் தடையாக இருக்கிறது, சொர்க வாசனை, இறைவனை எய்வதற்கு முட்டுக்கட்டை. வாசனை புயல்காற்று. இதிலிருந்து காப்பவன் இறைவன் தான்.

விரஷபாசுரன் - தருமச்சிந்தனை. தருமத்தைக் காக்க வேண்டும் என வேட்கை. கேசி என்னும் தானவன் = வேதத்தை இரட்சிக்க வேண்டும் என ஆசை. வியோமா-சுரன் = சித்தத்தை ஒருமை படுத்துவது. இவையாவும் அன்புமார்க்கத்தில் வம்பான தடைகள். இறைவன் பக்தியில் மேலே மொழிந்தவை யாவும் (முட்டுதான்) பெரும் தடை தான்.

ஒரு வேதியன் காசி யாத்திரைக்குச் சென்றான். போகும் வழிகளில் பல காட்சிகளைக் கண்டான். களித்து

நின்றான். காசிக்குப் போகாமலே ஊர் திரும்பினான். இதற்குக் காரணம் இடையில் கண்ட காட்சிகள் தான். சாட்சியை அடையவொட்டாமல் இருப்பது காட்சிகள் தான். இவைகளிலிருந்து மக்களைத் திருப்பி நேர்வழியில் கொண்டு வருவது இறைவன்.

ஒரு ஊரில் கணவனும் மனைவியும் இருந்தார்கள். தெய்வகாரியத்தில் சிறந்த முறையில் ஈடுபட்டு வந்தனர். தானம், தவம், பூஜை, ஜெபம் இவைகளை வழுவற நடத்தி வந்தனர். திருவருளால் சகல லெட்சணமும் பொருந்திய ஒரு ஆண் மகவு பிறந்தது. அன்று முதல் அக்குழந்தையை வளர்க்கவும், அதைப் பேணவும் கண்களால் கண்டு களிக்கவும், அனுதினம் அதற்குப் பணிபுரியவும், இவை-களிலே காலத்தைக் கழித்தனர். கடவுளை மறந்தனர். கடமையைத் துறந்தனர். புத்திரபாசத்தில் பொருந்தினர்.

இவ்வாறு இடைவிடாது இனிய குழந்தையில் ஈடுபட்டுப் பொழுதைப் பாழாக்கினர். இறைவன் எண்ணினான், எக்குழந்தை நிமித்தம் நம்மை மறந்தனர். மதி இழந்தனர். ஆகையால் அக்குழந்தையை வாங்கிக் கொள்வது நலம் இன்று எண்ணித் திருப்பி வாங்கிக் கொண்டார். குழந்தை இறந்து போயிற்று. குழந்தை இறந்ததும் இருவரும் வருந்தினர். மீண்டும் இறைபணியில் ஈடுபட்டனர் மைந்தர் தம் கவலையை மறந்தனர். மாதவனை நினைத்தனர்.

புதல்வனைத் தந்தவர் புருஷோத்தமன். இறைவன் என்பது பொருள். தான் கொடுத்ததைத் தான் வாங்கிக் கொண்டுத் தன் திருவடியை வழிபடச் செய்தான். இது இறைவனது எண்ணற்ற கிருபை தானே. இருவருக்கும் விளையாட்டுப் பண்டமாக இறைவன் கொடுத்தான். அதை அவர்கள் பெற்று அரியை மறந்தனர். இந்நிலையில் அதிகாரிகள் இறைவனிடத்தில் நம்பிக்கை வைக்கவேண்டும்.

அவர் நம்மை இரட்சிக்க வேண்டும். இது தான் முறை. இறைவனிடத்தில் விசுவாசம் வைக்காத ஜீவன் இங்கும் கெட்டான் அங்கும் கெட்டானுகத் திரிவான். வழியை மறந்தவன் போல் கதியை இழந்து அலேவான்.

கோபிகள் விசுவாசம் இமையமலேயினும் அதிகம் உறுதியுடையது. வெயிலிடைப்பட்ட வெண்ணெய் எவ்வாறு உருகுமோ, அவ்வாறு அவர்களுள்ளம் அச்சுதனுக்காக உருகுகிறது. சிலர் ஆடு வளர்ப்பார்கள். அதற்குப் பல உணவு கொடுத்து நன்றாகப் பேணுவார்கள். முடிவில் வெட்டிக் கொலே செய்வார்கள். தான் வளர்த்த ஆட்டைத் தானே வதை செய்வார்கள்.

நியாயமா? இது தருமமா? பிராணநாதா! நீயும் அதுபோல எங்களேச் சகல விபத்துக்களிலிருந்தும் காப்பாற்றியது இப்போது கொல்வதற்காகவா? கோபாலன்- கோபிகளே! நீங்கள் சாகவேண்டுமெனத்துணிந்தால் நான் எங்ஙனம் இரட்சிப்பது என்ருன். மேலும் சாகவேண்டும் என்று துணிந்தவரை யாரால் காக்க முடியும், காக்க முடியாது தானே.

அன்புமார்க்கத்தில் எப்போதும் மதுர விவகார மட்டும் நடக்காது. சிலவேளே கடு விவகாரமும் நடக்கும், கடு கசப்பு. எப்போதும் இனிப்பு உண்பவனுக்கு உணவில் அருச்சி உண்டாகும். எனவே இடை இடையே காரம், புளிப்பு உட்கொள்ள வேண்டியிருக்கும், உடலுக்குச் சீனி தேவைப்படுவது போல் காரமும் தேவைப்படுகிறது. இதய சுத்திக்கு வாழ்க்கையில் கசப்பும் அவசியம் ஆகும். அந்நிலேயில் தான் அன்பு மலர்கிறது.

விரஜபூமிக்கு விரோதமாக எது, யார், வந்தாலும், அவர் அழிவர். பசு, பட்சி, அசுரன், தேவதை, யாராக இருந்தாலும் அவர்களே அச்சுதன் விட்டு வைக்க மாட்டான்.

அவர்களை வென்றுன். மேதினியில் கொன்றுன். யார்? ரிஷிகேஷன், இறைவனுக்கு இனிய தொழில் ஐந்து. 1. பிரமனுக இருந்து படைப்பது 2. விஷ்ணுவாக இருந்து காப்பது, 3. ருத்திரனுக இருந்து அழிப்பது, 4. மறைப்பது, 5. குருவாக இருந்து அனுக்கிரகம் பண்ணுவது. முரளிதர! நீ விரஜபூமிக்குக் கிருபை செய்தாய்? எங்களுக்கு அனுக்கிரகம் செய்தாய் என்று கோபிகள் கூறினுர்கள். மறைந்திருப்பது அருபபிரமம். நினது தொழில் அன்று. ஆதலின் முகுந்தா! முன்னே வந்து தோன்று. மோதத்தை தா. மோதம்—ஆனந்தம்.

ஸ்ரீ கிருஷ்ணன் — நான் உங்களைக் காக்கவில்லை. விரஜவாசிகள் நாராயணருடைய பக்தர்கள். அம்பிகா வனத்தில் சிவனையும், மதுவனத்தில் 'சிவகாமியையும் வழிபடுகிறார்கள். எனவே விரஜபூமியைக் காப்பவர் நாரயணனும், சிவனும் ஆம். இந்திரன் பெய்த மழையால் விரஜபூமி அழிய ஆரம்பித்தது. அதைக் கோவர்த்தனம் என்னும் மலை இரட்சித்தது. நான் சாதாரண கோபகுமாரன்.

கோபிகள் — நீ கோபகுமாரனல்லன். நீ ஈசுவரன். எல்லோருக்கும் அந்தர்யாமி, அந்தராத்மா. அனைவர்க்கும் திருக்கு, திருக்குஞானம், கண், திருஷ்டாவும் நீதான்.
கோவிந்தன் — நான் ஈஸ்வரனுக இருந்தால் பசுக்களை மேய்த்துக் கொண்டு வனத்தில் ஏன் திருகிறேன்?
கோபிகள் — புருஷோத்தம! பூமியிலுள்ள மாந்தர்களைக் காப்பதற்கு வந்திருக்கிறாய். மனமோகன! நீ எங்களைக் காக்கக் கடவாய். ஏன் எனின்? நீ கோபகுமாரன் மட்டுமல்ல, பின்னை? கடவுளும் ஆவாய். இதை அடுத்த சுலோகத்தின் மூலமாக விளக்குகிறார்கள்.

மூன்றாவது சுலோகம் முற்றிற்று.

---

# சுலோகம் 4

நகலு கோபிகா நந்தனோ பவான் அகிலதேஹி நாம்

அந்தராத்மதிருக் விகநஸார்த்திதோ விஸ்வகுப்தயே சக உதேயிவான் சாத்வதாம் குலே 4.

இ . ள்

பிரேமை மார்க்கத்தில் காதலனுடைய குணங்கள் காணப்படுவது இயல்பு. ப்ரேமி த ன து பிரேமியின் பால் ஈசுவரனைப் பார்க்கிறுன். பிரேமி=தனது பிரியன். பிரியனை ஈசுவரனாகக் கருதுவான். சாதரண மனிதனிடத்தில் ஈசுவரத்வம் நிலைத்திருக்கிறதில்லை. ஈசுவரத்தன்மை ஈசுவரனிடத்தில் நிலைத்திருக்கும். நெருப்பில் சூடு இருப்பது போல.

துன்பத்தின் இயல்பு என்னை? எதற்காகத் துன்பம் உண்டாகிறதோ அதை அதிகப்படுத்திக் காட்டும். பொருள் மிகுதியாக இருந்தால் அதன் பெருமை தெரியாது. எப்பொழுது பொருளுக்குக் கஷ்டம் உ ண் டா கி ற தோ அப்பொழுது அதன் பெருமை தெரிகிறது. பணம் இல்லாத நேரத்தில் அதன் கஷ்டம் நமக்கு அதன் அருமையை உணர்த்தும். இம்மாதிரிப் புகழ், புதல்வன், பெண், நண்பன், மாதா, பிதா, இவர்களில் யார்க்காகத் துன்பம் உண்டாகிறதோ அவருடைய பெருமை காணப்படும்.

சம்சாரிகளுக்குப் புகழுக்காக, ப த வி க் கா க, பொருளுக்காகத் துயரம் உண்டாகிறது. இறைவனையின்னும் பெறவில்லையே, அவனருள் கிடைக்கவில்லையே, அ வ ன் அன்பிற்காக ஒரு சொட்டுக் கண்ணீர் விடவில்லையே என்று கவலை வருகிறதில்லை. இதனுல் இறைவனின் பெருமை தெரியவில்லை, அவன் எண்ணமும் அவர் மனத்தில் உதிக்கிறதில்லை. அவன் இறைவன்.

உங்களுக்கு இன்பம் எவ்வாறு வருகிறது? பெண்டிர் பிள்ளை, பொன், மண், பொருள், பதவி, இவைகளால் வருகிறதா? அல்லது இறைவனை நினைப்பதால் வருகிறதா? இறைவனை நினைப்பதால் இன்பமும் அவனை நினையாததால் துன்பமும் வருமானல் இறைவனது பக்தி இதயத்தில் எழுந்து விட்டதென்று நீங்கள் எண்ண வேண்டும். கோபிகள் தனது பிரியதமன் கோவிந்தனிடம் இருந்து வெறுப்படைந்து விட்டார்கள். வெறுப்புக்குக் காரணம் இன்னும் அவன் தெரிசனம் கிட்டவில்லையென்பது தான். அவனை மனதால் உள்ளுவதால் மாதவன் மகிமை மலர்ந்தது. உள்ளுதல் = நினைப்பது.

'நகலு கோபிகா நந்தனே பவான்' பவான் = பானி—நக்ஷத்ராணி, தை: யுத: பவான். பானம் சந்தி அஸ்ய இதி பவான். உடுக்களின் பெயர். ப, சந்திரனுக்கு பவான் என்று ஒரு பெயர். சோமசுந்தர! நீ இந்துவைப் போல ஒளியுடையவன். யாருடைய உறுப்புக்களிலிருந்து பிரகாசம் பொழிகின்றதோ அவர் பவான். யாருடைய நறுமணத்தால் நாசி திருப்தி அடைகிறதில்லையோ, யாரைத் தீண்டித்துவக்கு நிறைவு உறவில்லையோ அவர் பவான்.

சக்ரபாணே! உண்மையில் நீ கோபகுமாரன் அல்லன். பின்னை? நீ சகல பிராணிகளுக்கு அந்தராத்மாவும், திருஷ்டாவும் ஆம். திருஷ்டா - பார்ப்பவன். நான்முகன் வேண்டுகோளுக்கிணங்க விசுவத்தை இரக்ஷிப்பதற்காக நந்தகோபன் இல்லத்தில் தோண்றினுய். விசுவபாலனத்திற்காகத் தோன்றிய நீ யெங்களைப் புறக்கணிப்பது முறை தானு? முறையாகாது. உலகத்தைக் காக்கும் பொருட்டு அவதாரம் எடுத்த நீ உன்னுடைய அன்பர்களைக் காவாக்கால் உனக்கு என்ன பெருமை? இஃது நல்லதல்ல. தீனபந்தோ! உன்னைக் காணுமல் நாங்கள் தீனர்களாக ஆகிவிட்டோம். தீனர்கள் = ஏழைகள்.

எப்பொழுது இறைவனைத் தனது வடிவமாக அறிகிறானோ அப்பொழுது அவன் ஞானியாகிறான். ஏழையாவதற்குக் காரணம் என்னை? ஒன்றுமில்லையென்பது குறிப்பு. வாத்சல்ய பாவத்தில் இறைவனைப் புத்திரனாக எண்ணுவார்கள். ஆண்டு (பிரேம்) நட்பு செய்கிறுர்கள், அவ்விடத்தில் இறைவன் சிறியவன். அன்னையசோதை பிள்ளையை அதட்டுகிருள். அப்பொழுது கண்ணன் கண்ணைக் கசக்கிக் கொண்டு முன்னே அழுது கொண்டு நின்ருன். எவனுடைய அச்சத்தால் அக்னி முதலிய அகில உலகமும் அஞ்சுகிறதோ அவன் அன்னையின் அருகாமையில் அழுது கொண்டு நிற்கிருன்.

''பயாதஸ்ய அக்நிஸ் தபதி'' வேதாந்தம். சமத்வத்தில் அன்பன் பாவம்(எண்ணம்) உண்டாகிறது. தோழன் என்னும் பாவத்தில் தீனத்தன்மை வருவதற்கிடமில்லை. தாஸ்பாவத்தில் மட்டும் தீனபாவம் வர இயலும். கோபிகளுடைய இதயத் தைப் பிரிவு துன்புறுத்துகின்றது. காமக்கடுங்கனல் கருக்கி வாட்டுகிறது. உள்ளத்தை வேதனை-வண்டு துளைத்த மாதிரி துளைக்கிறது. துளையுண்ட மனம் முராரிக்காகத் தவிக்கிறது.

இறைவன் இதயத்தில் தோன்ற வேண்டு மென்னும் எண்ணத்தால் துடிப்பு வரவேண்டுவது தான். பிரியமோக னுடைய ஆசையென்னும் பாம்பு தீண்டிக் கொண்டே யிருக்க வேண்டும்.

தங்கத்தை நகை செய்ய வேண்டுமானுல் அதை நெருப்பில்ப் போட வேண்டும். உருக்கி வார்ப்பில் விட்டு வார்த்து நகை செய்ய வேண்டும். அம்மாதிரி பக்தியினுல் உள்ளத்தையுருக்கி அணி செய்து இறைவனுக்கு அணிவிக்க வேண்டும். மனம் கரைகிற போது அதில் இறைவனுடைய திருவுருவம் தோன்றுகிறது. பகவானை

நினைந்து நெஞ்சம் நெகழ்ந்துஉரோமம் சிலிர்த்துக் கண்ணீர் மல்கிக் கரைய இல்லையானால் மோகனின் பக்தி உதிக்காது. சித்தச் சுத்தியுண்டாகாது.

உள்ளம் ஒரு தடாகம். தடாகம் = குளம். விஷய மென்னும் நிழல் விழுகிறது. இந்நிழல் விழாதிருக்க வேண்டும். விழாது இருப்பதற்கு என்ன செய்யவேண்டும்? இதற்கு உபாயம் அங்கு பிரகாசம் வர வேண்டும். அப்பொழுது உள்ளத்திலிருக்கும் இருள் ஓடிவிடும். ஒளி எது? ஆண்டவன் பிரிவு ஆற்றாமை. அதுவே உள்ளொளிக்கு நிமித்தமாக இருக்கிறது. மேகம் நீங்கியதும் மிளிர்கின்றது சூரியன், அவ்வமையம் நிழல் நீங்கி விடுகின்றது. அழிகிறது. பரமனது திருவுருவம் பளிச்சென்று தெரிகிறது.

வெள்ளையான உள்ளத்தில் நீ உதிக்கவேண்டும். வெள்ளையான உள்ளம் - கள்ளமில்லாத உள்ளம். தெளிந்த நீரில் பிரதிபிம்பம் விழுவது போல் எங்கள் உள்ளத்தில் விழவேண்டும் மாதவா! வரவேண்டும் என்பதுக் குறிப்பு.

ஒலியென்னும் பண்டிகை நேரத்தில் நீயெங்கள் கன்னத்திலும், முகத்திலும், மார்பிலும், குங்குமத்தைத் தடவினாய். பின்பு அழித்து விட்டாய். அது மறைந்தது. ஆனால் நீ எங்கள் உள்ளத்தை விட்டு மறையவில்லை. நீ கோபகுமாரனாக இருந்திருந்தால் உனக்கு எங்கள் வேதனை தெரியாமலிருக்கலாம். ஆனால் நீயோ ஈசுவரன். உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. எல்லாம் தெரிகிற உனக்கு எங்கள் பீடை யேன் தெரியவில்லை? தெரிந்திருந்தும் கவலைப் பட வைக்கின்றாய் ஜனார்தனா! சற்று மனம் இரங்காய்.

ஆகாச மண்டலத்தில் இருபத்தேழு நக்ஷத்திரத்தின் நடுவில் எவ்வாறு சந்திரன் வசிக்கிறானோ அவ்வாறு கிருஷ்ண சந்திரனாகிய நீயும் எங்கள் நடுவில் இருக்க வேண்டும் என்றார்கள் கோபிகள். நக்ஷத்ரத்தின்

மையத்திலிருக்கும் நிலா விளங்குவது போல் நிலாவை நிகர்க்கும் மேனியனே! நீயும் எங்கள் இதயத்தில் இருந்து துலங்குவாயாக. எங்கள் நடுவில் இருப்பதால் எங்களுக்குள் எள்ளளவும் வெறுப்பு வராது.

''நகலு கோபிகா நந்தநோ பவான்'' நீ கோபிகளுக்கு மகன் அல்லன். நந்தராணிக்கு மகன் அல்லன். கோபி-களுக்கு ஆனந்தத்தை அளிப்பவனும் அல்லன், நீ.ஈயாதவன். நந்தன் என்னுஞ் சொல்லோடு ஒரு கதையிருக்கிறது. காசியில் நந்தன் என்னும் தனவான் இருந்தான். (செல்வந்தன்) அவன் பெயரால் இன்றைக்கும் ஒரு தெரு இருக்கிறது. அச்செல்வந்தன் ஈயாத உலோபி, ஒரு பிராமண கன்னிகைக்கு விவாகம் செய்ய வேண்டியிருந்தது. அவவேதியன் தன் மகள் திருமணத்திற்காகப் பணம் வேண்டுமே யென்று அந்தச் செல்வந்தனிடஞ் சென்ருன். அவனைக் கண்டான். தன் கன்னிகை திருமணத்திற்குச் சிறிது பணந் தேவையென்ருன். நந்தன் நாளை வாரும் என்ருன்.

கிராம வாசியாகிய மறையவர்க்கு நகரத்தில் வசிப்பதற்கு மிகக் கடினமாயிற்று. உண்பதற்கு உணவும் இல்லை, உறைவதற்கு இடமும் இல்லை. கங்கைக் கரையில் வாழ்வதைத் தவிர வேறு வழியில்லை. அஃதல்லாமல் வேறு என் செய்வார் வேதியர் பாவம். அன்று இரவைக் கழித்து விட்டு மறுநாள் அவரிடஞ் சென்ருர். முன் போல் மறுநாள் வாரும் என்ருன் நந்தன். இவ்வாறு பல நாள் நந்தன் கடத்தினன். வேதியர் பார்த்தார். இவன் நமக்குப் பணம் தரப் போவதில்லை யென்று எண்ணி ஒரு கவி பாடினுர் மறையவர்.

ஆதௌ நகார: பரதோ நகார; மத்யே நகாரே ஹதோந கார: இத்தம் நகாரத்ரய சம்யுதஸ்ய காதாந சக்தி: கலு நந்த

நஸ்ய. யாருடைய நாமத்திற்கு முன்னும், முடிவிலும் தடை வடிவ நகாரம் இருக்கிறதோ, நடுவில் மட்டும் ஒரு தானத்தை அறிவிக்கும்'தா'இருக்கிறதோ அந்த நந்தனுக்குத் தானம் பண்ணும் வலிமை எங்குளது? அவன் எவ்வாறு தானம் செய்ய இயலும். இயலாதென்பது முடிவு. இக்கதை போல் நந்தநந்தன் சாமசுந்தரனிடத்திலும் தான சக்தி எங்கே யிருக்கப்போகிறது? என்று கோபிகள் கூறுகிறுர்கள்.

இன்றைக்குள்ள மனிதர்களும் இம்மாதிரிதான் தானஞ் செய்வார்கள். சாத்விக தானம் செய்யாமல் அதைத் தாமசமாக்கிச் செய்கிறுர்கள். வாசலில் வந்தவரை மனம் கோணும்படி வைவது, நீங்களெல்லாம் உழைத்துச் சாப்பிட்டா லென்ன வென்று வசை மொழிவது. அதன் பிறகு சிறிது உணவு அளிப்பது. இவையெல்லாம் தாமச தானமாகும். இதன் மூலமாகக் கொடையாளிக்குப் பாவம் வரும். கோபிகள் — மனமோகன! நீயும் அம்மாதிரி கிருபணன்— ஈயாதஉலோபி. நீ தானசீலன் அல்லன் என்றனர்.

காரணம் என்னை? சிருங்கார இரசத்தில் காமத்திற்கு மூன்று கணைகள் – கண், சொல், அபிநயம். இம்மூன்றும் கோபிகளிடம் இருந்தன. அவைகளைப் பாலமுகுந்தனும் கையாண்டான். சிலநேரம் கோபிகளுக்கு அனுகூலமும், சிலநேரம் பிரதிகூலமும் ஆக நடந்து கொண்டான். ஆகை யால் இரசம் மாறி விட்டது. எனவே மடந்தையர் மாயவனை வேண்டினர். தீனபந்தோ! நீ நந்தகுமாரன் அல்லன். ஆகையால் எங்கள் விருப்பப் படி நடப்பாயாக என்றனர். அவர்களில் சிலர் — நீ யசோதையின் புதல்வனும் அல்லன். அங்ஙனம் இருக்க நீ எங்ஙனம் ஆனந்தம் அளிப்பாய் என்றார்கள். ஸ்ரீ ஹரி—நான் யார்?

''அகில தேஹி நாம் அந்தராத்ம திருக்கு'' உலகத்தி-லுள்ள மாந்தர்களுக்கு அந்தராத்மா. உள்ளிருந்து இயக்கு பவன். திருஷ்டா பார்ப்பவன். திருக்கு என்னுஞ் சொல்

பஸ்யதி யென்னும் பகுதி (தாதுவிவி) லிருந்து பிறந்தது. விவகாரத்தில் தன்னுடைய வடிவத்தை மாற்றிக்கொண்டது. எவ்வாறு ஆகாசம் அனந்தம், அரூபம். ஆனல் நேத்ர விவகாரத்திற்குள் வந்ததும் கருப்பு, நீலம் என்று கூறப்படு கிறதோ, அவ்வாறு பஸ்யதாது திருக்கு வடிவம் எடுத்தது. காலா = கருப்புநிறம். நீலா நீலநிறம். ஆகாசத்தில் இந் நிறங்கள் உண்மையல்ல. அம்மாதிரி பரமாத்மா விவகாரத் தில் வந்து பெண்டு, பிள்ளை, புருஷன், மனைவி, மாடு, பசு, பறவை, முதலிய வடிவமாகத் தோன்றுகிறார்.

இந்நிலையிலும் பிரஹ்மத்தின் உண்மை நிலையை ஞானிகள் கண்டு கொள்கிருர்கள். என்ன கண்டு கொள்கிறார்கள்? கிருஷ்ணன் பிறந்தவன்? ஆனாலும் உண்மையில் பிறந்தவன் அல்லன். சம்சாரி போல் தோற்-றினும், அசம்சாரி யென்று தெரிந்து கொண்டார்கள். "மூடா நாபி ஜானந்தி" கீதை. அறிவிலிகள் (அச்சுதன் தன்மையை) அறியமாட்டார்கன். ஞானிகளுக்குத் தெரியும் ஸ்ரீ ஹரி விரஜவாசியாக இருந்தாலும் சர்வவாசி. எங்கும் இருப்பவன் என்பது பொருள். அளவுக்குள் இருந்தாலும், அளப்பரியன், விஞசியாகக் காணப்படினும். அவிஞசி. இவ்வாறு ஞானிகள் இறைநிலையைக் கண்டிருக்கிருர்கள்.

"அகில தேஹினும் அந்தராத்ம திருக்" எல்லார்க்கும் அந்தர்யாமியாக இருக்கும் போது எங்களுக்கும் நீ அந்தர் யாமியா இல்லையா? என்று கோபிகள் வினவினர். அனைவரு டைய அகத்திலிருந்து அனைத்தையும் அறிபவன் எங்கள் உள்ளத்திலிருந்து எங்கள் வேதனையை உணர்கின்ருயா இல்லையா? நீயேன் எங்கள் வேதனையை அறிகிறதில்லை? உனக்காகவும், உன்னைத் தரிசிப்பதற்காகவும், உன்னேடு உரையாடவும் நாங்கள் துடிக்கிருேமே அதை நீயேன் பார்க்கிறதில்லை?

ஒரு கற்பனே பண்ணுங்கள். என்ன கற்பனே? நினைப்பவர் மனத்தைக் கோயிலாகக் கொண்டவன். ஸ்ரீ கிருஷ்ணன்—கோபிகளை நோக்கி வினவுகிறான் என்று கற்பனே பண்ணுங்கள். முரளிதரன்—நான் உங்கள் இதயத்திலிருக்கிறேன். உங்கள் இதய வேதனையை அறிகிறேன். ஆனால் நேரம் வரும் போது உங்கள் வேதனையைப் போக்குவேன் என்றான்.

"கோபிகள்—விகநசார்த்திதோ விஸ்வகுப்தயே உதேயிவாந்" நீ நான்முகன் வேண்டு கோளுக்கிணங்கி அவனியைக் காக்கும் பொருட்டு அவதாரஞ் செய்தாய். எனவே எங்களுடைய எண்ணப்படி எங்களையும் அவசியம் ரக்ஷிக்க வேண்டும் என்று கோபிகள் கூறினார்கள்.

'பவான், என்னுஞ் சொல்லுக்குப் பொருள் சந்திரன் மிகப் பொருத்தம். ஏனெனின்? ஈண்டு உதேயிவான் என்று சொல்லியிருக்கிறது. உதேயிவான் = உதிப்பவன். அவதாரம் பண்ணினன் என்பது தத்வார்த்தம். விசேஷேணகனதி வேதார்த்தமிதி விகனு—பிரஹ்மா. எவன் ஒருவன் அடிக்கடி வேதார்த்தத்தை விசாரஞ் செய்து பொருளை வெளிக் கொணர்ந்தானே, அத்தகையஅயன் உலகக்ஷேமத்தின் பொருட்டு பிரார்த்தனே பண்ணினன். அந்நிமித்தமாக நீ யெழுந்தருளினய். நாங்கள் உலகத்தில் இல்லையா? எங்களைநீகாவாக்கால் எவர் காப்பர்? கேசவா! எங்களைக் காப்பது உனது தருமமில்லையா? ஜனார்தன!

ரிஷிகேசன்—நான் அந்தர்யாமி யென்று உங்களுக்கு யார் சொன்னார்? மலரவன் வேண்டு கோளுக் கிணங்க ஞாலத்தைப் புரக்கும் நிமித்தம் நான் வந்ததாக மொழிந்தவர் யார்?

கோபி— நீ கோபகுலத்தில் தோன்றவில்லை, "சாத்வதாங்குலே உதேயிவான்" யாதவ குலத்தில் பிறந்திருக்கிறாய். உடுபதிக்குச் சமானம் வெளி வந்திருக்கின்றாய்.

உடுபதி = நிலா. அம்புலிக்குச் சமானம் தாபத்தைத் தணிப்பாயாக. உன்பால் நம்பிக்கை வைத்திருக்கும் எங்கள் சந்தாபத்தைப் போக்குவது நினது கடமையல்லவா?

இந்த சுலோகத்திற்கு வியங்கியார்த்தமும் உண்டு. ஸ்ரீ கிருஷ்ண! எங்களை வனத்தில் விட்டு விட்டு நீ மறைந்து விட்டாய். இதனால் நீ கோபிகுமாரன் அல்லன் என்று தெளிவாயிற்று என்றனர் கோபிகள்.

''நகலு கோபிகா நந்தநோ பவான்''. நீ யசோதைக்கு மைந்தனுமல்ல, கோபிகளுக்கு இன்பம் தருபவனுமல்ல. நந்தராணிக்குப் பாலகனாக இருந்தால் எங்களிடம் சகானுபூதி உனக்கு இருந்திருக்கும். இம்மாதிரி இரவில் வனத்தில் தள்ளிவிட்டு மறைந்திருக்கமாட்டாய். மாதா யசோதை பரம தயாளு. கருணையுள்ளம் படைத்தவள். நீயோ ஈகை இரக்கமில்லாமல் எங்களைக் கானகத்தில் தவிக்க விடுகிறாய். எனவே நீ எங்கள் ஜாதியும் அல்ல என்றனர். கோபிகள் என்பது குறிப்பு.

தாமோதரன் — நீங்கள் உள்ளதை உரைக்கிறீர்கள். நான் கோபிகுமாரன் அல்லன். நான் தான் எல்லார்க்கும் அந்தர்யாமி. திருஷ்டா என்றான்.

கோபிகள் — ''நகலு அகில தேஹிநாம் அந்தராத்ம திருக்'' நாரண! நீ பொய் சொல்கின்றாய் என்றனள்.

வாசுதேவன் — நீவீர் அனைவரும் கிராமிண மக்கள். உங்களுக்கு என்னைப் பற்றித் தெரியாது. நான்முகன். ருத்திரன். இந்திரன் முதலிய இமையவர்கள் குழுமி பாற்கடலின் கரைக்குச் சென்று பத்மநாபனாகிய என்னிடத்தில் பிரார்த்தனை செய்து இரிஷிகேசா! நீ அவதாரஞ் செய்ய வேண்டும் என்றனர். அவர்கள் வேண்டு கோளுக்கிணங்க நான் அவனியில் வந்தேன் என்றான்.

கோபி — மலரவன் உன்னிடம் ஏன் பிரார்த்தனை செய்தான்! அவன் நோயாளியாக இருந்தானு? அவனது இல்லத்தில் களவு போய்விட்டதா? ஸ்ரீநிவாசன் -ஜெகத்தைக் காக்கும் பொருட்டு அவன் வேண்டினுன், அதனுல் அவதாரம் எடுத்தேன் என்ருன்.

கோபி — (நகலு விகநசார்த்திதோ விஸ்வகுப்தயே பவான் உதேயிவான்.) சியாமசுந்தர! இவ்வளவு பொய் சொல்லாதே. நீ அயனுல் அழைக்கப் பெற்று அவனியைப் புரப்பதற்கு வரவில்லை. அவ்வாறு வந்திருந்தால் எவ்வாறு எங்களை இரக்ஷிக்கமால் இருக்க இயலும்? பத்மநாபா! நீ பாருக்கு வந்தது உண்மைதான். ஆனுல் அவனியைப் புரப்ப தற்கல்லை. பின்னை? "அவிசுவகுப்தயே" நினைக்கும் போது வேறு விதமாகக் காணப்படுகிறது. அஃதென்னை? மலரவன், உலகத்தில் உள்ளவர்கள் சமம், தமம், உபரதி, திதிட்சை, சிரத்தை, சமாதானம் முதலிய சாதனங்களுடன் கூடி விஷயங்களிலிருந்து விரக்தியடைந்து விடுவார்கள், பிறகு ஞானிகளோடு தொடர்பு வைத்தால் தத்வஞானத்தில் விருப்பு உண்டாகிச் சிரவணம், மனனம், நிதித்யாசனஞ் செய்வார் கள். அதன் பின்னர் தத்வஞானம் உதிக்கும். தத்வஞானத் தால் முக்தியுண்டாகும் என்று எண்ணினுன் போலும்.

சிருஷ்டிக் கிரமம் பங்கமாகி விடும். எனவே பரமேஷ்டி உன்னை வேண்டினுன். பரமேஷ்டி அயன். அதனுல் நீ வந்து அவதரித்தாய். நீ ஈண்டு வந்து எல்லாருக்கும் துயரத்தைக் கொடு என்று உன்னை அழைக்கவில்லை. யாரையும் நிம்மதி யாக வாழ நீ சம்மதிக்கிறதில்லை. இது என்ன நியாயம்? என்ன முறை? புல்லாங்குழலை ஊதி யூதி சமாதி அடைய விடுகிறதில்லை. நாங்கள் பொறிபுலன்களையடக்கி இருப்போ மென்று எண்ணினுல் உனது குழலோசை எங்கள் செவியில் விழுந்து எண்ணத்தை மாற்றிவிடுகிறது. எங்கள் நிலையைக் குலைத்து விடுகிறது. நான்முகன் அழைப்பின் பேரில்

சம்சாரத்தில் நீ வந்தது என்றால் இதற்காகத்தான் வந்திருக்-
கின்றாய் என்று கோபிகள் கூறினர்.

இது விஷயத்தில் ஒரு கதை — ஒருமுறை தேவரிஷி
நாரதர் விரஜபூமிக்கு வந்தார். நான்குப் பக்கமும் பார்த்தார்.
எங்கு பார்த்தாலும் இனிய காட்சிகள் காணப்பட்டன.
இன்பம் பொங்கி வடிந்தது. யமுனை கரைக்குச் சென்றார்.
பெண்கள் குளிக்கும் துறையில் அமர்ந்தார். அழுதார்.
இராதையோடு லலிதா நீராட வந்தாள். அழுதுகொண்டிருக்
கின்ற நாரதரைக் கண்டாள். அழுகைக்குக் காரணம்
யாதென வினவினாள். நாரதா? நீர் தேவரிஷி. ஞானவான்,
வைராக்கிய சீலன், உமக்கு என்ன கஷ்டம் வந்தது? ஏன்
தேம்பித், தேம்பி அழுகிறீர் என்றாள்.

தேவரிஷி — நான் எதையும் நினைந்து அழவில்லை.
எவ்வித துயரத்திற்கும் அழவில்லை. பின்னை? இந்த திவ்ய
ஆனந்தத்தை நுகராமல் முக்தியை அடைந்தவர்களை
யெண்ணியழுகிறேன் என்றார் நாரதர். அவர்கள் முக்தியை
அடையாதிருந்தால் விரஜபூமியின் தலைவன் லீலையைக்
கண்டு களித்திருப்பார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன் — கோபிகளே! நீங்கள் என்ன
சொன்னீர்கள்? நான் கோபிகுமாரன் அல்லன். பிரமதேவன்
அழைப்பின் பேரில் வந்தாய் என்கின்றீர்கள். அங்ஙனமாயின்
நான் பக்தர்களின் குலத்தில் பிறக்கவில்லையா?

கோபிகள் — நகலு பவான் சாத்வதாம்குலே
உதேயிவான். கோபிகள்—ஆம் நீ யதுவம்சி சாத்விக குலத்
திலும் தோன்றவில்லை. அக்குலத்தில் அவதரித்தால் கருணை
யில்லாத தன்மை உனக்கு எவ்வாறு வரும்? வராதல்லவா.
கிருஷ்ணன் — ஆக நீங்கள் என்னை என்னதான் நினைக்கிறீர்
கள்? கோபி — "சகலு கே உதேயிவான்" நீ ஆகாசத்தி-
லிருந்து குதித்து வந்திருக்கிறாய். வெண்மையானச் சந்தி

ரனைப் போன்று கிருஷ்ணச் சந்திரனும் வந்திருக்கிறது என்றாள். மதுசூதந! உன்னை நோக்கும் போது ஆகாசம் போல் காணப்படுகின்றாய். ஆகாசத்திற்கு நிறம் கருப்பு. குணம் பற்றற்றத்தன்மை. (அசங்கம்) இவ்விரண்டும் உன்னிடம் இருக்கின்றன.

பத்மநாபன் - தேவிமார்களே! நான் ஆகாசச் சந்திரந் தான். ''ஆகாசஸ்த்தல்லிங்காத்'' என்பது பிரமசூத்திரம். ஆகாசத்தில் நான்கு தன்மைகள் உள்ளன. 1. தூய்மை 2. சூக்குமம் 3. அசங்கம் = பற்றற்றத்தன்மை. 4. வியாபகம் = நிறைவு. ஆகாசத்தில் பற்றில்லாதது போல் உனக்கும் எங்களிடத்தில் பற்றில்லை.

ஸ்ரீ கிருஷ்ணன் — தாய்க்குலமே! நீங்கள் இவ்வாறு எண்ணினால் நான் உங்கள் சமீபம் வரமாட்டேன். பிரேம் மார்க்கத்தில் இவ்வாறு இயம்புவது இயல்பு. அன்பன் மனத்தில் எப்பொழுது என்ன எண்ணம் உதிக்கும் என்று சொல்ல ஒண்ணாது. கோகுலத்தில் ஒரு மகான் இருந்தார். அவர் அங்குள்ள வனத்தில் திரிந்து கொண்டு இருந்தார். ஒரு நாள் ஒரு இடத்திற்குப் போய்க் கொண்டிருந்தார். அவருடைய தாடிஉரோமம் முள்மரத்தில் சிக்கிக்கொண்டது. அவர் அங்கேயே நின்றார். சிக்கிய தாடி ரோமத்தைக் கையால் எடுக்கவுமில்லை, நகரவுமில்லை. வழியில் வருபவர்-சுவாமின்! ஏன் நிற்கின்றீர் என்றார். மேலும் தாடியை யெடுத்து விட்டு செல்லும் என்றார்.

மகான்—நான் உடைமரத்தைப் பற்றவில்லை, ஆகையால் நான் ஏன் எடுக்கவேண்டும் என்றார். வழிப்போக்கர் அடியவர் பெருமானே! நான் உம்முடைய தாடியை விடுவிக்கிறேன் என்றார். மகான் — எவன் தாடியைச் சிக்கலாக்கினானோ அவன் வந்து எடுத்து விடுவான் என்றார். வழிப்போக்கர்—மகாத்மாவிற்கு மதி கெட்டுப் போயிற்று என்று விலகிச் சென்றார். இவர் அந்த இடத்திலேயே நின்றார். பகல்கழிந்தது.

இரவு கழிந்தது. நாள் கழிந்தது. இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. இதற்கு இடையில் உண்ணவுமில்லை, உறங்கவு மில்லை.

இந்நிலையை இறைவன் கண்டான். யதுநந்தனன் வந்தான். மேனியில் பீதாம்பரமும், இடையில் மஞ்சளா டையும், முடிமிசைமுகுடமும், பவளவாயும், பச்சைமேனியும், பாதசலங்கையும் குமிழ்ச்சிரிப்புடன் கோவிந்தன் வந்தான். கோலமாறி நின்ற கோவிந்தன் — மகாமுனிவரே! உமது தாடியை விடுவிக்கட்டுமா வென்றான். முனிவர் — நீ யார் என்றார். கிருஷ்ணன்—நான் கிருஷ்ணன் என்றான். முனிவர்— எந்தக் கிருஷ்ணன் என்றார். ஸ்ரீ ஹரி—கிருஷ்ணன் ஒருவன் தானே யென்றார். மகாத்மா — இவ்விரஜபூமியில் ஐந்து கிருஷ்ணன் இருக்கிறான். அவர்களில் நீ யெந்தக் கிருஷ்ணன் என்றார்.

கேசவன்—அவர் ஐவர் யாவர்? முனிவர்—கோபால கிருஷ்ணன், கோவிந்தக்கிருஷ்ணன், இராதாகிருஷ்ணன், ராமகிருஷ்ணன், ஸ்ரீ கிருஷ்ணன் என்றார். ஜனார்தனன் — இவர்களில் எந்தக்கிருஷ்ணன் உமக்கு வேண்டுமென்றார்? மகாத்மா—எனக்கு இராதாகிருஷ்ணன் வேண்டுமென்றார். உடனே தனது அந்தரங்க சக்தி இராதையை வெளிக் கொணர்ந்து இருவரும் இணைந்து முனிவர் முன்னே தோன் றினர். மகாத்மா மகிழ்ச்சியடைந்து இராதே! இவன் கிருஷ்ணன் தானாஎன்று வினவினார். இராதை மகா முனிவரே! இவர்தான் நீவீர் விரும்பிய கிருஷ்ணன் என்றாள். மகாத்மா-அங்ஙனமாயின் எனது தாடியைப் பிடியும் என்றார். கோவிந்தன் தாடியைப் பிடித்து அவிழ்த்து விட்டான். இவ் விஷயத்தால் கிருஷ்ண பக்தியின் மகிமை சொல்லாமலே தெரிகிறது.

சகே! வாழ்வளிக்கும் வள்ளலே! இவ்வார்த்தை இறை வனிடத்தில் சொல்லவில்லை. எங்கள் பிரியநாயகனிடத்தில்

சொல்லுகிறோம் என்றார்கள். நீ எங்களைக் கண்டிக்கலாம். வையலாம், கோபிக்கலாம். இவைகளைச் செய்யாமல் எங்களைத் தாசியாக ஏன் ஆக்கினாய்? உன்னோடு விளையாடு வதற்கு அதிகாரம் ஏன் அளித்தாய்? விளையாடுவதற்கு அதிகாரம் அளித்த நீ இப்பொழுது முனிவானேன்?

இறைவனை மூன்று விதமாக அறியலாம். 1. உண்மை அன்பன் இறைவனைக் கோபிகுமார னென்று அறிகிறான். 2. தத்வஞானி அகில தேகினும் அந்தராத்ம திருக்கு வடிவமாகப் பார்க்கிறான். தனது வடிவமாகவும் அனுபவிக் கிறான். 3. பொதுவான பக்தன் அயனால் அழைக்கப்பட்டு உலகத்தை இரக்ஷிக்கும் நிமித்தம் அவதார புருஷனென்று எண்ணுகிறான்.

யார் நந்த நந்தன் என்று பகவானை அறிகிறாரோ அவருடன் இறைவன் உரையாடுகிறான், சிரிக்கிறான், அவருக்கு அன்பனாகிறான். இம்மாதிரி பிரஹ்மானுபூதியுண் டாகிறது. உபாசகர்களுக்குப் பரமாத்மா ரூபமாகவும், ஞானி களுக்குப் பிரஹ்மரூபமாகவும் தோன்றுகிறார். அக்ஞானி களுக்கு மனிதவடிவமாகத் தோன்றுகிறார். மாயையால் கோபிகளுக்கு மாயவன் நந்தகுமாரனாக ஆகி விட்டான். அவனோடு ஆடுவதற்கும், பாடுவதற்கும் புண்ணியம் இருந் தால்த்தான் கிடைக்கும். கோபிகள் புண்ணியம் மிகச்செய் திருந்தார்கள். ஆகையால் மாயவன் மேனியைத் தீண்டும் பாக்கியங் கிடைத்தது. இந்த ஆனந்தத்தைப் பாவிகள் அனுபவிக்கமுடியாது. இந்த லீலையை அவர்களால் பார்க்கவும் இயலாது.

பாவிகள் விஷயச் சிந்தனஞ்செய்வார்கள். ஸ்ரீகிருஷ்ண லீலை மக்களைச் சம்சாரத்திலிருந்து கரையேற்றுவதற்கு ஒரு சிறந்த விஞ்ஞானமாகும். ஞானிகளுக்கு மேலான வடிவம் பிரஹ்மவடிவம். செல்வத்தை விரும்பி வழிபடும் அன்பருக்குச்

சிறந்த வடிவம் நாராயண வடிவம். யார் எந்த வடிவத்தைப் பற்றிக் கரையேற விரும்புகிருறோ அவருக்கு அந்த வடிவம் சிறந்தது.

கோபி—நந்தலால்! இப்பொழுது நீ யென்ன செய்கிறாய்? நீஇரவில் வம்சிவாசித்தாய். இராத்திரியில் எங்களைக் கானகத்திற்கு அழைத்தாய். எல்லாவற்றையும் மறந்து உன்னைத் தழுவ வந்தோம். நீ மறைந்து விட்டாய். இஃது எந்த வடிவத்தில் சேர்ந்தது? நீ யெண்ணிப்பார் என்றார்கள். இனி இரக்கங் கொண்டு (தயித திருஸ்யதாம்) முன்னே வந்து எங்களைப் பார் என்றார்கள். மீளவும் கோபாலா! வா வா. கோகுலமணியே! வா வா என்றார்கள்.

முகுந்தன், ஒவ்வொரு மாதுவின் இதயத்தில் தோன்றி, கோபிகளே! என்னைப் பற்றி நன்ருகத் தெரிந்திருக்கிறீர்கள். அதில் குற்றம் ஒன்றுமில்லையென்ருன். கோபிகா நந்தனனும், தேகதாரி ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவும், நான்முகனுல் அழைக்கப்பட்டு உலகத்தைக் காப்பதற்கு அவதாரம் பண்ணினவனும் நான் தான் என்ருன்.

கோபி — நீ அவ்வாறானுல் எங்களுக்கு இவ்வளவு துன்பம் கொடுக்க மாட்டாய். எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைத்திருப்பாய் என்ருள். காரணம் என்னை? பக்தன் பகவானுக்கு அனுகூலமாக நடப்பான். அவனுக்குத் திடமான உறுதியிருக்கிறது. "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற உறுதிப்பாடு அவனுக்கு உண்டு. திருவாசகம். தாமோதரா! நீ யெவ்வாறு இசைவிப்பாயோ அவ்வாறு இசைவேனென்ருள். தள்ளினும் போகேன், எள்ளினும் போகேன் சங்கரா நீ யறியாயோ என்பது சமயோசிதமாலை.

ரசேசுவரவாதம் — பக்தி மார்க்கத்தில் பகவான் சொன்னபடி பக்தன் நடக்கவேண்டும். இதுதான் இவை

இரண்டிற்கும் உள்ள வேறுபாடு. எனவே பகவான் எனக்குச் சொந்தம் ஆதலின் சொன்னபடி பகவான் நடக்கவேண்டு மென்று கோபி கூறுகிருள். என்னைப் பார்க்காமலும், என்னோடு உரையாடாமலும், என்னோடு சேராமலும், பிறரைப் பார்க்கவும், பிறரோடு உரையாடவும், பிறரோடு சேரவும் நான் எப்படிப் பொறுத்துக் கொள்வேன் என்று மற்றொரு கோபி மொழிகிறாள்.

இதயத்தில் இருக்கும் இன்பமூர்த்தி கூறுகிறான். என்ன மொழிகிருன்? கோபிகளே! நீவீர் அனைவரும் கைரவம் கருகும் வாயாள். உங்கள் தேன்மொழிகள் என் உள்ளத்தைக் கவர்கின்றன. உங்கள் அன்பு அமுதத்தைப் பருகுவதற்காக மறைந்தேனென்றான். இந்த அமிர்தம் வைகுண்டத்திலும் அரியது. இப்பொழுது உங்களுடைய எண்ணம் நன்றாகத் தெளிவாயிற்று. நான் மகிழ்ச்சியடைகிறேன். உங்கள் அன்பிற்குப் பதிலாக என்ன செய்ய வேண்டுமென்றான்.

இதற்குப்பதிலாக நான்கு விஷயத்தைக் கோபிகள் விரும்புகின்றார்கள் — 1. பிரியநாயகனே! எங்களைப்பார். 2. எங்களோடு உரையாடு. 3. எங்களை நேசம் பண்ணு. 4. எங்கள் எண்ணத்தை நிறைவேற்று என்றார்கள். எப்பொழுது மனிதன் ஞானமார்க்கத்தில் செல்கின்றானே அப்பொழுது அவன்முன்னே நேதி நேதியென்னும் வாக்கியம் வருகிறது. இது என்னுந்தோன்றுகின்ற பொருள் அனைத்தை யும்தள்ளவிட்டுநான் என்று எந்தப்பொருள் தோன்றுகிறதோ அது சத்தாரூபம். அந்த சத்து என்று முள்ளது. அதை யழிக்கவும் முடியாது, அதைத்தியாகம் பண்ணவும் முடியாது. இம்மாதிரி நான் என்னும் சொல்லுக்குப் பொருள் பிரஹ்மம். இது போல் நேதி நேதி என்று சகல வஸ்துவையும் தள்ளிய பின்பு எஞ்சி நிற்பது ஆன்மா. ஆன்மாவே பிரஹ்மசொரூபம் என்ற ஞானம் வந்த பிறகு ஞானமாக்கம் முடிவடைகிறது.

பிரேமை மார்க்கத்தில் நேதி நேதியில்லே. இம்மார்க்கத்தில் இன்னும் இன்னும் என்று தான் 'இருக்கும். பிரேம் மொழிகள் மாறுபட்டவை. பிரேம மார்க்கத்தில் உரைகள் வேறுபடும். இவ்வழியில் இல்லேயென்ருல் இருக்கு என்று பொருள். கோபிகளுக்குக் கேசவனிடத்தில் வேண்டுவன நிரம்ப இருந்தன. கண்ணனே யெவ்விதத்தினும், எல்லா வடிவத்தினும் பெற வேண்டும் என மிகுதியான வேட்கை இருப்பினும் முதல் நேதி மார்க்கத்தைக் கடைபிடிக்கின்றனர். முதலாவது சுலோகத்தில் திருஸ்யதாம் என்றார்கள். எங்களேப் பார் என்பது பொருள். இனியிந்தச் சுலோகத்தில் அடுத்த விருப்பம் தெரிவிக்கப்படுகிறது.

நான்காவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் 5

விரச்சிதாபயம் விருஷ்ணி[4] துரியதே[4] சரணம்[1] ஈயுஷாம்
சம்சிருதேர் பயாத்[4] கரசரோருஹம் காந்த காமதம்[6] சிரசி
தேஹி[4] ந: ஸ்ரீ கரகிரஹம் 5 பொருள் — விருஷ்ணிதுரிய! பக்தர்களுடைய எண்ணங்களை வருஷதி-பூர்த்தி செய்வதால் கிருஷ்ணனுக்குப் பெயர் விருஷ்ணி. ஏகாந்த! ந: சிரசி, கரசரோருகம், தேஹி. விருஷ்ணி வம்ச சிரோமணே! பிரியனே! எங்களுடைய சிரசில் உனது கையை வை.

வர்ஷதீதி விருஷ்ணி: என்பது இலக்கணம். தன்னை நினைக்கும் அன்பர் எண்ணத்தை இன்புறச் செய்வதால் கேசவன் விருஷ்ணிதுரியன் எனப்படுகிறான். விருஷ்ணி வம்சத்தில் தோன்றினதால் வார்ஷ்ணியென்பது புராணார்த் தம். விருஷ்ணி துரிய = விருஷ்ணி வம்சத்தில் சிறந்தவன். உலகத்தில் எத்தனைக் கொடையாளிகள் தேவி, தேவதைகள் இருக்கின்றனவோ அத்தனை தேவி தேவதைகளில் நீ பெரிய கொடையாளி. ஆகையால் கொடுப்பதில் குறைக்காதே யென்றார்கள். இறைவன் நீங்கலாக மற்றையவரிடத்தில் கொடுக்கும் தன்மை குறைவாகவேயிருக்கும்.

இறைவன் எல்லையில்லாதவன், பிறவாதத்தன்மையன் அளப்பரியன். அவனிடத்தில் அளவில், அழிவில் சக்திகள் இருக்கின்றன. மற்றையவர்க்கு ஆயுள் உண்டு, மெலிவு உண்டு. குறைந்த ஆயுள். குறைந்த வலிமை, பலநோய்கள் இருக்கின்றன. பீகார் மாநிலத்தில் ஒரு மந்திரி இருந்தார். அவர் ஒரு தனவானிடம் நட்புக் கொண்டார். அவர் பெயரால் ஒரு தொழிற்சாலையைச் செய்து கொடுத்தார். தனவான் உவகை கூர்ந்து முப்பது ஏக்கர் நிலத்தை மந்திரிக்கு எழுதி வைத்தார். சிலநாட்கழிந்ததும் அவரை மந்திரிப் பதிவியிலி

ருந்து விலக்கி விட்டார்கள். உடனே நிலச்சுவாந்தார் தான் கொடுத்த நிலத்தைத் திருப்பிப் பெற்றுக் கொண்டார். அரசு தனவானுடைய சான்றிதழைப் பறித்துக் கொண்டது. நிலச்சுவான்தாருக்கு பெரும் இழப்பு ஏற்பட்டது.

இம்மாதிரி உலகில் தானம் செய்பவன் மனிதனாக இருந்தாலுஞ்சரி, தேவனாக இருந்தாலுஞ்சரி, அவர்களுடைய வலிமை, ஆயுள், அதிகாரம், பதவிகள் எல்லாம் வரம்புக்குள்ப் பட்டவை. நமது பதவிகள் ஒழிந்து விடுமோ என்னும் பயம் அவர்களுக்கு உண்டு. ஆகையால் கொடுக்கும் பொழுதும் அஞ்சியஞ்சிக் கொடுப்பார்கள். ஈசுவரன் அவ்வாறன்று. அவன் யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. யாருக்கு எதை வேண்டுமானாலும் கூசாமல் கொடுப்பான். இந்திரனைப்போல ஒரு மனுவந்தரமும், பிரமாவைப் போல கல்பம்வரை இறைவன் வாழ்பவன் அல்ல. பின்னை? இறைவன் என்றும் அழியாதவன். ஈடுஎல்லையற்றவன். எனவே அவன் தன்னையும் ஈய முடியும். அவன் - இறைவன்.

''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' என்பது அப்பர் தேவாரம். பொருள் வெளி.

''ஸ்மரத : பாதகமலம் ஆத்மானமப்யச்சதி'' தன்னை நினைப்பவருக்குத் தன்னையும் பிறவற்றையும் அளிக்கிறான் என்பது மேற்கூறிய வாக்கியத்தின் பொருள்.

நீ ஒரு சிறந்த ஞானிக்கு வழிபாடு செய்தாய். அந்த ஞானிக்குக் பொருளிலும் ஆசையில்லை. போகத்திலும் ஆசையில்லை. புண்ணியஞ் செய்து சொர்க்கத்திற்குப் போக வேண்டுவதுமில்லை. நரகத்திற்கு அச்சமுமில்லை. ஞானி ஆப்தக்காமன். எல்லா ஆசையும் ஒருங்கே பெற்றவன். எனவே அறம், பொருள், இன்பம் மூன்றையும் கடந்தவன். இனி நான்காவது புருஷார்த்தம் மோட்சம் இருக்கிறது. அது ஞானிவடிவமாயிருப்பதால் முக்தியிலும் விருப்பமில்லை.

அத்தகைய ஞானி எதையுந்தரமுடியும். ஞானி தன்னேயும் பிற ருக்கு ஈயும் தன்மையன். ஈசுவரன் எல்லாவற்றையும் இயல் பாக எய்தப்பெற்றவன். ஆகையால் எதையும் கொடுக்கும் இயல்பினன். எனவே தேவதை. மனிதன் முதலியோர்கள். இறைவனுக்கு ஈடாக முடியாது. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணன் விருஷ்ணிதுரியன். வள்ளலில் மிகச் சிறந்தவன்.

காந்த — கம் சுகம். தஸ்ய அந்தி : எல்லே. காந்தத் திற்குப் பொருள் எல்லேயற்ற இன்பம் உடையவன். பரமானந்தத்தை அளிப்பவன். ரசவடிவினன். காந்தி: = காந்தி-பிரகாசம். நமது வாழ்க்கையில் ஒளியைத் தருபவன். காதலன் என்பது கருத்து. காந்தன் பிரியநாயகன் என்பது திரண்ட பொருள். அழகு நிறைந்தவன் என்பது மற்றொரு பொருள். உடம்பிலுள்ள அழகு ஒரு அழகல்ல என்ற மொழி யை மனத்தில் அவசியம் வைத்துக் கொள்ள வேண்டும்.

உடலில் உள்ள அழகு—நிறம் ஒவ்வொரு நாட்டிலேயும் கருப்பு, சிகப்பு, வெண்மையாகப் பலநிறங்கள்இருக்கின்றன. இதையழகென்று எண்ணலாகாது. மேனியழகு அழகல்ல. மேதையழகே அழகு. உண்மையான அழகு உள்ளத்தில் உதிக்கும் உயர்ந்த நட்பு இதயத்தில் எழுகின்ற இறைவன் பக்தி. ஆயும் பொழுது உள்ளமெனும் ஒள்ளிய தடாகத் தில் மலர்கின்ற அன்பு அழகெனப்படும்.

இந்தச் சுலோகத்தில் மேகவண்ணனிடம் இருந்து நான்கு புருஷார்த்தமும் கிடைக்குமென்று உரைக்கப்படு கிறது. ''ஸ்ரீகரகிரஹம்'' கண்ணன் கமலாவின் கரத்தைப் பற்றியிருக்கிருன். ஆகையால் அவன் பொருளேத் தருவதில் இயல்பாக வலிமையுடையவன். கமலா திருமகள். 'காமதம்' என்ற சொல் இறைவன் இன்பப் புருஷார்த்தை இயல்பாகக் கொடுப்பவன் என்பதைக் கூறுகின்றது. 'விரச்சிதாபயம்' என்னும் சொல் துயரங்களேத் துடைத்து தருமபுருஷார்த் தத்தை ஈபவன் என்று இயம்புகின்றது. 'சரணம் ஈயுஷாம்

சம்சிருதேர் பயாத்' இந்த வாக்கியம் மோக்ஷபுருஷார்த்தத்தை மொழிகின்றது. மோட்சத்தை யளிப்பவன் முகுந்தன் என்பது முடி பொருள்.

சம்சிருதி:— இவ்வையகம் நழுவிக் கொண்டே போவதால் சம்சிருதி-சம்சாரம். இருகால்களும் விளங்காதவன்கையால் ஊர்ந்து செல்வது போல் ஞாலமுழுவதும் நாளுக்குநாள் நகர்ந்து கொண்டே போகின்றது. இவ்வுலகம் மிதக்கின்ற வொரு ஜீரணமான தோணி. இதில் எல்லோரும் சென்று கொண்டேயிருக்கிறுர்கள். தனமதத்நால் சிலர் நொறுங்கு கிறுர்கள். சிலர் காளைமதத்தால் நொறுங்குகிறுர்கள், சிலர் கல்விமதத்தால், சிலர் பதவிமதத்தால் அழிகிறுர்கள். எந்த மதமாஞலும் சில நோய்கள் வருமாஞல் நிற்கப் போகிறதில்லை.

இன்றிருந்து நாளையிறக்கின்ற புன்றலைமாக்கள் கருவம் என்னவாகும்? வைசூரியென்னும் வியாதி வந்த பின்பு அழகு எங்கேயிருக்கிறது?

(வஹதிபாபாய வஹதி புண்யாயச) இச்சம்சாரம் பாவ புண்ணியப்பக்கமாகப் போகின்றது. சம்சார நதியில் பாலப்பருவம், குமாரப்பருவம், காளைப்பருவம், கிழப்பருவம், மரணப்பருவம் எல்லாம் சென்று கொண்டேயிருக்கின்றன. உலகத்தையுன்னி நோக்கும் போது நேற்றிருந்தவர் இன்றில்லை, இன்றிருப்பவர் நாளையிருக்கப் போகிறதில்லை யென்ற நிலைதான் காணப்படுகிறது. அவனியில் எவன் அச்சத்தை யடைகிறானோ அவன் ஆண்டவன் சமீபம் விரைகிறுன்.

'சரணம் ஈயுஷாம் சம்சிருதே : பயாத்' நீ வாழ்நாள் முழுவதும் பறவை போல் பறந்து பொருளைத் திரட்டிஞய். அதுவே ஒருவரால் அழியப்போகிறது. எதை நீ நல்ல காரியத்தில் செலவிடவில்லையோ அதைப் பிறர் நல்ல காரியத்தில்

செலவிடுவார் என நினைப்பது தவறு. நீ நல்ல வழியில் செலவு செய்யாதிருக்க, உன் வம்சத்தில் வருபவன் செய்வானென்று எண்ணுவது வீணாகும். ஆகையால் ஆணவத்தை விட்டு ஹரியின் அடியில் முடியை வை.

'விரஜன ஹந்த்ரிஅலம்' என்று கோபிகள் கூறுகிறார் கள்— கண்ணன் கரகமலம் சம்சார சங்கடத்தைத் துடைக் கும். உலக விபத்தைப் போக்குவதில் வலிமையுடையது. 'கரசரோருகம்' கண்ணன் கரம் - கை-தாமரைமலர். கமலத் தைப் போன்று கோமலம் மென்மை. சீதளம் குளிர்ச்சி. சுரபி சுகந்தி-நறுமணம். ரசமயம் = ஆனந்தவடிவம்.

'விரச்சிதாபயம்' கமலக் கண்ணனுடைய கரம் எப் போதும் அபயத்தையுண்டு பண்ணுகிறது. தன்னை வந்து அடைந்த அன்பர்கள் துன்பத்தை அனுதினம் ஓட்டுகிறது. ''நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்'' என்றபடி தேவாரம். ''அந்தகா வந்து பார் சற்று என் கைக்கிட்டவே'' என்கின்றார் அருணகிரியார். கந்தரலங்காரம். பொருள்வெளி. அந்தகன் = எமன்

''சிரசுதேகிந:'' (இனிய மூர்த்தியே! இன்பநிலயமே! நினது இருகரங்களையும் எங்கள் தலையில் வை. ஸ்யாமசுந்தர! எங்களை நீ யேற்று கொள்கின்றாயா, இல்லையா? எங்களை யேற்றுக்கொண்டால் எங்கள் சிரமிசை உன் திருக்கரத்தை வைப்பாயாக. சிரமிசை கையை வைப்பது சிரசிற்குக் கீழே யுள்ள கிரியாசக்திகளை நீயேற்று எங்களுக்கு ஆதரவு அளிப் பாயாக என்று பொருள். எங்கள் வாழ்நாள் முழுவதும் உனக்கேயர்ப்பணம். தலையில் கைவைத்துச் சொல் நீங்கள் எனக்கே சொந்தம் என்று கோபிகள் சொன்னார்கள். கோபிகள் கோவிந்தன் தோளில் விருப்பம் மிகுதியாக வைத்திருந்தனா.

நந்தலால்! உனது குண்டலம் மண்டித இருசெவிகளை யும். கண்டஸ்த்தலமான கழுத்தையும், கபோலத்தையும்

கண்டு உன்னிடத்தில் மோகம் பூண்டிருக்கிறோம். கபோலம் கன்னம். மலர்மகளுக்கு மார்பையளித்தாய். பிருந்தாவிற்குப் பொன்னடியீந்தாய். இங்ஙிலையை எண்ணி நாங்கள் உனக்குத் தாசியானேம்.

'காமதம்' (முராரே!) உனது கரகமலம் (கை) சகல ஆசைகளையும் நிறைவேற்றத்தக்கது. சம்சாரிகளிடமிருந்து ஆசையைப் பூர்த்திப் பண்ணுவது ஒருவிதம். பகவானிடத்திலிருந்து நிறைவேற்றுவது மற்ருெரு விதம். உலகப்பொருட்களைத் திரட்டுவதால் தனது எண்ணத்தை நிரப்புபவன் சம்சாரவலையில் சிக்குவான். இறைவன் அருளால் எண்ணத்தை நிரப்புபவன் சம்சாரவலையிலிருந்து விடுபடுவான். இறைவன் தனது பக்தர்களை எல்லாவிதத்திலும் காப்பாற்றுகிறான். அன்பர்கள் எண்ணத்தை நிறைவேற்றுகிறான். நரசிமேத்தாவின் கடனைத் தீர்த்தார். ஸ்ரீகரகிரகம்' பகவான் மகாலெட்சுமியின் கையையேன் பிடித்தார்? திருமகளை விவாகம் ஏன் செய்து கொண்டார்? நம்முடைய அன்பர்கள் ஆசையைப் பூர்த்தி செய்துக் கொண்டேயிருக்கட்டுமென்பதற்காகத்தான்.

ஒரு தனவான் பெரும் பொருள் படைத்தவன். அவன் தனது கணக்கப்பிள்ளையிடம் அப்பா! என் நண்பன் கடனைக் கேட்டு யாராவது வந்தால் அதைக் கொடுத்து விடு என்று சொல்லி வைத்திருந்தான். பகவானும் பத்மாவதியிடம் ஏ பத்மா! எனது பக்தர் ஆசையை நிறைவேற்று வென்று சொல்லி வைத்திருக்கிறார்.

'ஸ்ரீகரகிரகம்' இதற்கு இன்னெரு பொருளுமுண்டு. மங்கையர்களே! நீங்கள் உங்கள் சிரசில் என் கையை வைக்கக் கூறுகிறீர்கள். நானே நந்தகோபனுடைய திருப்புதல்வன். அன்னியப் பெண்களாகிய உங்களைக் கைவக்க மாட்டேனென்ருன் அச்சுதன். பாவையர்கள்—கோவிந்தா!

ஏன் இவ்வாறு பொய் உரைக்கின்ருய். புருஷோத்தமா! நீ தான் அலைமகள் கரத்தையன்றே பிடித்திருக்கின்றாயே. எனவே நாங்கள் திருமகளோடு துவேஷம் செய்யமாட்டோம் என்று வனிதையர்கள் கூறினர்.

பொருள் படைத்தவன் பிறருடைய வருத்தத்தை அறிகிறதில்லை. சம்பூர்ண பாரத்தைத் தாங்குபவன் ஆதி சேடன். அவன் மீது சிறிது கூட விசாரம் பண்ணாமல் நாராயணன் சுகமாகத்தூங்குகிருன். முராரே! நீ திருமகள் கையைப் பிடித்தாய். உனது மனைவி இருந்தபடி இருக்கட்டும் பெரிய பணக்காரி. ஆகையால் எங்களுடைய துயரம் உனக்கு எங்கே தெரியப் போகிறது. இருப்பினும் எல்லா தனவானும் அவ்வாறன்று. ''தனவந்தோபி ஜானந்தி'' சில தனவந்தர்கள் பிறருடைய கஷ்டத்தை அறிவார்கள். சுதாமா—குசைலர் கஷ்டத்தைக் கோவிந்தன் அறியவில்லையா? வறுமையில் வாடிக்கிடந்த குசைலரைக் குபேரனுக ஆக்கவில்லையா?

காக்கை அதிக ஐயத்தோடு கூடியது. அது எல்லா ரையும் ஒரு கண்ணைக் கொண்டே பார்க்கிறது. எவ்வளவு நல்லெண்ணத்தோடு அதன் சமீபம் சென்ருலும், நம்மைக் கண்டதும் பறந்து விடுகிறது. அது என்ன நினைக்கிறது? இவன் நம்மைப்பிடிக்க வருகிருன், அல்லது கொல்ல வருகிருனென்று. இந்தச் சந்தேகம் அகத்திலுள்ள பாவத்தின் காரணமாக உண்டாகிறது. மனத்தூய்மை இன்மையே சங்கைக்குக் காரணம். கேசவ! தனவானைப் போல எங்கள் வேதனையை நீயறிவாயாக என்றார்கள் கோபிகள்.

அப்பொழுது இதயத்தில் இருக்கும் கிருஷ்ணன்— கோபிகளே! உங்கள் சிரசில் என்கையை வைக்கச் சொல் கிறீர்கள். அது தானே உங்கள் எண்ணம் என்று கூறினுன், மிக நல்லது. அங்ஙனமாயின் நீங்கள் அனைவரும் யமுனைக் கரையோரம் யமுனையைப் பார்த்துக் கொண்டு இருங்கள்

நான். பின்புறமாக வந்து உங்கள் தலையில் கையை வைத்துச் செல்கின்றேன் என்றான்.

இம்மனித வாழ்க்கை கேவலம் பணத்திற்காகவும் அல்ல. உலகசுகத்திற்குமல்ல,எண்பத்திநான்கு யோனிகளில் திரிவதற்குமல்ல. அந்த அந்த உடல்களில் தங்கியிருப்பதற் குமல்ல. வாழ்க்கைக்காக பொன் பொருள் தேவைதான். போகமும் வேண்டுவது தான். ஆனால் போகத்தில் விழுந்து சாகுவதற்காக அல்ல. வெந்ததையுண்போம் விதி வந்தால் சாவோம் என்பது மனிதவாழ்க்கையின் பயனன்று. பொரு ளினால் விஷயசுகமும் போகமும், இகலோக சௌக்கியமும் உண்டாகின்றன. தருமத்தினால் பரலோகசுகம் உண்டா கிறது. இவ்விருசுகங்களினால் மனிதன் பூரணத்தையடை கிறதில்லை. சகல சுகதுக்கங்களிலிருந்து விடுதலை பெறுவ தற்கு ஆன்மீக வாழ்க்கையை உருவாக்க வேண்டும். வாழ்க்கையில் ஆன்மீக ஜீவனம் அவசியம் வேண்டும்.

ஒரு மகாத்மாவை ஒருவன் வைதான். அதைக்கேட்டு அம்மகான் சிரித்தார். சிரித்த மகானைப் பார்த்து மற்றொரு வன் சுவாமின்! அவன் உம்மை வைதான். நீர் அவனை நோக்கிச்சிரிக்கிறீர். என்ன காரணம் என்றான். மகாத்மா- எனக்கும் அவனுக்கும் மைத்துனன் முறை வேண்டு மென்றார். ஆகையால் அவன் வைவதால் நமக்குக் குற்ற மொன்றுமில்லையென்றார்.

இஃது ஆன்மீகப் பிரசாதம். சம்சாரிகள் எறும்பு விருத்தியைக் கையாழ்வதில்லை. எறும்பு எல்லா இடத்தினும் இனிப்பையே விரும்புகின்றது. விஷயிகள் கசப்பை விரும்பு கிறார்கள். பிள்ளைப்பூச்சி சேறை விரும்புவது போல். ஆகை யால் நீ எறும்பு விருத்தியைக் கையாள். உன்னுடைய பொறிகள் வாயிலாக விஷயங்கள் வந்தால் உன்னுடைய பழக்கத்தால் அவைகளை மதுரம் ஆக்கி விடு. மதுரவடிவ ஆன்மா உன் உள்ளேயிருக்கிறது. மதுரம் இனிப்பு.

உலகத்தில் உண்மையான துன்பம் குறைவு. நிரம்பப் பேர் பொய்யான துன்பத்தில் துன்புறுகிருர்கள். உணவு இல்லே, உடையில்லே, உறைவிடம் இல்லேயென்று கவலேப் படுகிறதில்லே. பின்னே?வங்கியில் அதிகப்பணமில்லேயென்று கவலேப்படுகிருர்கள். பெண்ணுக்காக ஆணும், ஆணுக்காகப் பெண்ணும் வருத்தப்படுவதில்லே. பின்னே? தனக்குப் பிடித்த மனேவி, தனேக்குப் பிடித்த க ண வ ன் கிடைக்கவில்லேயே யென்று வருந்துவார்கள். உணவு கிடைக்கவில்லேயேயென்று துன்பப்படுவது குறைவு, சிறந்த உணவு கிடைக்கவில்லே யென்ற கவலே நிரம்ப. ஆகையால் பொய்யாகிய துயரத் தை விட்டு உண்மைச் சுகத்தை நாடுவாயாக. சம்சாரம் விவகாரத்தில் இருக்கட்டும். இதயத்தை இறைவனிடத்தில் வை.

உலகத்தில் இ ன் ப த் தை விரும்பிஞல் உனக்குத் துன்பந்தான் கிடைக்கும். ஈண்டு சாவு வரும், யாரும் இறப்பார், ஒரு பிள்ளே பிறக்கும். ஒரு பிள்ளே யிறக்கும். உலகத்தில் ஒரு நாளேக்குச் சிரிப்பு, மறுநாளேக்கு அழுகை. இந்நிலேயில் வையகத்தில் இன்பத்தை விரும்புவது பாம்பு வாயில் கையை விடுவதோ டொக்கும். இவ்வாறு எண்ணி இதயத்தில் இறைவனே வை.

பகவான் இதயத்தில் எப்படி வசிப்பார்? இறைவன் யாருடைய மனத்தில் வாசஞ் செய்கிருனே அவரைநினே. இறைவன் யாருடைய இதயத்தில் வசிக்கிருன்? அடியார் களுடைய உள்ளத்தில் வசிக்கிருன். ஆகையால் முதலாவது அடியாரை நினே. அப்பொழுது அன்பன் ஹரியை யெவ்வாறு வேண்டுகிருன் என்று உனக்குத் தெரியும். நீயும் இறைவனே அம்மாதிரி வழிபட விரும்புவாய். இறைநெறி முறை உனக்கு நன்ருகத் தெரியும். பெரியோர்கள் குடும்பம் எப்படி நடத்து கிருர்கள் என்று பார்த்து மகான்களும் கு டு ம் ப த் தை நடத்துகிருர்கள்.

அன்புமொழி பழமையாகாது. மனக்கலக்கம் நீங்குவதற்கு இஃது நிலையான பதில். இனி ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இருவடிவமென நினை. ஒன்று சிருங்காரம். மற்றொன்று அங்காரம். அவன் நம்முன்னே வரும்போது சிருங்காரம். கோபிகள் கூறினார்கள் - ''சிருங்காரஃ சகிமூர்த்திமானிவ'' அந்நேரத்தில் முகுந்தன் கோபிகள் அங்கத்திற்கு அணிகலமாக ஆகிவிடுகிறான். பிரிவில் கண்ணன் அங்காரம் ஆகிவிடுகிறான். அங்காரம் அனல் - கங்கு - நெருப்பு என்பன பொருள். வியோகத்தில் பகவான் நெருப்பாகி விடுகிறார். வியோகம் பிரிவு. கோபிகள் இடத்தில் கோவிந்தன் கூறுகிறான்-மாதர்களே! நீங்கள் கண்களை மூடிக்கொண்டு முறையாக உட்காருங்கள். பின்னால் உங்கள் சிரசில் கையை வைத்துக் கொள்வேனென்றான். இதைக்கேட்டதும் அவர்களில் ஒருமாது-ஸ்யாமசுந்தர! நீ கபடமுடையவன். மாயாவி உன்மாயயைக் கண்டு கொள்ள இயலாது. உன்னோடு பேச வேண்டுமானாலும் சாதுரியம் வேண்டும். எனினும் நாங்கள் கூறுவதைக் கேள் - நாங்கள் என்ன விரும்புகிறோம் என்பதையும் நீகேள் என்றார்கள். கோபிகள் என்பது கருத்து. மண்ணளந்த மணிவண்ணனைப் பற்றி ஒருகவி வர்ணிக்கிறார் - முகுந்தனுக்கு வெற்றியுண்டாகட்டும். பிருந்தாவனவாசி கோபிகளின் காது அணிக்கு நீலகமல வடிவமாகவும், கண்ணுக்காக அஞ்ஜனமாகவும், இதயத்திற்கு நீலமணி ஆரமாகவும், கேசவன் கோபிகள் அங்கங்களுக்கு அணிகலமாக ஆயினான். ஆனால் இவையெல்லாம் (வியோகத்தில்) பிரிவில் நெருப்புக்குச் சமானமாக ஆகின்றன. சுடுகின்றது என்பது கருத்து.

வியோகினி கோபிகள். அவர்களை நோக்கி-கோபிக ளே! கண்ணை மூடிக்கொண்டு கரையோரமாக அமருங்கள் என்றான் அச்சுதன். அவர்கள் எதற்கு என்றார்கள். முராரி-உங்கள் தலைமிசை கையை வைப்பதற்கென்றான். இவ்வாறு இசைத்ததும் ஒரு கோபி ஸ்யாமசுந்தர! நீயொரு மாயாவி' கபடநாடக சூத்திரதாரி, வினயி, உன்னை வெல்லயாராலும் முடியாது. உன்னோடு பேசவேண்டுமானால் நுண்ணிய மதி வேண்டும். இருப்பினும் நாங்கள் என்ன கூறுகிறோம் என்று கேள்.

ஐந்தாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 6

விரஜ ஜஞர்த்தி ஹன் வீரயோஷிதாம்
நிஜ ஜனஸ்மய த்வம்ஸ நஸ்மித!
ப[4]ஜ ச[2]கே ப[4]வத் கிங்கரீஸ்ம நோ
ஜலருஹாநநம் சா[1]ரு த[3]ரஸய 6

**பொ-ள்.**

சகே! தோழனே. பகவானைத் தோழனென்று அழைப்பது சாதாரண விஷயமல்ல. சகா = கூட இருந்து உண்பவன். சமானம்கியாதி புகழ் யாருக்கு ஒரே மாதிரி இருக்குமோ அவன் சகா-தோழன். சமானம்-இருவருக்கும் ஒரேமாதிரி புகழ் இருப்பது. இராமகிருஷ்ணன். இராம இலக்ஷ்மணன். கிருஷ்ணருஜனன், கோபிகிருஷ்ணன், ஸ்யாமசுந்தரன் என்பது போல. சகா என்பதற்கு மற்ெறாரு பொருளுமுண்டு- "சமப்ராண: சகாஸ்மருத:" இலக்கணம். யார் கூட வாழ்கிருரோ அவர் சகா. (நந்தலால்) எங்கள் வாழ்க்கை உன் கைவசம் இருக்கிறதென்று கோபிகள் கூறினர்கள். மேலும் நீயில்லாமல் நாங்கள் வாழமுடியாது. நீயும் நாங்கள் இல்லாதுபோனல் வாழமுடியாது. ஆகையால் "ஹிதம் உபதிஸாம:" முகுந்தா! உனக்கு நலமுண்டாகட்டும் என்று கூறுகிரும். முராரே! நாங்கள் உயிரோடிருந்து உனக்கு இன்பம் தரவில்லை. இனி இறந்து என்ன சுகம் தரப்போகிரும்? எனவே நீ மறைந்திருப்பது முறையன்று.

கிருஷ்ணன்—அங்ஙனமாயின் நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? கோபிகள்—பஜ, எங்களுக்குப் பணிபுரிவாயாக. நாங்கள் உன்னுடைய வியாதிக்கு மருந்து. உன்னுடைய இதயத்தில் வேதனையிருக்கிறது. கஷ்டம் இருக்கிறது என்று நாங்கள் அறிவோம். எனவே நீ யெங்களுக்குச் சேவை செய்வாயாக. எங்களுக்குப் பணி புரியாது போனல் நீ அந்த காரத்தில் தான் இருக்கவேண்டும். அந்தகாரம் = இருட்டு. இவ்வாறு கோபிகள் இசைத்தார்கள்.

கிருஷ்ணன் — நான் உங்களுக்குச் சேவை ஏன் செய்ய வேண்டும்? என்ன விசேஷம், என்ன மாதுரியம் உங்களிடமிருக்கிறது என்று முகுந்தன் மொழிந்தான். கோபிகள் ''பவத் கிங்கரீஸ்ம நோ'' நாங்கள் அனைவரும் உன்னுடைய தாசிகள். நாங்கள் உனக்குப் பணிப்பெண்கள். ஆகையால் நீயும் எங்களுக்குப் பணிபுரியென்றனர்.

வையகத்தில் ஒருவருக்கு ஒருவர் பணியெப்போது செய்கிறார்கள்? ஒருவரிடத்தில் ஒருவருக்கு ஆசையிருக்குமானால் சேவை செய்வார்கள்.

''ஆசாவான்யதி சம்சாரே சங்கர : கிங்கராயதே'' உலகத்தில் ஒன்றையடைய வேண்டும் என்று எண்ணினால் சிவனும் அடிமையாக வேண்டி வரும்

கிங்கர : — கிம்கரோமிதி தன்மை. முன்னே வந்து என்ன செய்ய வேண்டுமென கரம் கூப்பி நிற்பது கிங்கரனுடைய தொழில். கிங்கரன் — சேவகன். கிம்கர:- தனது தலைவனுக்காக எக்காரியத்தையும் செய்ய எவன் தயாராக இருக்கிறானோ அவன் கிங்கரன். ''கிம்கரோபவதி'' கரம் — கையில்லாவிடினும் சுவாமி கரத்தோடு - அவர் எண்ணப்படி நடப்பது கிம்கரன். கிங்கரனுக்கு முக்கிய பொருள் வேலைக்காரன். கேசவா! நாங்கள் உனது ஒவ்வொரு பணிகளையும் விசுவாசத்தோடு செய்ய முனைந்திருக்கிறோம் என்று கோபிகள் மொழிந்தனர்.

கிருஷ்ணன்—கோபிகளே! உங்கள் சேவை எனக்கு வேண்டியதில்லையென்றான். கோபிகள்-'விரஜஜனார்த்திஹன்' நீயுலகத்தைக் காப்பதற்காக அவனியில் வரவில்லை, பின்னே? உன்னுடைய அவதாரம் கோகுல வாசிகளின் துயரத்தைத் துடைப்பவற்காகத் தோன்றியிருக்கிறது. அங்ஙனம் இருப்ப நாங்கள் கோகுலவாசிகள் இல்லையா? எங்களைக் காப்பது நினது கடன் அல்லவா. தாமோதரா! எங்கள் கஷ்டத்தை நீ அகற்றுவாயாக என்றனர்.

பகவான் கோபிகளைச் சோதித்தார். அவர்கள் துகிலை யுரிந்தார். அவர்கள் இல்லத்தில் வெண்ணெயையும், உள்ளத்தில் பாவத்தையும் திருடினார். இதற்குக் காரணம் என்ன? அவர்கள் அச்சுதனைத் தங்கள் தலைவன் என்று எண்ணினார்கள். அதனால் அவர்கள் இல்லத்தில் களவாடினான் கண்ணன். மணிவண்ணா! எங்களுக்கு சர்வேசுவரி வேண்டுவதில்லை. ஏன், அவள் எல்லோருள்ளத்திலும் இருக்கிறாள். சர்வாந்தர்யாமி, சர்வதிருஷ்டா – எல்லாரையும் பார்ப்பவள்.

யோகிகளுக்கும், ரிஷிகளுக்கும் உரிய தெய்வமும் வேண்டாம். கிருஷ்ணா! நாங்கள் இப்பொழுது மிகுந்த வியாகுலமாக இருக்கிறோம். ஏன்? உனக்குத் தாசியாக இருந்தும் இன்னும் நீ வரவில்லையேயென்று. இஃது அபிமானத்தோடு பேசுகின்ற வார்த்தை. பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக அயன், அரன், அமரர் எல்லோரும் சென்று பார்க்கடலின் கரையில் நின்று நாராயணனை வேண்டினார்கள். அது நிமித்தம் நீ அவனியில் அவதாரம் எடுத்தாய். அமரர்கள் பிரார்த்தனை—

தத்ர கத்வா ஜகந்நாதம் தேவதேவம் விருஷாகபிம்
புருஷம் புருஷ சூக்தேந உபதஸ்த்தே சமாஹிதா: பாகவதம்.

மலரவன் மாயவனை முதலாவது ஜகந்நாதன் என்று அழைத்தான். அதனால் இந்திரன் அதைத் தடுத்தான். நான்முகனே! ஏன் நரஹரியை அழைக்கின்றாய்? மேலும் உலகத்தில் தேவர்களும் இருக்கிறார்கள். தைத்யர்களு மிருக்கிறார்கள். ஜகன்நாதன் எல்லார்க்கும் பொது. நமது பக்ஷத்தை மட்டும் ஏன் கையாள வேண்டும்?

கேசவனை யார் எப்படி வழிபடுகிறாரோ அவருக்கு அப்படி அடையப்படுகிறான். ஆகையால் நீங்கள் தேவதேவனென்று அவனை அழையுங்கள் என்றான் வாசவன். அப்பொழுது அயன் "தேவ தேவ விருஷாகபி"யென்றான். இம்மாதிரி கோபிகளும் 'விரஜஜனார்த்திஹன்' என்றார்கள்.

கோபிகள் கேட்பது - ரிஷிகேச! நீ உலகத்தைக்காக்கும் பொருட்டு அவதாரஞ் செய்தாயா, இல்லையா? என்பதை உலகமக்கள் அறியட்டும். ஆனால் நாங்கள் அறிவது என்னே? எங்களைக் காப்பதற்காக நீ மாநிலத்தில் வந்திருக்கிறாய் என்பது தான். நீ விரஜவாசிகன். விரஜவாசிகளிடத்தில் மிகுந்தப் பற்றுடையவன் நீ. சாரங்கபாணே! எங்கள் குல தெய்வமே! வீ ர சி ரே ா ம ணே! தானவீரா! உலகளந்த உத்தமனே! ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச்சம்மதமோ! எங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக என்றார்கள்.

ஞானம் பகவானை வியாபகமாகவும், எல்லாருக்கும் பொதுவாகவும் செய்கின்றது. பிரேம் பகவானைச் சொந்த மாக்குகிறது. 'விரஜஜன' விரஜகதௌ என்னும் தாதுவி லிருந்து விரஜ என்னும் சொல் பிறந்தது. செல்லுந்தன்மை யென்பது பொருள். யார் பகவானை நோக்கிச் செல்கிறா ரோ அவர் விரஜஜனன். நீங்கள் யாரை நாடிச்செல்கிறீர்கள்? உலகத்தை நாடிச் செல்கிறீர்களா? உலகநாதனை நாடிச் செல்கிறீர்களா? உலகத்தை நாடிச் சென்றால் துன்பந்தான். உ ல க ந ா த னை த் தேடிச்சென்றால் இன்பந்தான். நீங்கள் பகவானை நோக்கியொரு அடியெடுத்து வைத்தால் பகவான் உங்களை நோக்கியொரு அடியெடுத்து வைக்கிறார். அவர் ஒரு அடியில் உலகமுழுவதும் இருக்கின்றது. சொல்லத் தானே செய்கிறார் - ''ஏகாம் சனே ஸ்த்தோஜகத்'' கீதை. (பால்குனா!) எனது ஒரு பாதத்தில் உலகமனைத்துமிருக் கின்றன என்றார். இதனாலும் மாயவன் மலரடியில் மாநில முழுதும் வசிக்கின்றது என்பது புலனாம். இதைச் சுருதி யும் உறுதிப்படுத்துகிறது- ''பாதோ அஸ்ய சர்வா பூதானி'' சா. உ. வையகம் அனைத்தும் இறைவனது இனிய ஒரு பாதமாகுமென்பது பொருள். எனவே அவர் அடியெடுத்து வைக்கிறபோது தூரமோ நேரமோ ஆகாது.

வீரயோஷிதாம் - (முரளிதர!) நீ தானவீரன். ஏழைகளைக் கண்டு இரங்குவது உனது இயல்பு. கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு பிறருடைய கஷ்டத்தை நீக்குகின்றாய். ஆகையால் தயாவீரன் நீயென்று கோபிகள் கூறுகின்றனர். இவ்வாறிருந்தும் நீயேன் ஒளிந்திருக்கின்றாய்? பகவான், கோபிகளே! உங்கள் முன்னே வந்தால் என் மனத்தில் கிளர்ச்சி உண்டாகுமென்றார். எனவே யுங்கள் முன்னர் நான் வரவில்லை. உங்கள் நெஞ்சில் விகாரம் வந்திருக்கிறது. அபிமானம் தோன்றிற்று. அதனால் மறைந்திருக்கிறேன் என்றான் ரிஷிகேசன்,

கோபிகள் — ஜனார்தன! எங்கள் நெஞ்சில் விகாரம் வந்தால் நீயதை அகற்ற வேண்டுவது தானே, அதற்காக ஏன் ஒளிப்பானேன்? ''நிஜ ஜனஸ் மய தும்ஸ நஸ்மித'' ஆணவம் வந்தது உண்மைதான். அதற்காக ஓடிப்போய் ஒளிக்க வேண்டுமா? எங்கள் ஆணவத்தைச் சிரித்து சிரித்துப் போக்கிக் கொள்ளலாமே. பகவானுடைய முறுவல் (சிரிப்பு) பக்தனுடை ஆணவத்தை நீக்கும் வலிமையது. பகவானுடைய சிரிப்புத்தான் மாயை. அவருடைய முறுவலே அவித்தை யென்பது வல்லப ஆசிரியர்மதம். ஆகையால் நந்தலால்! குலுக்கென்று சிரி, அப்பொழுது தான் எங்களிடத்தில் உனக்கு இச்சையிருக்கிறதென்று தெரியும். நாங்கள் மாயையால் மோஹிதமாகி விட்டோம். எங்களுடைய ஆணவத்தை அடக்குவதற்கு எளிய உபாயம் எங்களைப் பார்த்து நீ சிரிப்பது தான்.

''குனித்தப் புருவமும் கொவ்வைச் செவ்வாயும் குமிழ் சிரிப்பும்'' என்கின்றது தேவாரம். சிவபெருமானைப் பற்றிப் பாடியது இஃது. பொருள் வெளி.

கிருஷ்ணன் — சரி, நான் இப்போது என்ன செய்ய வேண்டும் ? கோபிகள் — '' ஜலருஹாநநம் சாருதரஸய'' முன்னே ஓடிவா முகுந்தா! அச்சுதா! அழைத்து உன்னை

அலுத்துப்போனோம் வா வா. உன்னை அடைவதற்கு எங்களிடம் ஒரு சாதனமுமில்லை. அலுத்துப்போனோம், எனவே நீ வந்து தர்சய. தெரிசனங்கொடு. பரமசுந்தரகமல முகத்தைக் காட்டு. கண்ணா! மணிவண்ணா! கமலக்கண்ணா! மேக வண்ணா! ஓடிவா சிருங்காரமூர்த்தியே! சீக்கிரம்வா. நாங்கள் என்ன விரும்புகிறோம் என்பதைக் கேள்—எங்கள் தலையில் உன் கரமிருக்கவேண்டும். நேத்திரத்தின் முன் உன் முகம் இருக்கவேண்டும். எங்கள் இதயத்தில் நீ வசிக்க வேண்டும். எங்கள் மார்பில் நின் பாதம் இருக்கவேண்டும். எங்கள் ஆசையை நீக்கவேண்டும். ஆசைக்காக உன்னை வேண்டவில்லை, ஆசையை நீக்கும் பொருட்டு உன்னை வேண்டுகிறோம் என்றார்கள் கோபிகள்.

ஆறாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 7

பிரணத தேஹி நாம் பாபகர்சனம்
திரணச்ரானுகம் ஸ்ரீநிகேதனம்
பணிப் பணார்ப்பிதம் தேபதாம் புஜம்
கிருணுகுசேஷுந: கிருந்திஹிருச்சயம் 7

பொருள்

ஞானிகளைத் தன்வயமாக ஈர்ப்பதற்கு கஷ்டம் இறைவனுக்கு இல்லை. ஏனெனின்? இறைவனும் நிற்குணம் ஞானியும் நிற்குணத்தில் நிஷ்டையுடையவன். நிற்குணம் அருவம், சகுணம் உருவம். எனவே மனித இனம் மூன்று விதமாக இருக்கின்றன— சாத்விகமனிதன், ராஜசமனிதன், தாமஸமனிதன். சாத்விகமனிதனைத் தன்வயமாக்க இறைவனுக்கு அதிகக் கஷ்டமில்லை. அற்பமுயற்சிதான் எடுக்க வேண்டியிருக்கிறது. தனது பெருமையை அவன் முன்னே காட்டினல் போதும். அதை அன்பன் பார்த்ததும் அவன் மனம் ஒருமையாகி விடுகிறது. சமாதியும் கூடிவிடுகிறது. எதுவரை மனம் ஒருமைப்படுகிறதில்லையோ சாந்தியுண்டாகிறதில்லையோ அதுவரை சாத்விகமனிதனுக்கு இறைவனிடத்தில் நிலையுண்டாகிறதில்லை. ஆகையால் அவனைத் தன் வயமாக்குவதற்கு சிறிது முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. தனது மகிமையில் சிலவற்றை அறிவிக்க வேண்டி இருக்கிறது.

இரஜோகுணி மனிதனைத் தன் வயமாகச் செய்யக் கடினமாக இருக்கிறது. இ ர ஜோ கு ணி மனிதனுக்குக் கிடைக்கும் போகத்தில் தனக்குச் சுகம்-இன்பம் கிடைப்பதாக எண்ணுகிருன். நான் இன்பமாக வாழ்கிறேன் என்கிருன். இத்தகைய மனிதனைத் தன்வயமாகச் செய்வதற்குப் பகவான் அவதாரம் எடுக்கிருர். அவதாரம் எடுத்து அவன்

முன்னே தோன்றி அவனேடு பேசி, சிரித்து விளையாடு கிறார். அவனுக்குத் தனது மகிமையைக் காட்டுகிறபோது அவன் அவனுக்கு அடிமையாகிறான். அவன் — ஜீவன். அவனுக்கு — ஈஸ்வரனுக்கு என்பது குறிப்பு.

சுகதேவர் நாரதர் சனகாதிகள் எல்லாரும் நிற்குண பிரஹ்மத்தில் நிலைத்திருப்பவர்கள். இவர்கள் இயல்பாகவே பகவானைச் சந்திக்கிருர்கள். இவர்கள் எப்போதும் அருபத்தை விரும்புபவர்கள். இவர்களைத் தன் பக்கமாக ஈர்ப்பதற்கு இறைவன் பிரயாசைப் படுகிறதில்லை. ஸ்ரீவசு தேவர், அன்னை தேவகி 'இவர்களெல்லாம் தூயவர்கள். இவர்களுக்குக் குறைந்த உபதேசமே போதுமானது.

இங்ஙனம் இருக்க தீயமக்களாகிய இராஜசபுருஷர் கள் பிரஹ்மத்தையும் அறிகிறதில்லை, இறைவனையும் அறிகிறதில்லை. இறைவனையும் இனிய ஜீவனையும் ஒன் றென்று உணர்கிறதில்லை, சமாதியும் கூடுகிறதில்லை. ஆனல் வினையிலேயே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் "கர்மமே கண்ணுயினர்" என்றபடி. இந்தத் தீய மக்களை ஈர்ப்பதற்காக பகவான் மதுர வடிவத்தை யெடுத்து முன்னே வருகிருர். யாருக்கு உலகத்தில் அதிகப் பற்றும், குடும்பாதிகளில் மிகுதியான வேட்கையும், அநித் திய பொன் பொருள்களில் நித்யபுத்தியும் இருக்குமோ அவரைத் தன்னடியெட்டச் செய்வதற்கு மிக முயற்சிக்க வேண்டியிருக்கிறது. யாரிடத்தில் அக்ஞானம் குறைந்திருக் கிறதோ அதைச் சொல்ப்ப பிரகாசத்தால் ஈசுவரன் போக்குகிருர்.

யாருடைய இதயத்தில் அஞ்ஞான இருள் அதிகமா யிருக்குமோ அவருடைய அக இருளை யகற்றுவதற்கு ஹரி அவர் முன் தோன்றி ஆடவும் பாடவும் அழவும் சிரிக்கவும் புல்லாங்குழலை ஊதவும் செய்கிறார். அன்பனை மார்போடு அணைக்கிறார். தாய் சேயை அணைப்பது போல.

இம்மாதிரி பாகவதத்திற்குப் பொருள் பண்ணுவது ஒரு மரபு. இறைவனை எய்துவதற்கு நிற்குண அதிகாரி, தூய தீய தாமஸ மனிதர்கள் என்று வேறு பிரிக்கப்படு கின்றனர். இவைகளிலும் சாத்விகத்தில் சாத்விகம் சாத் விகத்தில் இராஜசம், சாத்விகத்தில் தாமசம் எனவும், இராஜசத்தில் சாத்விகம், ராஜசத்தில் இராஜசம் இராஜ சத்தில் தாமசம் எனவும், தாமசத்தில் சாத்விகம் தாமசத்தில் இராஜசம் தாமசத்தில் தாமசம் எனவும் சொல்லப் படுகின்றது. ஆனால் இப்பேதம் நிற்குணத்தில் இல்லை.

இந்தபேதத்தில் அதிக தாமச மனிதர்களுக்காக இறைவன் அனேக கோலம் பூண்டு வருகிறார்.

> "எத்தனை கோலங் கொண்டாய்
> எழுமலையானே நீதான்
> அத்தனை கோலந்தன்னை
> அறிபவர் உலகில் உண்டோ"

என்பது சமயோசிதமாலை. தூலமதியுடைய மனிதன் புத்தி யை உபயோகப் படுத்துகிறதில்லை, மனதைக் கொண்டு இறைவனை இதயத்தில் பார்க்க விரும்புகிறதுமில்லை. அத்தகைய மனிதனை அரவணைப்பதற்காக இறைவனும் தூலவடிவத்தை எடுத்து அவன் முன்னே வருகிறார். கிணற் றில் விழுந்தவனைத் தூக்கவேண்டுமானால் தூக்குகிறவ னுக்கு இறங்க வேண்டியிருக்கிறது. ஆகையால் பக்தன் எப்படி இருந்தாலும் பகவான் அவனைத் தன் மடியில் அமர்த் துகிறார்.

விசாரிக்குமிடத்து சாத்விகத்தைப் பார்க்கினும் தாமசம் சிறந்தது. ஏனெனின்? தலைமகனைப் பார்க்கினும் கைக்குழந்தை சிறந்ததைப் போல. இரவும் பகலும் நேரத் தில் சமமாக இருந்தாலும் இரவு சிறந்தது. எங்ஙனமெனில்? இரவில் அமைதி கிடைக்கிறது, பகலில் இல்லை.

சில கோபிகள் கூறுகின்றனர்— கிருஷ்ணமூர்த்தே! எங்கள் உள்ளத்தில் கள்ளம் இல்லை, பாவம் இல்லை. அங்ஙனம் இருப்ப, உன் திருமுகத்தை ஏன் காட்ட மறுக்கின்றாய் மாதவா?

ஒருவேளை, எங்கள் இதயத்தில் பாவம் இருந்தாலும் அதை அகற்றுவதற்கு வழிகூறுகிறோம் கேட்பாயாக—

"பணிப் பணார்ப்பிதம் தே பதாம் புஜம்
கிருணுகுச்சேஷீந : கிருந்தி கிருச்சயம்!"

கேசவா! நீ நின் பாதத்தை எங்கள் இதயத்தில் வை. வைத்தால் எங்கள் பாவம் நெருப்பில் விழுந்த பஞ்செனஎரிந்து போகும். பிறகு உனது பக்தி எங்கள் உள்ளத்தில் நிலைத்து இருக்கும். பாவம் நீங்கினால் பகவானுடைய தர்சனம் கிடைக்குமா அல்லது பகவத்து தர்சனம் கிடைத்தப் பின்னர் பாவம் போகுமா? இவை யிரண்டில் எது நன்று? பகவத் பிராப்தியில் மூன்று தடைகள். பிராப்தி அடைவு. தடைகள் - 1. மலம் 2. விக்ஷேபம் 3. ஆவரணம். மலம் என்றால் என்ன? பாவத்தின் ஒரு கூறு. பாவம் அருவப்பொருள். கண்ணுக்குத் தெரிகிறதில்லை. பின்னை? எவ்வாறு அறிவது? சக்கரக்கொல்லி ஒருஇலை. எந்தஇலையை நுகர்ந்த பின் சீனியும் கசக்குமோ அந்த இலையைச் சக்கர கொல்லி என்று அறியவும். எதனால் இறைவன் நாமம் கசக்குமோ — வெறுப்பாகத் தோன்றுமோ அது பாவம் எனப்படும். ஜ்வரம் காய்ச்சல் உடையவனுக்கு அல்வாவும் கசக்கும், பாவம் உடையவனுக்கு இறைவன் நாமம் கசக்கும். வெறுப்பாக இருக்கும். எவனுக்கு இறைவன் நாமம் கசக்குமோ அவன் உள்ளத்தில் பாவம் நிரம்பி இருக்கிறது என்று கொள்ள வேண்டும். ஜன்னி வந்தவன் அர்த்தம் இல்லாமல் புலம்புவான். பாவி பகவானை வைவான். சாகிறவனுக்கு மருந்து உள்கொள்ளாது. அதுபோல், பாவிகளுக்கு இதோபதேசம் பிடிக்காது. மேற்கூறிய மூன்று குற்றங்களும் நீங்கினால் ஞானம் வரும்.

சிலர் ஞானம் வந்தால் தான் முக்குற்றங்களும் நீங்கும் என்கின்றனர். இவ்விஷயத்தில் சற்றுச் சிந்திக்க வேண்டும்.

அன்பன் தானாகவே பாவத்தை(மலத்தை)யும் விட்சேபத்தையும் நீக்க வேண்டும். விட்சேபம் = சலனத்தன்மை. ஆவரணம் மட்டும் மிஞ்சி இருக்கவேண்டும். அதை ஆசான் அகற்றுவார். ஆவரணம் = மறைப்பு. மூன்றும் நீங்கின பின்னர் (முக்தி) இறையருள் தானே கிட்டும்.

நமது மனம் பகவானை விட்டுச் சம்சாரத்தை நோக்கிச் செல்லுகிறது. இது தான் பாவம். மனம் ஒரு வழியில் நிற்கிறதில்லை. ஆடிக்காற்றில் பட்டம் அலைவது போல் அலைந்து கொண்டிருக்கிறது. நாளைச் சாகப் போகிறவனும், இன்று ஆயிரம் ஆயிரம் எண்ணங்களை எண்ணுகிறான். இதுவே விட்சேபம். அமைதியை விரும்புபவன் எண்ணங்களைக் குறைக்க வேண்டும்.

குளத்தில் பாசம் விலகியதும் நீர் தெரிவது போல் எண்ணங்கள் குறைந்ததும் இதயத்தில் இறைவன் தோன்றுகிறான். அவன் அருள் நமக்குக் கிடைக்கிறது. உணவு உண்ணுகிறபோது பசி நீங்கித் திருப்தி வருகிறது. அம் மாதிரி இறைவன் இன்பத்தைச் சுவைக்கச் சுவைக்க சாந்தி உண்டாகிறது. ' கோபாலா! நாங்கள் எங்கள் காரியத்தை முடித்து விட்டோம். இனி உன் காரியத்தை நீ முடி'' என்று கோபிகள் கூறினார்கள்.

கோபிகள் மனத்தில் வேறு எந்த ஆசையும் இல்லை. அவர்கள் கூறுவதாவது — ''நோச்சேத் விரகஜாத அக்னி'' கோவிந்தா! நீ விரைவாக வந்து எங்களை நேசியாது போனால் உன்னுடைய பிரிவு என்னும் நெருப்பில் எங்கள் தூல உடல் எரிந்து சாம்பலாகி விடும். எங்கள் சித்தம் உன்னிடத்தில் இருக்கிறது எனவே தியான வாயிலாக உன்னை அடைந்து விடுவோம்.

இனி ஆவரணரூப மறைப்பை அகற்ற வேண்டும். முராரே! அது உன்னைச் சேர்ந்தது. முரன் என்னும் ஒரு தனவான் இருந்தான். அவனை ஹரி கொன்றார். அன்று முதல் ஹரிக்கு முராரி என்று பெயர். கேசவா! உன் நிமித்தம் எங்கள் குலம், மரியாதை, உற்றார், உறவினர்கள், இவர்கள் அனைவரையும் விட்டு விட்டு உன் பால் ஓடி வந்தோம்.

கோபிகள் மனத்தில் காமம் இல்லை. ஆனால் அன்பு இருக்கிறது. இதை அவர்களே கூறுகிறார்கள்— முகுந்தா! சகல வாசனைகளையும் புல்லெனத் தள்ளி ஒல்லென ஓடி வந்தோம். என்கிறார்கள். இதனால் அவர்கள் உள்ளத்தில் வேறு ஆசை இல்லை என்பது தெளிவு.

கோபிகள் கிருஷ்ணமூர்த்திக்காக எல்லா ஆசைகளையும் துறந்தார்கள். இதை ஜனார்தனன் ஒப்புக் கொண்டார். " மதர்த்த தியக்த சகல காமா : " தாமோ தரன் கூறுவதாவது— எந்நிமித்தம் எல்லா வாசனையையும் தியாகம் செய்தீர்கள் என்று கோவிந்தன் கூறினான்.

ஈண்டு அவர்கள் சாரங்கபாணியை விரும்புவது அவன்பால் வைத்த அன்பின் மிகுதியேயாம். ஒருவர் இல்லத் திற்கு அழையாமலே உண்ண வருகிறேன் என்றால் அவர் பால் வைத்த அன்பு மிகுதிதானே? பகவான் அழையாமலே குசேலர் துவாரகைக்குச் சென்றார். அதனால் அவர் பால் ஆசை இருந்ததென்று அருத்தம் அல்ல. தனது நாயகனி டத்தில் இச்சை வைப்பது உத்தமப் பெண்களுக்கு இயல் பேயாம். அதுபோல் பகவான் இடத்தில் காதல் வைப்பது பக்தனின் கடமையாகும். கோபிகளுக்குக் கண்ணனைத்தவிர காசினியில் யாரிடத்திலும் பிரியமில்லை. காசினி—உலகம்.

பாபகர்ஷணம், பாவம் குறைவது எப்படி? பாவம் எவ்வாறு மெலிவு அடையும்? பிரணத தேஹினும்— இறை வன் முன்னிலையில் வணங்க வேண்டும். வணங்கும் போது பாவம் தேய்ந்து ஒய்ந்து மாய்ந்து போகிறது. கர்ஷணம் - குறைதல். பாவத்தை நீக்குவதற்கு இருவழிகள்.

நான் என்னும் ஆணவத்தை விட்டுவிடுதல். மற்றொரு வழி தன்னை இறைவனோடு இணைத்துக் கொள்வது. ஞானியைப் பாவம் பற்றுகிறதில்லை. பாவம் இருப்பது மனத்தில். மனது அவித்தையின் பரிணாமம். பரிணாமம் — விகாரம், அவித்தை — அக்ஞானம், அறியாமை, மயக்கம் என்பன ஒரு பொருள். அவை ஞானியின் பால் இருக்கிற தில்லை. ஆதலால் ''ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும்'' என்பது பழமொழி.

ஆகாசத்தை ஒருவன் வண்ணம் பூசவேண்டுமென நினைத்தால் அஃது அறியாமையேயாகும். நிலத்தைச் சுத்தப் படுத்தலாம், நீள் விசும்பைச் சுத்தப்படுத்த முடியுமா? முடியாதென்பது முடிவு. ஸ்ரீ கிருஷ்ணன் தன்னை வணங்கு பவர் பாவத்தைப் பறிப்பவன். அதனாலன்றோ அவருக்கு ஹரி என்று பெயர். ஹரி — ஹரனாத் ஹரி என்பது இலக்கணம். ''கிருஷ்ணப் பிரணாமி ந புனரேதி ஜன்ம', என்கிறது பாகவதம். கிருஷ்ணனை வணங்குபவன் மீண்டும் பிறவியை அடைகிறதில்லை என்பது கருத்து. பணிந்தவ னுக்குப் பரமன் துணை புரிகிறான். குடை உடலுக்கு நிழலைத் 'தந்து துணைபுரிகிறது. கோவிந்தன் உயிரை ரட்சிக்கிறான். குடை ஜடப்பொருள். கோவிந்தன் சேதனப் பொருள். குடைக்கு அறிவு கிடையாது. கோவிந்தன் அறிவு வடிவினன். எனவே கேசவபக்தன் மீட்டு இங்கு வருவதில்லை. இங்கு = உலகிற்கு.

யாகத்தில் அஸ்வமேதயாகம் பெரிய யாகம். அந்த யாகத்தைச் செய்பவன் புண்ணியத்தின் பயனாகச் சொர்க்க லோகத்திற்குப் போகிறான். புண்ணியம் இருக்கும் வரை அங்கு வசிக்கிறான். புண்ணியம் முடிந்ததும் கீழே விழுகிறான்.

ஒரு தனவான். சிறந்த உணவு விடுதியில் தங்கு கிறான். அங்குள்ள உணவுப் பொருள்களைக் கண்டபடி

நுகருகிறான். மடியில் இருக்கும் பணம் குறைகிறது. துய்க்கிறபொழுதுத்தெரிகிறதில்லை. விடுதியை விட்டு வெளி ஏறும்போது வருந்துகிறான். மடியில் கை வைத்துப் பார்க்கிருன். பார்க்கும் போது வருத்தம் தெரிகிறது. அதுபோல சொர்க்கத்திலிருந்து போகத்தைப் புசிக்குங்கால் புண்ணியம் குறைகிறது தெரிகிறதில்லை. புண்ணியம் குறைந்ததும் விடுதி மேலாளராகிய இந்திரன் தலைகீழாகத் தள்ளுகிருன். அப்போது இவன் ஹா, ஹா என்று வருந்துகிறான்.

ஆகையால் போகத்தை நுகரும் போது கவனமாக இருக்க வேண்டும். "போகே ரோக பயம்" என்கின்றது நீதிவாக்கியம். மிகுதியான போகம் ரோகத்தைத் தருகின்றது என்பது கருத்து. தியாகம் பலத்தையும், போகம் ரோகத்தையும் ஈவது இயல்பு.

பாவம் என்பது யாது என்று சற்றுச் சிந்திக்க வேண்டும். சாதாரண மனிதனது பாவம். பொய் பேசுதல், திருடுதல், இம்சை முதலியன. யோகிகளுடைய பாவம் சித்தத்தின் சலனத்தன்மை. ஞானிகளுக்குப் பாவம் பேத தெரிசனம். பேதம் = வேற்றுமை என்பது பொருள். பக்தனுடைய பாவம் பகவானை மறந்து விடுவது. இவ்வாறு பாவம் பல்வேறு விதமாக இருக்கிறது. "பாதயதீதி பாவம், என்பது இலக்கணம். தனது லக்ஷியத்திலிருந்து கீழே தள்ளுவது எதுவோ அது பாவம் கோபிகள் பாவம் யாது? பகவானுடைய பிரிவு. சக்ரபாணி இப்போது மறைந்திருக்கிருர். இஃது அவர்களுடைய பாவமாகும். அப்பாவத்தை அவர்கள் போக்குவதற்கு அச்சுதனிடம் பிரார்த்தனை பண்ணுகிறார்கள்.

பிரணத தேஹிநாம் — பக்தனுடைய மார்பில் பாதத்தை வைத்ததும் அவன் பாவம் பறந்து போகிறது. கோபிகளுடைய மனத்தில் பாவம் எவ்வாறு வந்தது? அச்சுதன் கோபிகளோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தான்.

திடீரென அவர்கள் அகத்தில் அபிமானம் எழுந்தது? அகம் உள்ளம். என்ன அபிமானம்? தங்கள் அழகைப் பற்றி ஒருவருக்கொருவர் ஆராய ஆரம்பித்தனர். அலா! கீர்த்திகுமாரி! நமது அழகைக் கண்டு அச்சுதன் நம் பின்னே திரிகிருன் என்று சிலர் கூறத் துவங்கினர். சிலர் எங்கள் அழகைப் பார்த்து எங்கள் பின்னே திரிகிருன் என்றனர். இவ்வாறு அவரவர் அழகை எடை போட ஆரம்பித்தனர். அபிமானம் பல விதம். அபிமானம் வருகிற வழி பல உள்ளன. தானத்தில் அபிமானம். நான் இவ்வளவு தானம் செய்கிறேன் என்று வரும் அபிமானம். ஜனுபிமானம். நிரம்ப மக்களோடு வாழ்கிருேம் என்னும் அபிமானம். குணுபிமானம். என்னைப் போல குணசாலி யார் இருக்கிறார் என்ற அபிமானம். கல்வி அபிமானம். கற்றவர்களில் எனக்குச் சமானமாக யாராவது உண்டா என்னும் அபிமானம். மேற்கூறிய அபிமானங்களில் இவர்களிடத்தில் ஒன்றுமில்லை. இவர்கள்—கோபிகள். பின்னை? தங்கள் அழகைப் பற்றிய அபிமானம் அனைவரிடமும் இருந்தது.

''அபிமானம் மனிதனை நரகத்தில் தள்ளும்'' நன்மொழிக்களஞ்சியம் ஐநூறு. பொருள் வெளி. எந்த வாயில் வழியாக குப்பை வந்தாலும் அது தள்ளத்தக்கது தானே. குப்பை எது? அபிமானந்தான். மனிதன் இல்லத்தைத் தூய்மையாக வைத்திருக்கிறான். ஆனுல் உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருக்கிறதில்லை.

இல்லத்தில் நாம் வசிக்கிருேம், உள்ளத்தில் இறைவன் வசிக்கிறான். இதை மனிதன் அறிகிறதில்லை. தாமோதரா! வீட்டுக்குள் ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்தால் அவனைக் கட்டி வைப்பார்கள். அடிப்பார்கள், உதைப்பார்கள். ஆனுல் வீட்டை விட்டு ஓடிப்போக விடமாட்டார்கள். அம்மாதிரி எங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால் எங்களைக் கட்டிவை. அடி, உதை. அவ்வாறு செய்யாமல் எங்களை விட்டு

ஓடிவிட்டாயே, இது முறைதானு? இது நியாயமா? முகுந்தா! மொழி, முன்னே வந்து சொல் என்றார்கள்.

எல்லாப்பாவங்களும் அபிமானத்தைப் பற்றி இருக்கின்றன. கிருஷ்ணன்—நான் உங்களிடம் பாவம் இருக்கிறதாக எண்ணி ஓடவில்லே. பின்னே? நீங்கள் அன்னியப் பெண்கள். உங்களைத் தீண்டினுல் எனக்குப் பாவம் வரும் என்று ஒதுங்கினேன் என்றான்.

கோபிகள் — நடனகோபாலா! உன்னே வணங்கிய மனிதர்களுடைய ஜென்ம ஜென்மாந்தர பாவம் நீங்கி விடுகின்றது. அங்ஙனம் இருப்ப எங்ஙனம் உன்னேப் பாவம் பற்றும்? நெருப்பில் அழுக்குப் பற்றாதது போல் நெருப்பு வடிவமாகிய நெடுமாலே! நின்னேப் பாவம் பற்றும் என்பது விந்தையாய் இருக்கிறது.

கிருஷ்ணன் - கோபிகளே! உங்கள் வார்த்தை உண்மைதான். என்னேப் பாவம் பற்றமாட்டாது. அதுசரி. உங்கள் மார்பு கல்லேப் போல் கடினம். என் கால் மலர் போல் கோமளம். மென்மையானது. ஆகையால் உங்கள் மார்பில் என்பாதத்தை வைக்கமாட்டேன் என்ருன் முகுந்தன்.

திரணச் சராநுகம்— முராரே! நீ பசுவின் பின்னுல் காலணி இல்லாமல் வெறுங்காலோடு செல்கின்றாயே. இது முறைதானு? வனங்கள் நேர்பாதையாகவா இருக்கின்றன? பசுக்கள் செல்லும் வழியெல்லாம் நல்லபாதைதானு? நல் வழியில் மனிதனே செல்வதில்லே. பசுக்களுக்கு என்ன தெரியும். மாடுகள் போகும் வழியில் மாதவா! நடக்கின்றாயே, பசுக்கள் செல்லும் வழியெல்லாம் இராஜமார்க்கமா? அவ்விடங்களில் உன் மெல்லிய பாதத்தை வைக்கின்ருயே, எங்கள் மார்பில் வைப்பதற்கு என்ன சங்கோச்சம்? சொல்.

கல்லும் முள்ளும் நிறைந்த கானகத்தில் காலே வைக்கின்றாயே, கண்ணு! கமலக்கண்ணு! எங்கள் நெஞ்சில் வைப்பதால் என்னக் குற்றம்?

பகவான்—பசுக்கள் அழைத்துத் தானே நான்இங்கு வந்தேன். பூமாதேவி பசு அவதாரம் எடுத்து ஸ்ரீநிவாசனை அழைக்க, அதன் அழைப்பிற்கு இணங்கி இங்கு வந்தேன் என்றார். ப க வா ன் உடைய அவதாரம் ''கோ பிராமண ஹிதாயச'' பசுக்களையும், பார்ப்பார்களையும், வேதங்களையும், இரட்சிப்பதற்காகப் பகவான் அவதாரம் எடுக்கிறுர் என்று பாகவதம் கூறுகின்றது.

ஸ்ரீநிவாச! பசுக்கள் எந்தெந்த மார்க்கத்தில் செல்லுமோ தெரியாது. ஆகையால் அன்னை யசோதை இடம் சொல்லி காலணி அணிந்து கொள். வாசுதேவா! என கோபிகள் கூறினுர்கள்.

கோபாலன்—பெண்மணிகளே! பசுக்கள் நம் மாதா அல்லவா, அவைகள் காலணி இல்லாமல் நடக்கிற போது நாம் பாதஇரட்சை எவ்வாறு அணிவது? அன்னை முந்நிலையில் மகன் பாதுகை அணிந்தால் உலகம் என்ன சொல்லும்? நீங்கள் எண்ணிப் பாருங்கள். இந்து மதத்தில் பசுவைத் தெய்வமாக மதிக்கிறோம் அல்லவா. ஆதலின் அவைகள் முந்நிலையில் நாம் மி தி ய டி அணிவது நல்லதல்ல என்று நாரணன் நவின்றான்.

இருந்த போதினும் உங்கள் மார்பில் என் திருவடியை ஏன் வைக்கச் சொல்லுகிறீர்கள் என்று யாதவன் வினவினுன், கோபிகள் — ''ஸ்ரீநிகேதனம் — (நண்பனே எங்கள் கோவே நாதனே ஆதிமூர்த்தி) நினது மலரடியை வன்மை என்று சொல்லவில்லை. வேறு யார் சொன்னுர்? உனது மலரடி ஆனந்த சிந்து அல்லவா. இன்ப நிலையமான உனது திருவடி அன்பு வடிவமாகும். உனது ஒரு அடியில் உலக முழுவதும் அடங்கி இருக்கின்றன. ஓரடியால் மூவுலகத்தையும் அளந்த உத்தமனே! எல்லையில் இன்பம் ஈயும் இன்பமூர்த்தியே! இ வ் வா று இயம்பலாமா என்றுர்கள். இயம்புதல் இனிமையாகக் கூறுதல். ஜெகதீசா! உனது

மலரடியில் ஸ்ரீநிகேதனம்—ஸ்ரீவசிக்கிருள். திருமகள் வாசம் செய்கின்ற இடம் உன் அடி. அஷ்டலெட்சுமியும் உன் மலரடியில் மருவி இருக்கிருர்கள்.

"யத் வாஞ்சையா லலநா ஆஸ்ரயத் தப:" திருமாலுடையத் திருவடியில் இருப்பதற்காகத் திருமகள் தவம் செய்தாள் என்று பாகவதம் கூறுகின்றது. இதனுல் திருமகள் எப்போதும் திருமாலுடையத் திருவடியில் வசிக்கிறாள் என்பது தெளிவு.

அச்சுதன்—அரிவையர்களே! உங்கள் மார்பை அழகுபடுத்துவதற்காக எனது மலரடியை மார்பில் வைக்க வேண்டுமா? கோபிகள் நாங்கள் அவ்வாறு விரும்பினுலும் குற்றம் என்னே?

பணிப்பணுர்ப்பிதம்— நடனகோபால! காளியநாகத்தில் நடனமாடத் தானே வந்திருக்கின்ருய். காளியநாகத்தின் வரலாறு — கஸ்யப முனிவருக்கு இருதாரம். மூத்த தாரம் வினதை. இளையதாரம் கத்துரு. வினதைக்கு இருகுழந்தைகள். அருணன், கருடன், கத்துருவிற்கு நூற்றுக்கணக்கான பிள்ளைகள். அத்தனையும் நாகவடிவினர். ஒருமுறை வினதைக்கும் கத்துருவிற்கும் விவாதம் நடந்தது. அதில் வினதை தோற்றுப் போனுள். அதற்காக வினதை தாசியானுள். தனது அன்னையைச் சிறிய தாயார் தாசியாக்கி விட்டாளே என்று கருடனுக்கு மிக வருத்தம் இருந்தது. கருடன் கண்டபடி நாகங்களைக் கொல்லத் தொடங்கினுன்.

பாம்புகளில் காளியன் ஒருவன். அவன் மிகப் பலசாலி. அவனுக்கு நூற்றியொரு தலைகள் இருந்தன. நாகங்கள் அனைவரும் ஒன்று திரண்டு அயனை வேண்டினர். அயன்-நான்முகன். அவன் வந்தான், நாகங்களின் கஷ்டத்தைக் கேட்டான். நிகழ்ந்ததை நாகங்கள் கூறின. திசைமுகன் தெரிந்தான். தெளிந்தான்.

நான்முகன்—நாகர்களே! நீங்கள் மாசம் ஒருமுறை அமாவாசை அன்று ஒவ்வொரு நாகத்தைக் கருடனுக்குப் பலி கொடுத்து வாருங்கள் என்ருர்.

காளியன் அங்கிருந்து ஒருமுறை இருமுறை அவ்வாறு நடந்து வந்தான். இருப்பினும் இங்கிருந்தால் என்றைக்கும் ஆபத்துத் தான் என்றெண்ணி அதை விட்டு விட்டு ரமண பருவவத்திற்குச் சென்றுவிட்டான்.

அங்கிருந்து கொண்டு கருடனுக்கு உணவு கொடுக்கப்படாதென்று ஆணை இட்டான். இதைக் கேள்வியுற்ற கருடன் மீண்டும் அங்கிருந்து காளியனை விரட்டினுன். காளியன் அங்கிருக்கப் பயந்து வேறு இடம் போக வேண்டும் என்று இருக்குங்கால் கருடன் மீண்டும் அவன்பால் வந்து இம்சித்தான். காளியன் தலை பிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்று அதைவிட்டு யமுனைக் கரையில் உள்ள ஒரு ஆழமான மடுவில் வந்து ஒளிந்திருந்தான். மடு=குண்டம்.

இங்ஙனம் இருப்ப, கருடன் அங்கேயும் வந்து மீன்களை இம்சித்தான். அதைப் பார்த்துக் கொண்டிருந்த சௌபரி என்னும் மகாமுனிவர் கருடனை அழைத்து கருடா! திருமாலுக்கு நீ வாகனம். அகிம்சையை வடிவமாகக் கொண்டவர் திருமால். எனவே அவர் பக்தனுக இருந்தும் இம்சை செய்யலாமா? என்று வெகுண்டு மீண்டும் செய்வாயாகில் உன் சிரசு வெடித்து விடும் என்று சாபம் போட்டார். அன்று முதல் அவன் அங்கு செல்லவில்லை. காளியன் வரலாறு முற்றிற்று.

சர்ப்பத்தின் சிரசை அழகுபடுத்தும் நீ எங்கள் மார்பை ஏன் அழகு படுத்தக் கூடாது? தாமோதரன்—காளியநாகத்தினிடத்தில் விஷம் இருந்தது. கருவம் இருந்தது. உங்களிடத்தில் அப்படி ஒன்றுமில்லையே.

"கோபிகள்—கிருந்தி கிருச்சயம்" (மணிவண்ணு) எங்கள் இதயத்தில் காமம், ஆசை வடிவமாக வந்திருக்கிறது. சகல குற்றத்தையும் அகற்றும் நினது சரணம். அச்சரணூர விந்தத்தை எங்கள் இதயத்தில் வைத்து அகற்று. ஹிருச்சயம்—இதயத்தில் வசிப்பதால் காமத்திற்கு ஹிருச்சயம் என்று பெயர். காமம் = ஆசை. அது ஆத்மாவில் இருப்பதாகச் சிலர் கருதுகின்றனர். அது அறியாமை.

இக்கொடிய காமத்தை யதிகள், முனிகள், தபசிகள் கொன்று பார்த்தார்கள். ஆனுல், கொல்ல இயலவில்லை. காமனும் சாகவில்லை. இஃது இறக்கிறதில்லை. பின்னை? இதயத்தில் உறங்கிக் கொண்டிருக்கிறது. காளியநாகம் எமுனை மடுவில் வசிக்கிறது. இதை நீதான் விரட்ட வேண்டும் என்று கூறினுர்கள்.

மீண்டும் கோபிகள் கூறுவதாவது—பகவான் சங்கரனிடம் பயந்து எங்கள் இதயத்தில் ஒளிந்திருக்கிருன். இதயமென்னும் குகை மிக விலக்ஷணமுடையது. இதற்குள்ளே போவதற்கு நேர்வழி இல்லை. அத்தகைய குகை இது. மெள்ள நுழையவேண்டுமானுல் நேத்திராதி வாசல் தூரத்தில் இருக்கிறது. எனவே கோவிந்தா! நீ இதனுள் மெள்ள நுழைந்து காமனை வென்று அதில் குடியிரு என்ருர்கள்.

கேசவன்—மாதர்களே! நானும் அங்கு தான் வசிக்கிறேன். ஆகையால் என்னை நினையுங்கள் காமன் ஓடிப் போவான் என்ருன்.

"ஜஹாம் ராமு தஹாம் காமு நஹி" துளசி இராமாயணம். எங்கு இராமன் இருக்கிருனே அங்கு (காமம்) காமன் இல்லை என்பது பொருள். இரவும் பகலும் போல. பகல் இராமன், இரவு காமன். இராமனிடத்தில் இருள் இல்லை, காமனிடத்தில் ஒளி இல்லை. ஆதலின் என்னை நீங்கள் தியானம் பண்ணுங்கள் என்ருன்.

கோபிகள்—முராரே! இது முறையல்ல. தியானத்தில் நீ வந்தால் எங்களுக்குச் சந்தோஷமில்லை. பிறகு, "கிருணுகுச் சேஷுஈ:" வெளிப்படையாக வந்து நின் இரு பாதங்களையும் எங்கள் நெஞ்சில் வை என்றுர்கள். இவ்வாறு கூறுவதால் கோபிகள் காமம் உடையவர்களா? இல்லை, இல்லவே இல்லை. பின்னே? அன்பின் மிகுதியேயாம். அன்பின் காரணமாக அவர்கள் அவ்வாறு கூறுகிருர்கள். நமது இல்லத்திற்கு நண்பன் வந்தான். அவன் சங்கோசமுடையவன். சங்கோசம் - நாணம். நண்பனே! எனக்குப் பசி இல்லை என்று சொன்னுல், அதற்குப் பொருள் என்னே? சாப்பாடு வேண்டும் என்று தானே பொருள். நண்பன் மனக்கிடக்கையை அறிந்த வீட்டுக்காரன் துணைவியை அழைத்து விரைவாகச் சமையல் செய் என்றுன். வந்தவன்-பசி இல்லையென்று சொல்லியும் ஏன் சமைக்கிருள் என்றுன். வீட்டுக்காரன் - எனக்குப் பசிக்கிறது என்றான்.

உண்மையில் சிறந்த பொருளை வாங்கிக் கொண்டு வந்து சிறிது உண்ட பின்னர் நண்பனுக்கு அனைத்தையுங் கொடுக்க வேண்டும். அதுபோல கோபிகள் இன்பரசத்தைக் கோவிந்தனுக்குக் கொடுக்க நினைக்கிறார்கள். பகவானிடத்தில் வாசனை இல்லாததால் தன்னிடத்தில் இருப்பதாகக் கூறுகிறார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன் — கோபிகளே! நான் தேவதைகளின் ஆயுளைப் பெற்று ஜென்ம ஜென்மங்கள் எடுத்து வந்தாலும் உங்களுக்கு கடமைபட்டிருப்பேன் என்றான். ஏனெனின்? விடமுடியாதப் பற்றையும் விட்டு உறவினர்களை எனக்காக தியாகம்செய்து வந்திருக்கிறீர்கள். என்னை நம்புங்கள். அன்பு உள்நோக்கைக் கொடுக்கிறது. வெளியில் கண்ணோட்டம் இல்லாதிருப்பினும் உள்நோக்கம் அதிகமாயிருக்கும். பில்வமங்களனுக்குக் கண் தெரியும் வரைக் கண்ணன் தெரிசனம் கிடைக்கவில்லை. கண்ணிழந்த பின் அதோ பிருந்தாவனம்

என்று சொன்னன். அந்தக் கண் எது? அது ஞானக்கண். அதுவே அன்பின் விளைந்தக் கண். அதுவே பிரேமக்கண். ஊனக்கண் மறைந்தால் ஞானக்கண் உள்ளிருந்து வேலை செய்யும்.

அன்பனுக்கு மறைப்புக் கிடையாது. அன்பனும் ஞானியும் ஒன்று. பக்தியும். ஞானமும் ஒன்று என்பது போல. ஞானிக்கும் பக்தனுக்கும் மறைப்பு இல்லை. காசியில் கர பாத்திரி சுவாமிகள் என்று ஒருவர் இருந்தார். இராமலிங் கரன் என்னும் ஒரு மாணவன் இருந்தான். அவன் வெகு தூரத்தில் 'உள்ள கிராமத்தில் வசித்து வந்தான். அவனிடம் இது சமயம் உங்கள் குருநாதர் என்ன செய்கிருர் என்று வினவினால் உடனே சொல்லி விடுவான்.

இப்போது சுவாமிகள் குளிக்கின்ருர். உண்கிறார். சிலரோடு உரையாடிக் கொண்டிருக்கிருர் என்று காசியில் நடக்கின்ற விஷயத்தை இங்கேயே கூறி விடுவான். ஏழு அறைக்குள் இருக்கும் பொருளையும் தனது ஞானக்கண்ணுல் கண்டு கொள்வார்கள். கோபிகள் பிரிவு நிலையில் இருக் கிருர்கள். இதய வேதனையை எடுத்துக் காட்டுகின்ற ஒரு நிலை. யாருக்காக வீடு வாசலை விட்டு வெளியேறி இர-வென்றும் பாராமல் வந்தார்களோ, அவர் இப்போது மறைத்து விட்டார்.

என்ன விந்தை? கோபாலன் நம்மை வனத்தில் விட்டு விட்டு மறைந்து விட்டானே என்று வருந்திஞர்கள். ஆனல் வெறுக்கவில்லை. அதன் மூலம் அன்பு அதிகரித்ததே தவிர குறையவில்லை.

சில பொருளை அள்ளினல் குறையும், சில பொருள் குறையாது. பையிலிருக்கும் பொருளை அள்ளினல் குறையும். கிணற்றிலிருக்கும் தண்ணீரை அள்ளினல் பெருகும். அது போல கோபிகள் உள்ளத்தில் கோவிந்தன் பக்திக் குறைய

வில்லை. எங்ஙனம் அனந்த அபரிச்சின்ன ஆத்ம தத்துவத்தை அடைவதற்குச் ஜீவதத்துவத்தைப்பலி கொடுக்க வேண்டுமோ, அங்ஙனம் அச்சுதன் அருளைப் பெறுவதற்கும் நான் என்னும் ஆணவத்தை அக்கினியில் அவனம் செய்ய வேண்டும். புல்லோடு நெல் விளையாது. ஆணவத்தோடு அன்பு மலராது.

எவன் ஒருவன் அன்பு என்னும் தீயில் ஆணவத்தை அவனம் செய்ய விரும்ப வில்லையோ அவன் பக்தி மார்க்கத்தில் செல்லத் தகுதி இல்லாதவன். மீசையிலும் ஆசை! கூழிலும் ஆசை என்பது பழமொழி. ஆணவமும், சுயநலமும் திமிரும், வணங்காதத் தன்மையும், இறைவன் அன்பும் ஒன்றுபட்டிரா.

''கல்லானைக் காமுகனைக் கண்டாலே பெரும் பாவம்'' பொருள் வெளி. கண்ணனிடம் அன்பு இல்லாக் சுயவரை நினைத்தாலே பெரும் பாவம். மேற்கூறியது சமயோசிதமாலை.

கோபிகள் கூறுவதாவது- மதுசூதனு! உன் மலரடியை! எங்கள் மார்பில் வைத்துக் காமனைத் தட்டி எழுப்பிக் கொல்வாயாக என்றனர். இம்மாதிரி இறைவனிடத்தில் எல்லோரும் பிரார்த்தனை செய்யலாம். பொதுவான பக்தனும் செய்யலாம், விசேஷ பக்தனும் செய்யலாம்.

பிரார்த்தனை — பிரகிருஷ்ட வஸ்து யாசனே. இறைவனிடத்தில் எதைக் கேட்கவேண்டும் எதைக் கேட்கக்கூடாது எனத் தெரிந்துக் கேட்கவேண்டும்.

ஒரு அன்பன் இருந்தான். வறுமையோடு இருந்தான். இறைவனை நினைத்தான். அவர் வந்து அன்பனே! உனக்கு என்ன வேண்டும் என்று வினவினர். அன்பன்-ஐயனே! நான் தொட்டதெல்லாம் தங்கமாக வேண்டும் எனச் சொன்னுன். பகவான் நகைத்தார். ஆகட்டும் என்று அருளி மறைந்தார்.

அன்பன் வீட்டைத் தொட்டான். வீடு தங்கமாகியது. பாத்திரங்களைத் தொட்டான் அவையும் தங்கமாயின. தொட்டவை எல்லாம் தங்கமாயின. இறுதியில் உணவைத் தொட்டான் அதுவும் தங்கமாயிற்று. உணவும் தங்கமான பின் எதை உண்பது? உண்ணுது போனால் உயிரோடு எப்படி இருப்பது? இதை மனிதர்கள் ஊகித்து உணர வேண்டும்.

எனவே நன்ருக விசாரித்து இறைவனிடம் பிரார்த்திக்க வேண்டும் என்பது துணிபு. குழந்தையைப் போல் கோவிந்தனிடம் யாசிக்கக் கூடாது. குழந்தையைத் தாய் ஒக்கலில் வைத்து நெய்யும் பருப்புங் கலந்த உணவைக் குழந்தைக்கு ஊட்டுகிருள். அக்குழந்தை அதை விரும்பாமல் முன்னே திரிந்து கொண்டு இருக்கும் பூனைக்குட்டியையும், நாய்க்குட்டியையும் பிடிப்பதற்கு விரும்புகின்றது. தாய் ஒக்கலிலிருக்கும் ஆனந்தமும், இனிய உணவில் இருக்கும் ஆனந்தமும், பூனைக்குட்டி, நாய்க்குட்டியில் எங்கே இருக்கின்றன? இல்லை என்பது கருத்து. ஆனாலும் அது விரும்புகிறது. அது—குழந்தை.

நாம் அறிவாளிகள். அவன் திருவடியில் இருக்கும் ஆனந்தமும் அவன் ஊட்டும் உணவுகளிலிருக்கும் ஆனந்தமும் சம்சாரத்தில் எங்கே இருக்கிறது? இல்லை. எனினும் சம்சாரிகள் அதை விரும்புகிருர்கள். பாமரமக்கள் இறைவன் இனிய ஆனந்தத்தை மறந்து உலக இன்பத்தை விரும்புகிறார்கள். இது குழந்தை யாசிப்பது போலாகும்.

இன்றைக்குள்ள மக்களுக்கு நம்பிக்கையில் அவநம்பிக்கையும், அர்த்தத்தில் அனர்த்தமும் உண்டாகின்றன. மனத்தில் தோன்றியவண்ணம் பேசுகிருர்கள். யாரோ ஒருவன் மகாத்மா காந்தியிடம் ஒரு கேள்விக் கேட்டான். கர்ப்பவதி சிதையைக் காட்டில் விட்டு வரும்படி இராமன் தம்பியைப் பணித்தானே, இது அநியாயம் அல்லவா என்றும். நளன் தமயந்தியை வனத்தில் விட்டு விட்டு சென்று விட்டானே

இதுவும் கொஞ்ச அநியாயமா? ஸ்ரீகிருஷ்ணன் கோபிகளை அரண்யத்தில் (கானகத்தில்) விட்டு மறைந்ததும் பெரும் அநியாயந்தானே என்றான்.

மகாத்மாகாந்தி— இத்தனைக்கும் ஒரேவிடை. அது என்னை? மேலும் சீதையிடத்திலும், தமயந்தியிடத்திலும், கோபிகளிடத்திலும் கேட்டால் தெரியும் என்றார் காந்திஜி. அவர்கள் நல்ல பதில் சொல்வார்கள் என்பது குறிப்பு மேலே கூறிய மகளிர் கனவிலும் தம் கணவரை அநியாயம் செய்ததாகக் கருதவில்லை.

ஸ்ரீ ஜானகி கூறியதாவது — எனது பிராணநாயகன் ஸ்ரீராமன் என்னிடம் மிகுந்த அன்பு பூண்டிருந்தார். என்றுள். அவர் என்னைப் புறத்தில் தியாகம் பண்ணினுலும், அகத்தில் உயிருக்கு உயிராகவே இருந்தார் என்றுள். புறம்—வெளி' அகம்—உள்ளே.

பிரேமிற்கு வடிவம் "தத்சுகே சுகித்வம்" பொருள். கணவன் சுகத்தில் தான் சுகமாக இருப்பது. பிரேம்—அன்பு. கணவன் சுகத்திற்கு வேறாகத் தன் சுகத்தை எண்ணுவது காமம். காமம் வேறு அன்பு வேறு.

கோபிகள் கூறுவதாவது — மாயவா! மதுசூதா! நீ எங்கள் பக்தி வளர வேண்டும் என்று மறைந்து இருக்கிறுய். அது எங்களுக்குத் தெரியும். நீ விநோதப்பிரியன். இருப்பினும் எங்கள் இதயத்தில் அன்பு இல்லை. காமம் இருக்கிற தென்றுல். அதை நீக்கி அன்பை வளர்ப்பாயாக என்றனர்.

பக்தன் பகவானுடைய பாதத்தைத் தியானம் செய்கிறான். அதனுல் அவனுடைய காமம் வெயிலைக் கண்ட பனிபோல ஒடுகின்றது. கேசவா! நாங்கள் பக்தரல்ல. உன்னைத் தியானம் செய்வது அன்பர் கடமை. நாங்கள் அன்பர்களும் அல்ல. பின்னை? தூலமதியுடையவர்கள்.

எங்கள் புத்தி தூலபுத்தி. ஆகையால் நீயும் தூலவடிவம் எடுத்து முன்னே வந்து தோன்று என்றூர்கள்.

"தியானம் ஈஸ்வரச் சிந்தனம்" ஈஸ்வரச்சிந்தனம் - உலகத்தில் எதையும் நினையாமல் ஈஸ்வரனை மட்டும் நினைப்பது தியானம். இறைவனை நமது வடிவமாக நினைப்பது அநுக்கிரகத்தியானம். இத்தகைய தியானம் செய்ய எங்களால் இயலாது முராரே!

கோபிகளுடைய பிரேம் உலகத்தில் அன்பு என்று வழங்கப்படுகிறது. இவர்களைப் பகவத் பிரேமிகள் என்று உத்தவர் முதலியோர்கள் கூறுகின்றனர். இவர்களுடையத் தூளியை விரும்புகின்றனர். பிரமன் நாரதர், சுகமுனிவர் முதலிய மகான்களும் ஸ்ரீ கிருஷ்ணன் கதையை விரும்புகின்றனர்.

இவர்கள் எதற்காக விரும்புகிறூர்கள்? எமபயத்தினுல் அஞ்சி அவன் கதா இரசத்தைப் பருக விரும்புகிறார்கள். நிரந்தரம் பகவத்துக் கதை கிடைக்குமானுல் அயன் பதவியையும் தியாகம் பண்ணத் தயாராக இருக்கிறார்கள்.

ஆனுல் காமன் கிருஷ்ணனுடைய புதல்வன். அவன் பிதா முன்னிலையில் குறும்பு செய்யமாட்டான். பக்தன் காமனை அதட்டுகிறான். "ரே கந்தர்ப! கரம் கரதயசிகிம்?" ஏ காம தேவ! நீ உன்னுடைய கரும்பு வில்லையும் கணையையும் எடுத்து வீணுகக் கரத்தை ஏன் புண்படுத்துகின்றுய்? உனக்குத் தெரியாதா, எங்கள் சித்தம் சந்திரமௌலியின் திருவடியில் இருக்கும் அமுதத்தைப் பருகுகின்றது என்று நீ அறியாயா? ஈண்டு நினது வலிமை செல்லாது. என்று காமனைக்கடிந்தார் பர்த்ருஹரி.

காமன் கரத்தில் இருக்கும் வில் கரும்புவில். கரும்பு வில்லைக் காமன் கரத்தில் தாங்கிக் கொண்டிருக்கிறான். பாணம் புஷ்பம். ஆதலால் அவனுக்குப் புஷ்பதன்வா என்று பெயர். மற்றொரு இடத்தில் வில்லும் புஷ்பம் என்று மொழிந்திருக்கிறது.

"பதாம்புஜம் கிருஷ்ணு குச்சேஷு ந:" காமனைக் காலால் உதை என்று கூறினார்கள். காமம் மதயானைக்குச் சமானம். பகவானுடையத் திருவடி அங்குசத்திற்குச் சமானம். தாமோதரனுடைய தாளில் பல சின்னங்கள் பொறிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்று அங்குசம். சின்னம்-அடையாளம். யானையை அங்குசத்தால் அடக்குவது போல் எங்கள் அகத்திலிருக்கும் காமவடிவ யானையை மாதவா! உன் மலரடியால் அடக்குவாயாக. நின் மலரடியை எங்கள் மார்பில் வைத்தால் மதயானையைப் போன்ற காமன் மடிந்து விடுவான்.

காமன் மெலியவன். கண்ணன் வலியவன். எங்ஙனம் எனின்? எங்கு சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதம் உண்டாகுமோ அங்கு சுருதி பலவதி. ஸ்மிருதி துர்பலா. காமன் இதயத்தில் ஸ்மிருதியினால் உண்டாகிறான். காமம் சங்கற்பத்தால் தோன்றுகின்றது. "சங்கல்பாத் துகில ஜாயசே" நமது எண்ணத்தால் காமம் உதயம் ஆகிறது. நல்லவடிவத்தைக் கண்டும், போகப் பொருள்களைப் பார்த்தும், சிருங்கார இரசங்களைக் கேட்டும் அவைகளை மீண்டும் மீண்டும் நினைப்பது ஸ்மிருதி எனப்படும். ஸ்மிருதி என்றாலும், ஸ்மரணம் என்றாலும் ஒன்றேயாம். அதன்மூலமாக இதயத்தில் காமம் உண்டாகிறது.

இதற்குமாறாக ஸ்ரீகிருஷ்ணன் சுருதியினால் அடையப்படுகிறான். வேதம், புராணம், இதிகாசம், ரிஷிகள், மகான்கள், வித்வான் மூலமாக ஸ்ரீதரனுடைய நாமம், உருவம், குணம், லீலை இவைகளைச் செவியால் கேட்டும் மனமார நினைந்தும், நித்தமும் சிந்திக்கவேண்டும். இவைகளைச் சிந்திக்கிறபொழுது இதயத்தில் இறைவன் உதயமாகிறான்.

வாசனை வசத்தால் காமமும் சாதனை வசத்தால் இராமனும் மனதில் வருகின்றனர். ஆதலின் ஸ்மிருதியைப்

பார்க்கினும் சுருதி வலியது காமனை நோக்க இராமன் வலியவன். கண்ணன் வலியவனுதலால் எளிதில் வெல்ல வல்லவன். ஆசை சுவயம் தூஷிதமல்ல. பின்னை? தீயவஸ்து வினோடு பொருந்துகிற பொழுது ஆசை தூஷிதம் ஆகிறது. தரும சம்பந்தமான ஆசை குற்றமுடையதன்று. அறம். பொருள். இன்பம் வீடு எனும் நான்கிற்கும் சம்பந்தமாகின் ஆசையில் குற்றமில்லை. மேற்கூறிய நான்கிற்கும் முரணுன போது ஆசை தோஷத்தை அடைகிறது.

தயிர் இனிமையானது. பகலில் பருகினுல் குணம் கிடைக்கும். இரவில் பருகினுல் குற்றமுண்டாகும். இஃது காலத்தால் வந்த குணமும் குற்றமுமாம். காமத்தின் நடு விலிருந்து கண்ணன் வருகிறான். மேகத்திலிருந்து சூரியன் உதிப்பதுபோல.

பிரகாசம் ஒன்றாயிருப்பினும் அதில் பல பொருள்கள் விளங்குகின்றன. மரம், மலை, மடு, நதி, வீடு, வாசல் விளங் குகின்றன. அவ்வாறு அகண்ட ஞானத்தில் பல்வேறு பொருள்கள் பல்வேறு விதமாகத் தோன்றுகின்றன.

பொருள்கள் அனைத்தும் ஞானத்தால் தோன்றுகின் றன. ஆனுல் அஞ்ஞானிகள் கடஞானம் அழிந்து படஞானம் உண்டாகிறது என்கிறார்கள். கடம்—குடம். படம்—துணி. பொருள் வரும் போகும். ஆனுல் ஞானம் வருகிறதுமில்லை போகிறதுமில்லை. இதை அஞ்ஞானிகள் அறியார்.

காமம் சம்சாரத்தை நோக்கி வந்தால் கேடு. இறை வனை நோக்கி வந்தால் வீடு. வீடு-மோட்சம். விஷயத்தை விரும்பி இச்சை வைத்தவன் விஷயி, பகவானை விரும்பி இச்சை வைப்பவன் பக்தன். ஆத்மாவில் இச்சை வைப்ப வன் ஞானி. காமமும் பிரேமமும் ஒன்றுதான். இக்காலத் தில் நிஷ்காமபிரேமைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசுகிருர் கள். அதைப் பற்றியும் சற்றுச் சிந்திக்க வேண்டும்.

ஒருமுறை அந்தணன் ஒருவன் செல்வந்தனிடம் சென்றான். தனிகன் — வேதியரே! வந்ததற்குக் காரணம் என்னவென்று வினவினான். வேதியர்—சேட்டுஜீ! இன்று ஏகாதசி. தானம் செய்வதற்குரிய நன் நாள். இன்று தானம் பண்ணினால் புண்ணியம் உண்டாகும் என்றார்.

சேட்டுஜீ — புண்ணியம் எனக்கு வேண்டியதில்லை என்றான். நிஷ்காமனாகிய எனக்கு சுவர்க்கத்தினால் என்ன பயன் என்றான். எனவே தானஞ் செய்யமாட்டேன் என்றான். மேலும் எல்லா நாட்களும் ஒரே நாள் தானே, ஏகாதசி என்ன துவாதசி என்ன என்றான்.

மறையவர் நிராசையோடு வீடு திரும்பினார். சிறிது நேரத்தில் செல்வந்தன் இல்லத்திற்கு மற்றொருவன் வந்து தனிகனே! நான் ஒரு அதிகாரி எனக்கு ஆயிரம் பணம் கொடும், உமக்குப்பெரும் தொழில் நடத்துவதற்கு அனுமதி தருகிறேன், அதன் மூலம் உமக்கு ஐந்து லட்சம் ரூபாய் கிடைக்கும் என்றான். இவ்வாறு இசைத்ததும் தனிகன் உடனே அவரிடம் ஐயாயிரத்தை எடுத்து அதிகாரி கையில் கொடுத்தான். அதிகாரி வாங்கிக் கொண்டு மறைந்தார்.

இப்படி ஏமாந்து போனாலும் போவார்களே தவிர நல்லகாரியத்தில் தான் தேடிய பணத்தை உபயோகிக்க மாட்டார்கள். மற்றொருவன் வந்து சேட்டுஜீ இப்படி ஏமாந்து போகலாமா என்றான். சேட்டுஜீ- எனக்குப் பணத்தில் ஆசை யில்லை. நிஷ்காமமாய்க் கொடுத்தேன் என்றார் சேட்டுஜீ. வந்தவன் இதுதான் நிஷ்காமமாவென்று நகைத்துப் போனான்.

இவர்கள் இராமதாஸல்ல, காமதாஸ். காமதாஸ்—. காமனுக்கு அடிமை. ஒரு கற்புடைய மங்கை கொண்ட கணவனிடம், உம்மிடத்தில் ஒன்றையும் விரும்பமாட்டேன் நான் நிஷ்காமமாயிருக்கிறேன் என்றால் என்ன அருத்தம்?

தன் கணவனிடம் ஒன்றையும் விரும்பாது போனால் பிறர் பால் விரும்புகிறாள் என்று தானே அருத்தம். உணவு உறைவிடம் உடை எல்லாம் அவளுக்கு வேண்டுவது தானே. இதை ஊகித்துணர வேண்டும். இப்படிப்பட்டவர்கள் பணத்தில் ஆசை வைக்கிறார்கள். பவனத்தில் ஆசை வைக்கிறார்கள் ஆனால் பகவானிடத்தில் நிஷ்காமம் என்கிறார்கள். இவர்கள் நிஷ்காமத்தை என் சொல்வது?

குசேலர்—சிசுபாலன் தந்த வக்தரன், கம்சன் இவர்கள் பால் யாசனை செய்திருந்தால் கிருஷ்ணனுக்கு அவமானந்தானே. சுதாமா–குசேலர் அவர்களை விட்டு விட்டு பகவானிடந்தானே சென்றார். தன்னுடைய வேலைக்காரன் மற்றொருவரிடம் கடனோ, தானமோ கேட்டால் முதலாளிக்குத்தானே கேவலம்? உண்மையான நிலவரம் என்ன? இறைவனிடந்தான் இயாசிக்க வேண்டும்.

ஒரு சமயம் கிருஷ்ணபகவான் அன்னை யசோதையிடம் நான் உன்பாலை அருந்தமாட்டேன் எனக்குப் பசியில்லை என்று சொல்லி விட்டு ஆட்டுப்பாலையும் மாட்டுப்பாலையும் பருகினால் அன்னை யசோதைக்கு அவமானந்தானே.

இந்தியன் ஒருவன் அன்னிய நாட்டிற்குச் சென்றிருந்தான். அங்கு ஒரு மங்கையை நேசித்தான், அவள் மையலில் விழுந்தான். சிலகாலம் இவ்வாறு கழிந்தது. பின்னர் அவளை அங்கு விட்டு விட்டுத் தன்னாட்டுக்கு வந்தான். வந்தவன் மீண்டும் அங்கு திரும்பவில்லை. அவள் அங்கிருந்து ஒரு ஓலை எழுதி அனுப்பினாள். ஓலை கடிதம். அவன் அதை வாசித்தான்.

அதில் அவள் — நண்பனே! நாம் இருவ்ரும் ஒருயிர் ஈருடல் போல் வாழ்ந்தோம் ஆனால் என்னை விட்டு விட்டுச் சுவதேசம் சென்றுவிட்டீர்கள். எனக்குக் கொஞ்சம் பணம் அனுப்பி வையுங்கள். நான் அந்தப்பணத்தை வைத்து வேறு

மனிதனோடு கலந்து வாழ்வேன் என்றாள். இஃது கற்புடைய நங்கைக்கு அழகுதானுவென்று அன்பர்கள் உணரவேண்டும். எவன் ஒருவன் இறைவனைச் சற்றும் அறியவில்லையோ. எவனுக்குப் பகவானோடு சம்பந்தம் இல்லையோ அவன் மனத்தில் வந்ததெல்லாம் வளங்குவான். வளங்குதல்—சொல்லுதல்.

கோபிகள் மதுசூதனன் திருவடியில் பலகுணங்களைக் கூறுகின்றனர். "பணிப்பணூர்ப்பிதம்" பகவானுடைய பாத கமலம் குற்றத்தைப் போக்கவல்லது என்றும், "ஸ்ரீ நிகேதனம்" திருமாலுடைய திருச்சரணம் இகபர சௌக்கியத்திற்கு நிலயம் என்றும். நிலயம் - இடம். சரணம் பாதம்.

திரணச் சரானுகம் என்றதால் இறைவன் திருவடி எளிய முறையில் அடையப்படும் என்றும், கூறுகின்றன. 'பிரணத தேகினும் பாப கர்ஷணம்" இவ்வாக்கியம் அபிமானிகள் தங்கள் அபிமானத்தைத் தியாகம் செய்து விட்டு வந்தால் அவன் பாவத்தைப் போக்கும் வலியது என்கின்றது. எது அவன் திருவடி. அவன் - கண்ணன்.

பகவானது பார்வையில் புண்ணியமும் இல்லை, பாவமும் இல்லை, மகான்கள் திருஷ்டியில் எல்லாம் சமம் தான். குருடன் பார்வையில் சகலமும் இருள்தான். ஈண்டு பார்வை என்பது—எண்ணம். ஈண்டு—இங்கே.

கிஷ்கிந்தாபுரியில் வாலியும், சுக்ரீவனும் வாழ்ந்து வந்தனர். இவர் இருவரும் சகோதரர்கள். இருவருக்கும் சிலகாரணத்தால் பகை மூண்டது. அண்ணனுக்கு அஞ்சி சுக்ரீவன் அனுமானோடு ரிஷியமுகபருவதம் வந்து தங்கினர். இங்ஙனம் இருப்ப ஸ்ரீராமனும் இளையபெருமாளும் பிராட்டியாரைத் தேடி அங்கு வந்தார்கள். அங்கு — மலையடி வாரத்திற்கு

வந்தவர் இருவரையும் சுக்ரீவன் மலைமிசை ஏறிப் பார்த்தான். நம்மைக் கொல்வதற்கு அண்ணன் வாலியால் ஏவப்பட்ட இரண்டு கூற்றுவர்கள் வருகிறார்கள் என்று அஞ்சி அனுமானைப் பார்க்கச் சொன்னான். அனுமான் பெரிய பண்டிதன். ஞானவான். "புத்திமதாம் வரிஷ்டம்" வான்மீகி இராமாயணம். அறிவாளிகளில் அனுமார் சிறந்தவர். அவர் இருவரையும் ஞானக்கண்ணால் நோக்கினார். நம்மைக் காப்பதற்காகத் திருமால் இருவடிவத்தோடு வருகிறார் என்று உணர்ந்தார். மலையிலிருந்து கீழே குதித்தார். இருவரின் எதிரே ஓடி வந்தார். கார்முகில் வண்ணனைக் கண்டதும் துள்ளினான், துயரத்தைத் தள்ளினான், அளவில் ஆனந்தத்தை அள்ளினான். சுக்ரீவனுக்குப் பகைவராகவும், அனுமானுக்குப் பெரும் தெய்வமாகவும் இருவரும் தோன்றினர்.

பார்வையில் வேற்றுமையே அல்லாமல் பொருளில் இல்லை. கருப்புக் கண்ணாடியை மாட்டி வெள்ளை மலரைப் பார்த்தால் அது கருப்பாகத் தெரியும். சிவப்புக் கண்ணாடியை மாட்டிப் பார்த்தால் சிவப்பாகத் தெரியும்.

இங்கு மலரென்பது பொருள். கண்ணாடி என்பது மனம். பாவம் புண்ணியம் இறைவன் பார்வையில் இல்லை. பாவ புண்ணியத்தின் இலக்கணம் தெரிவது அவசியமும் அவசரமுமாம். "பாதயதீதி பாவம் என்பது பாவத்திற்கு இலக்கணம். மனிதனை மேலே இருந்து கீழே தள்ளுவது பாவம் என்பது பொருள். பாவி மேலே ஏறமாட்டான். புண்ணியம்—புனாதீதி புண்ணியம் என்பது புண்ணியத்திற்கு இலக்கணம். மனிதனைப் புனிதப்படுத்துவது புண்ணியம் என்பது பொருள்.

"பாவி சர்வத்ர பாபம் ஆசங்கதே" பாவிகள் — எல்லோரையும் பாவிகளாகவே பார்க்கிறார்கள். உலகில் நம்மைக் குற்றவாளியென்று யாரால் சொல்ல முடியும் என எவன்

நினைக்கிறானோ அவன் பரம அக்ஞானி என்று சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்.

கோபிகள் ஸ்ரீ கிருஷ்ணனிடம் ஒரு தோஷத்தையும் பாக்கிறதில்லை. அவர்கள் தம்மிடத்திலுள்ளக் குற்றத்தைப் பார்த்து அதை நீக்கும் பொருட்டு தமது மார்பில் சரண கமலத்தை வைக்கச் சொல்லுகிறார்கள். கண்ணன்—கோபி களே! என்னை ஏன் தொல்லை பண்ணுகிறீர்கள். நான் உங்கள் நெஞ்சில் என் காலை வைக்கமாட்டேன் என்றான்.

கோபிகள்— இந்த நெருப்பை நீ தானே மூட்டினாய் என்றார்கள்.

ஏழாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 8

மதுரயாகிரா வல்கு வாக்யயா
புதமனோக்ஞ்யா புஷ்கரேட்சண 1
விதிகரி ரிமா வீரமுஹ்யதி
அதரசீதுநா ஆப்யாயஸ்வந: 11 சு.8

பொருள்

கோபிகள் — நீ எங்களைப் பித்தர்களாக ஆக்கி விட்டாய். எனவே நாங்கள் உனக்குத் தாசியாகி விட்டோம். கிருஷ்ணன் — நீங்கள் எனக்கு ஏன் தாசி ஆகி விட்டீர்கள்? கோபிகள் — எங்களை மயக்கிவிட்டாய். மதுரயாகிரா—யது நந்தன! இனிமையான மொழிகளால் எங்களை ஏமாற்றி விட்டாய். மதுரம் — தேன் போன்ற வாணி. மதுரவாணி. பகவானுக்கு வடிவம் மதுரம். இனிமை.

பகவானது வாணி இனிமையானது. கனிமொழி என்பது கருத்து. ''பாகுகனிமொழி'' என்பது திருப்புகழ். பகவானுடைய வாணி மதுரவாணி என்று யார் சொன்னுர்? தேவர்கள் சொன்னுர்கள். ''மத்யவ்யா கிரா அபநயதாத் புராண : புருஷ :'' ஏ பழமையான பரமாத்மன்! நின்னது இனிய மொழிகளால் எங்கள் துயரத்தைத் துடைப்பாயாக என்றனர் இமையவர்கள்.

ஸ்யாமசுந்தர! உனது வாணியிலிருந்து தேன் சொட்டுகிறது. உரையில் நயம் இருக்க வேண்டும். ஞயம்பட உரை என்ருர் அவ்வையார். ''ஜிஹ்வா மே மது மத்தமா'' வேதம். ஜிஹ்வா-நாக்கு. மதுமத்தமா-தெளிதேன், சிறந்த தேன்மொழி.

கரும்பில் இரசம் இருக்கிறது. பழத்தில் இரசமிருக்கிறது. ஓஷதிகளில் இரசம் இருக்கிறது. இவை எல்லாம் ஜடப்பொருள்கள். நாம் சேதனம் உடையவர்கள். அவ்வாறிருப்ப, நமது வாக்கில் இ ர ச ம் இருக்க வேண்டாமா

புருஷஸ்ய வாக்ரச : என்பது வேதவாக்கு. சாமவேதம். வாக்கில் இரசமில்லாத மனிதன் என்ன மனிதன்?

கோபிகள்—மதுசூதனு! நீ இனிமையாகக் கூறுகின்ருய். கண்ணன்—போதும் போதும், கோபிகள்—வல்குவாக்யயா— உனது உரைநடை வியக்கத் தக்கது. நினது உபந்நியாசம் சப்தாலங்காரம் அருத்தாலங்காரத்தோடு கூடியது.

வாணியில் நான்கு குணங்கள் இருக்க வேண்டும். 1. மெய்யுரைத்தல் 2. வீண்பேச்சுப்பேசாதிருத்தல் 3. இதம் உரைத்தல் 4. நயம்பட உரைத்தல் முதலியன.

உண்மை உரைத்தால் வருத்தம் உண்டாகாது. கவலே வராது. மனதில் மகிழ்ச்சி உண்டாகும். நோய் வராது. இதமாகக் கூறும் போது விவாதம் இல்லாமல் அமைதி உண்டாகும். சாந்தி ஏற்படும். குறைவாகக் கூறும் போது சிரமம் நீங்கும். இனிமையாகப் பேசும் போது கசப்பு நீங்கிக் கோபம் வராது. வாக்கியத்தில் ஆங்காட்சா உண்டாக வேண்டும்.

ஆங்காட்சா—சொல்பவர் என்ன சொல்ல விரும்புகிறார் என்ற எண்ணத்திற்கு ஆங்காட்சா என்று பெயா. பேசுகிற போது எண்ணிப் பேச வேண்டும். யோக்யதை—நாம் எதைப் பற்றிப் பேச விரும்புகிரேமோ அதை நன்றாக விளக்க வல்மை இருக்கவேண்டும். ஆசக்தி - எந்த வேளே யில் எதைக் கூற வேண்டுமோ அதைக் கூற வேண்டும். விவாகக்காலத்தில் மரண சம்பந்த மொழிகளே உரைக்கலாகாது. உண்ணும் போது மலமூத்திராதிகளேப் பேசலாகாது. வாணியில் இரசம் இருத்தல் அலங்காரம், அழகு, சொற்சோர்வு இன்மை, இவை முதலியன இருக்க வேண்டும். ஒருவன் வீட்டிற்கு நண்பன் வந்தான். வீட்டுக்காரர் சிறிது உண்ணுங்கள் என்ருர். இதற்குப் பொருள் என்னே? நிரம்ப உண்ண வேண்டும் என்பது தானே? ஆம். இப்பொருளேத்

தெரியாமல்வந்தவன் சிறிதே உண்டு விட்டுக் கையைக் கழுவி விட்டுப் போனால் வீட்டுக்காரன் சொன்ன சொல்லுக்குப் பொருள் தெரியவில்லை என்று தானே அருத்தம்.

புதமனோக்ஞயா— நடனகோபாலா! உனது வாணி பெரிய ஞானிகளையும் மயக்குகின்றது. நாங்கள் அப்பாவி மக்கள். எங்களை மயக்குவது எம்மாத்திரம். நாங்கள் கிராமீணப்பெண்கள். நீயோ நடனகரன். சாதுரிய சிகாமணி, கபடநாடக சூத்திரதாரி. புஷ்கரேட்சண—கமலலோச்சனன். தாமரைக்கண்ணன் என்பது பொருள்,

கமலம்— கம் - ஜலம். ஜலத்தை அலங்கரிப்பதால் கமலம். கமலம் பகவானுக்குக் கண்ணாக இருக்கிறது. திருஷ்டவ்யா, வக்தவ்யா, ஆப்யாயிதவ்யா : கேசவா! நீ எங்கள் முன் வர வேண்டும், தரிசனம் தர வேண்டும்.

வக்தவ்யா — நீ எங்களோடு உரையாட வேண்டும். ஆப்யாயிதவ்யா — எங்களை இரட்சிக்க வேண்டும் என்றார் கள். புஷ்கரேட்சண— ஈட்சணம்— கண், பார்வை, திருஷ்டி, தரிசனம், நோக்குதல் என்பன பரியாயம். ஒரு பொருள் என்பனக் கருத்து.

எவனது பார்வை சுந்தரமோ அவன் வாழ்க்கை சுந்தரம். அழகு என்பது பொருள். திருஷ்டி = ஞானம். அறிவு. ஒரு மனிதனுக்கு அறிவு செம்மையாக இருந்தால் வாழ்க் கையும் செம்மையாக இருக்கும். கண் பெரும்பான்மையாக ஞானத்தைக் குறிக்கும். புஷ்கரம் - தடாகம். இதயம் என்பது தத்துவார்த்தம்.

இதயத்தில் யாருக்குப் பார்வை இருக்குமோ அவர் வாழ்க்கை நன்றாக இருக்கும். இறைவனே "அகமுகத்தவர் சேர்வர்" கைவல்யம். புறத்தே பார்க்காமலும், புறத்தே பேசாமலும், வீதியில் யார் என்ன கூறுகிறார்கள் என்று கேட்காமலும் உள்ளே நோக்குவது புஷ்கர ஈட்சணன்,

அகம்-உள்ளே. புறம் வெளியே வெளியே உலகம், உள்ளே பகவான். முறையே இருக்கிறது, இருக்கிறார். என்பது கருத்து. ''மலர்ந்த கண்ணிருந்தாலும் குழியில் வீழ்வர் காண்,' இருகண்களும் தெளிவாக இருந்தாலும் கவனம் வேறு இடத்தில் இருக்குமானல் குழியில் வீழ்வார் என்பது திண்ணம். கமலநயன! உனது பார்வையில் காமம் வர முடியாது. எனவே எங்கள் முன் சற்று வரவேண்டும்.

பகவானுடைய கண்ணுக்குக் கமலத்தை உவமான மாகக் கூறப்பட்டிருக்கிறது. கமலத்தில் பல குணங்கள் இருக்கின்றன. அவை — கோமளம், சீதளம், அசங்கம், பற்றற்றத்தன்மை, அழகு, நர்மணம் முதலிய பிற குணங் களும் உள்ளன. இக்குணங்கள் அனைத்தும் கண்ணன் கண் ணிலும் இருக்கின்றன. எனவே கேசவனது கண்ணுக்கு உவமானமாகக் கமலத்தைக் கொடுக்கப் பட்டிருக்கிறது. நயனம் = கண்.

பகவானுடைய கண் நமது இதயத்தில் இருக்கும் வரை காமம் அங்கு இருக்கமாட்டாது. புஷ்கரேட்சணன்-புஷ்டிம் கரோதீதி புஷ்கரேட்சண. புஷ்டி வலிமையைக் கொடுப்பவன் என்பது பொருள். பகவானது கண் திறமை யை அளிக்கிறது என்பது குறிப்பு.

பகவான் அமிருத வடிவினன். ஆகையால் அவன் நேத்திரத்திலிருந்து அமிருதம் வடிகிறது. நமது இதயத்தில் இருக்கிற கவலை எனும் நஞ்சை நீக்குகிறது. உன் மனம் தியானத்தில் நிற்கவில்லை என்ருல் கேசவனை நினை. அவன் உருப்புக்களைப்பார். உன் கண்ணைக் கொண்டு அவன் கண் ணைப்பார். பக்திக்குக் காதல் என்று பெயர்.

காதலுக்குக் கண் முக்கிய சாதனம். கண்ணோடு கண் நோக்கும் போது காதல் பெருகுகிறது. ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' என்கின்றது தேவாரம். அன்ப

னுக்கு ஹரியைத் தவிர உலகத்தில் ஒன்றும் தெரிகிற தில்லை. ''சீதா ராமமய சப்ஜகஜாநி'' துளசி இராமாயணம். பொருள் — எல்லா இடங்களிலும் சீதை இராமமயமாகப் பார்க்க வேண்டும் என்பது கருத்து. ''கண்டனவெலாம் மோனஉரு வெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம்'' தாயுமானுர். பார்க்கின்ற பொருளெல்லாம் மோனஉருவு பரமாத்ம சொரூபம் என்று கருதி வணங்குவோமாக என் பது பொருள்.

தாமோதரன் திருவடியைப் பார். அவ்வாறு பார்த் தால் உன் மனம் திர நிலை பெறும். சந்தேகம் தெளியும். 'மதுரயா கிரா வல்கு வாக்யயா'' இவ் விரு வாக்கியமூலமாகப் பகவானது வாணியின் மகத்துவம் கூறப்பெற்றது. பகவா னுடைய அமிருத இரசத்தால் நனைக்கப்பெற்றது அவர் வாணி. மனதில் உள்ள வருத்தத்தை எவ்வளவு அடக்கி வைத்தாலும் பேசுகிறபோது எப்படியாயினும் சிறிது வெளி யாகிறது.

வல்கு வாக்யயா— இதயத்திலிருக்கிற எண்ணத்தை வெளிப்படுத்தும் முறைக்கு வல்கு என்று பெயர். வார்த்தை ஒன்று தான். பேசும் முறையால் இனிமையும் கசப்புமாகிறது. வாருங்கள் என்ருல் இனிமை. வா என்றால் கசப்பு. இம் மாதிரி வார்த்தை ஒன்றாய் இருந்தாலும் பேசுகிறத் தன் மையால் கசப்பும் மதுரமும் ஆம்.

ஒருவன் சபைக்குப் போனுன். அவையில் இருந்தான். சிறிது நேரம் கழிந்ததும் எழுந்தான். இங்கு இருப்பவர்களில் பேர் பாதி மூர்க்கர்கள் என்ருன். கேட்டவர்கள் சீறி எழுந் தனர். மற்றொருவன் எழுந்து பேர் பாதி பேர் அறிவாளி கள் என்றான். வார்த்தை அது தான். இரண்டாமவன் மொழிந்தது மதுரமாயிற்று. வார்த்தை இனிமையாயிருக்க வேண்டும்.

புதமனோக்ஞயா—கிருஷ்ணன் வாக்கியம் கேட்டவர் உள்ளத்தில் கிளர்ச்சியை உண்டுபண்ணும். மகிழ்ச்சியைத் தரும். இந்த வாக்கியத்தை ஞானிகள் கேட்டு இன்புறு கின்றனர்.

மகாபாரதத்தில் ஒருகதை. பாண்டவர்க்குத் தூதனுக ஜனார்தனன் ஹஸ்தனுபுரத்திற்குப் புறபட்டுச் சென்றார். அச்சுதன் முன்னே ஆரிய முனிவர் அனைவரும் சென்றனர். மத்தியில் மாதவன் அவர்களை நோக்கி முனிவர்களே! நான் ஆன்மீகச் சொற்பொழிவு நடத்தப் போகவில்லை. அரசியல் சம்பந்தமாகப் போகிறேன் நீங்கள் ஏன் வருகிறீர்கள் என் ருன். முனிவர்கள்! மாதவா! மதுசூதனு! எங்களுக்கு அரசி யலைப் பற்றிக் கவலை இல்லை. உன் வசனத்தில் இருந்து வருகின்ற வசனுமிருதத்தைப் பருகவருகின்ருேம் என்றனர். இதனுல் முகுந்தன் வாணி இனிமையானது என்பது தெளிவாம்,

விதிகரீரிமா வீரமுஹ்யது - விரஜபூமியில் வீரசப்தம் பெண்பாலிலும் வருகிறது. கோபிகள் — தங்களுக்குள்ளே அரிவீர என்று கூறுகிறார்கள். ஆனுல் ஈண்டு தயாவீரனைக் குறிப்பதற்காக வருகின்றது. விதிகரீரிமா- முஹ்யதி- சியாம சுந்தர! நாங்கள் உன்னுடைய தாசிகள். மோகத்தை அடை கிருேம். எங்களுக்கு கிருபயைச் செய்வாயாக. தயை = தயவு. ''தயாகரோ பகவான்'' இந்தி.

கேசவா! நீ தயாவீரன். அன்புடன் எங்களை நோக் கும் போது எங்கள் பிராணன் எங்கள் உடம்பில் இல்லா மல் உன் திருவடியை நோக்கி வருகின்றது. உனது வாணி எங்களை மயங்கும்படியாகச் செய்கின்றது. ஆதலின் எல்லா வற்றையும் மறந்து உன்னையே நாடிக் கொண்டிருக்கிருேம்.

அதரசீதுநா ஆப்யாயஸ்வந:- உனது அதராமிருதத்தை அளித்து எங்களை இரட்சிப்பாயாக என்ருர்கள். அதரம் =

உதடு. உன்னுடையவாணி மிகுந்த மதுரமுடையது. வேதம் உனக்கு வாணியாக இருக்கிறது. ''தஸ்யவாக் விருதாஸ்ச வேதா'' சுருதி தஸ்யவாக் பரமாத்மாவிற்கு வேதம் வாணி. விரிவான வேதங்கள் இறைவனுக்கு வாணியாக இருக்கின்றன என்பது குறிப்பு.

''அபாம சோமம் அமிர்தாபபூம'' என்பது வேதம். வேள்வியை வளர்த்து சோமஇரசத்தைப் பானம் செய்வோம். சுவர்க்கத்தை அடைத்து அமிருதத்தைப் பருகுவோம் என்பது மேற்கூறிய வாக்கியத்தின் பொருள். இந்த சோமஇரசமும், அமிருதமும் எங்களுக்கு வேண்டாம்.

ஏனெனின்? அவ்வமிருதம் அழிவுடையது. ஊசிப் போன அமிருதம். நாங்கள் உன்னுடைய தாசிகள். உன் பால் மிகுந்த வேட்கை உடையவர்கள். நினது ஆணையைச் சிரமிசை வைத்து பாலனம் செய்பவர்கள். ஆதலால் எங்களை நீ கரையேற்ற வேண்டும் என்றூர்கள். ஆப்யாயிதம் காப்பது முராரே! நீ காக்கக் கடவாய் என்று கோபிகள் கூறினர்.

அமிருதம் ஐந்து வகைப்படும். 1. தராமிருதம் 2. தேவாமிருதம் 3. வசனமிருதம் 4. அதராமிருதம் 5. ஞானாமிருதம் தரா-பூமி பூமியிலிருந்து விளையும் பொருள்கள் அனைத்தும் அமிருதம்தான். அவை - நெல், கோதுமை, பழவர்க்கங்களனைத்திலும் இரசமிருக்கிறது. அந்த இரசம் அமிருதம்.

இவைகளுக்கு இரசம் எங்கிருந்து வருகிறது? சந்திரனிடத்திலிருந்து வருகிறது. சந்திரன் சுவயம் இரசமயன். அவனது கிரணங்கள் இரவில் இரசத்தை வருஷிக்கின்றன. ஓஷதிகளில் இரசம் விழுகிறது. இவ்வமிருதம் தராமிருதம் எனப்படும்.

இரண்டாவது அமிருதம்—பார்க்கடலைக் கடைகின்ற பொழுது அமிருதம் எழுந்தது. தேவர்களுக்குக் கிடைத்தது. அவ்வமிருதம் தேவாமிருதம். இஃது அள்ளினால் குறையும். வெகுகாலம் இருந்தால் ஊசிப்போகும்.

மூன்றாவது வசனுமிருதம் - வசனம் சொல்லுதல். வசனம் - பிரவசனம். பிரவசனம் பண்ணும்போது இனிமையாக இருக்கவேண்டும். இன்னும் பேச மாட்டார்களா? இன்னும் பேச மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருக்க வேண்டும். இதற்கு வசனுமிருதம் என்று பெயர்.

நான்காவது போஜனுமிருதம். அறுசுவையோடு கூடிய அடிசில். அடிசில் - இனியஉணவு. அன்னத்தை அதிகம் விரும்பும் அவர்க்கு உணவு அமிருதம். இவர்கள் சாப்பாடு அமிருதமாக இருந்தது என்பார்கள், ஐந்தாவது அமிருதம்— ஞானுமிருதம். உண்மையான அமிருதம் இதுதான். ஞானந்தான் அமிருதம். அமிருதம் என்னும் சொல்லிற்கு நேரர்த்தம் அழிவில்லாதது. எதற்கு அழிவில்லையோ அதற்கு அமிருதம் என்று பெயர். அத்தகையது ஞானம். அதுவே ஞானுமிருதம்.

இத்தனை அமிருதங்களுக்கும் மேலான அமிருதம் பகவானுடைய அதராமிருதம். ஆகையால் கோபிகள் கூறுவது— அச்சுதா! அமரரேறே! நினது அதரா அமிருதத்தை எங்களுக்கு அளித்து ஆப்யயஸ்வ. காப்பாயாக.

விதரவீர! நீ தயாவீரன். கொடையில் வல்லவன். திறந்த மனத்துடன் நாங்கள் உன்பால் வந்திருக்கிறோம். பிரேமி தான் பிரேமை விரும்ப முடியும். அன்பில்லாதவன் பிரேமை எங்ஙனம் அறிய முடியும்? முடியாதென்பது முடிபு. இனத்தைக் கண்டு இனம் சேரும். அன்பர்தாம் அன்பை அறிய இயலும். மற்றையர் அறிந்தென்னும்? பயனில்லை என்பது குறிப்பு. அன்பனுக்குத் தெரிகிறது. வம்பனுக்குத் தெரியாது.

ஒரு அரசன் இருந்தான். அவன் பல பெண்களை பலவந்தமாக இழுத்துக் கொண்டு வந்து சிறையில் வைத்தான். நாள் தோறும் சபையில் கொணர்ந்து சவுக்கையால் அடித்து

என்னை விரும்புங்கள் என்பான். இப்படிப் பல வந்தமாக யாரும் யாரிடமும் நட்புக் கொள்ள இயலாது.

கோவிந்தன்—கோபிகளே! நீங்கள் அன்பு அன்பு என்று பேசுகிறீர்களே ஒழிய உங்கள் உள்ளத்தில் அன்பு இருக் கிறதாகத் தெரியக்காணோம். அன்பிற்குரிய லெட்சணமும் உங்களிடத்தில் இல்லை. என்னைச் சினந்து பேசுகிறீர்கள். கசப்பாகப் பேசுகிறீர்கள். அதட்டுகிறீர்கள். விசேஷம் என்ன வென்றால் நான் உங்களை விட்டுப் பிரிந்தும் இன்னும் உயிரோடு இருக்கிறீர்களே இது தானு அன்பு?

பதில்—சியாமசுந்தர! உனது பிரிவால் எங்கள் உயிர் பிரியவில்லை, அது எங்கள் அன்பிற்குக் களங்கந்தான். இதற் குக்காரணம் யார்? நாங்கள் அல்ல. எங்களது தோஷமும் அல்ல. பின்னை? குற்றம் உனது கதைக்குத் தான்.

எட்டாவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் ૭

தவகதாமிருதம் தப்த ஜீவனம்
கவிபிரீடிதம் கல்மஷாபகம் 1
சிரவணமங்கலம் ஸ்ரீமதாததம்
புவிகிரணந்திதே பூரிதாஜனா : ।11 சு.9

பொருள்.

தவகதா = உனது கதை. நீ எங்களிடம் கூறிய மொழிகள் அமிருதம். உன்னைப் பற்றி வேறு யாராவது பேசினால் அமிருதமாக இருக்கிறது. அங்ஙனம் இருப்ப, நீ நேராகப் பேசும் போது ஏன் அமிருதமாக இருக்காது? நின் மொழி காதில் விழும் போது என்ன சொல்லவேண்டும். ஆகா? அம்மம்மா?

கோபாலன்—என் கதை அமிருதமா? ஆம் அமிருதத்தைப் பார்க்கினும் அதிக சுவையானது. தகா—களைப்பு. களைப்பை எது அகற்றுமோ அது கதை. பகவானுடைய கதையைக் கேட்கும் போது களைப்பு நீங்குகின்றது. பிறவியில் இளைப்பு, சம்சாரத்தில் களைப்பு. பகவானுடைய கதையில் செழிப்பு. ஹரி கதா கதா ஔர்சப் விருதா வியதா. உண்மையில் கண்ணன் கதை தான் கதை. மற்றவை எல்லாம் வீண் கதை.

அமிருதம் — நாஸ்திமிருதம் இதிஅமிருதம், எதைப் பருகினபிறகு சாகிரதில்லையோ அது அமிருதம். பாகவதத்தில் ஒரு கதை வருகிறது நைமிஷாரண்யவாசி சவுணகாதிகள் ஆயிரம் வருஷம் கதை கேட்க வேண்டும் என்று சங்கற்பம் பண்ணிக் கொண்டனர். கதை கேட்டார்கள். வருஷம் ஆயிரம் கழிந்தது. கழிந்ததும் யாரும் சாகவில்லை. காரணம் என்னை? பகவானுடைய கதையைப் பருகப் பருக மரணமில்லாத பெருவாழ்வைப் பெற்றனர்.

இதற்கு மாறாக மன்னன் பரிட்சித்திற்குப் பாகவதம் சொல்லச் சுகமுனிவர் ஆரம்பித்தார். அவ்வமயம் அமரர்கள் பொற்குடங்களில் அமிருதத்தை அள்ளித் தலைமிசை சுமந்து வந்தனர். சுகப்பிரம்மம் அவர்களை வரவேற்று வந்த காரணத்தை வினவினர். தேவர்கள் — முனிவரே! இந்தத் தேவாமிருதத்தைப் பரிட்சித்திற்குக் கொடும், பாகவதாமிரு தத்தை எங்களுக்குக் கொடும் என்றனர்.

இதைக் கேட்டதும் சுகமுனிவர் குலுக்கென்று நகைத் தார். தேவாமிருதம் எங்கே! பாகவதாமிருதம் எங்கே என்று எள்ளி சிரித்து இமையவர்க்குப் பாகவதாமிருதம் கொடுக்க வில்லை. இதனாலும் பாகவதாமிருதம் சிறந்ததென்பது தெளிவு. யாருடைய மனம் சம்சாரத்தில் மூழ்கிவிட்டதோ அவன் இறந்தவனுகிறன். எவன் ஒருவன் தன் மனத்தை யும், புத்தியையும் விஷயத்தில் எறிந்திருக்கிறனே அவன் உயிரோடு இருப்பினும் இறந்தவனுவான். இதயத்தில் இருக் கும் இறைவனை விட்டு விட்டு வீதியில் மனத்தைத் திரிய விட்டிருக்கிறான். அதனுல் செத்தவனுகிறன்.

இவன் மீண்டும் கதையைக் மேட்கிற போது பகவா னுடையக் கதை அவனை இரட்சிக்கிறது.

வாசுதேவ கதாபிரஸ்ந: புமான் ஸத்ரீன்
புநாதிஹி. வக்தாரம் பிருஸ்ச்சகம்
சுரோத்திருன் தத்பாத சலிலம்யதா 11

பொருள் — எவ்வாறு கண்ணன் காலடியிலிருந்து வந்த கங்காஜலம் மக்கள் மனதில் உள்ள பாவத்தைப் போக்குகிற தோ அவ்வாறு பகவானுடைய கதாமிருதம்-சொல்பவரையும், கேட்பவரையும், ஆண் பெண் இருபாலாரையும் புனிதப் படுத்துகின்றது.

மனிதனே! உன் வாழ்நாள் எவ்வாறு கழிகிறதென்று எண்ணிப்பார். வீண்பேச்சுக்களிலும், சூதாடுவதிலும், குடி

பழக்கங்களிலும், வீதிகளில் பிரயோஜனமில்லாமல் திரிவதும் மோசமான செயலிலும் கழிகின்றது. இதைப்பற்றி உனக்குத் தெரிகிறதில்லை. ''காலோநவிக் ஞாயதே'' பர்த்ரஹரி. நம் காலம் கழிவது நமக்கே தெரிகிறதில்லை. அதை நாம் அறிவதும் இல்லை.

''வீழ்நாள் பாடாமை நன்றாற்றின் அஃதொருவன் வாழ்நாள் வழியடைக்குங் கல்'' குறள். பொருள். வீழ்நாள் படாமை நன்றாற்றின் = வீழ்நாள் — வீழ்தல் — கழிதல். நன்று = அறம். தருமம். ஆற்றின் = ஒழுகுதல். வாழ்நாள் = பாழ்நாள் ஆகாமை. அறநெறியில் கழியுமானுல் அது — அந்த வாழ்நாள். அவனுக்கு வழியடைக்கும் கல். அவன் பிறப்பை மாற்றுவதற்குக் கல் = தடையாக இருக்கும். பிறவியை வரவொட்டாமல் கல்போல் தடுக்கும் என்பது குறிப்பு.

எனவே வாழ்நாளை அறவழியில் செலுத்த வேண்டும். நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை மறந்து விட்டோம். இதுதான் மரணம். ''நாவை மிருத்யுர் வியாக்ர இவஅத்தி ஐந்துந்'' புலியைப்போல் யமன் மக்களை கொல்வதில்லை. ''பின்னை? பிரமாதம் வை மிருத்யுரஹம் ப்ரவீமி'' பிரமாதமே எமனுக வந்து கொல்லுகிறது. பிரமாதம் = கடமையைச் செய்யாதிருத்தல். ஆகையால் பகவானது கதை அமிருதத்தைப் பார்க்கினும் சிறந்தது என்பது தெளிவு.

தப்தஜீவனம் — தப்தாநாம் ஜீவநம் — தப்தஜீவணம். ஒருவன் வெயிலின் கொடுமை தாங்கமாட்டாமல் தவிக்கிறான். மற்றொருவன் நெருப்பின் வெப்பம் தாங்கமாட்டாமல் தவிக்கிறான். இவர் இருவர்க்கும் குளிர்ந்த ஜலம் கிடைக்கிற பொழுது இன்பம் உண்டாகிறது. தப்தம் = கொதிப்பு. ஜீவனம் = வாழ்க்கை.

மனிதனுடைய வாழ்க்கை எத்தனையோ விதத்தில் கொதிக்கிறது. பணம் இருக்கும், குழந்தை இராது. அதனால் கவலை. குழந்தை இருக்கிறது. பணம் இல்லை. கவலை. பணம் இருக்கிறது. குழந்தைகள் இருக்கின்றன, வந்த மனையாள் சரியில்லை. அதனால் கவலை. எல்லாம் இருக்-கின்றன. மனைக்கு வந்த மருமகள் குணம் இல்லை. அதனால் கவலை. இவ்வாறு சீவனம் தப்தம். கவலை. இவ்வாறு அனந்த கவலைகள் அலையலையாக இல்லத்திலும் உள்ளத்திலும் வந்து கொண்டு இருக்கின்றன.

எவனொருவன் பகவானுக்காகக் கொதிக்கிறானோ அவனுடைய கவலையைப் பகவானுடைய கதை வேரோடு அழித்து விடுகிறது. வாழ்வை அளிக்கிறது. இன்பத்தை ஈகிறது.

இன்றைக்கு இன்பமாக இருப்பவன் என்றைக்கும் இன்பமாக இருப்பான் என்று சொல்ல இயலாது. இன்று துன்பம் உடையவன் நாளை இன்பம் உடையவனாக ஆகலாம். இன்று இன்பமுடையவன் நாளைத் துன்பமுடையவனாக ஆகலாம். இது வாழ்க்கையின் இயல்பு.

"சக்ரநேமிக் கிரமேண" வண்டியின் உருளை-சக்ரம் ஒருமுறை மேலே ஏறுகிறது. மறுமுறை கீழே இறங்குகிறது. அம்மாதிரி வாழ்வும் தாழ்வும். இன்று உனக்கு மனை இருக்கிறது. உன்னுடைய .மனையாள் இருக்கிறாள். மைந்தன் இருக்கிறான். இவர் எல்லோரும் நாளைக்கும் இருப்பார்கள் என்று எண்ணுகிறாயா? எனவே சாவதானமாக இரு. நாளை ஓலையும். எமதூதரும் வரும்போது என் சொல்லுவாய் மடநெஞ்சமே? பகவானது கதையைக் கேள் பாவனமாவாயே.

சுகதேவர் கூறுவதாவது - பரிட்சித்து எங்கு மகான்கள் கூடுகிறார்களோ அங்கு பகவானுடைய கதை நதி

ரூபமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. மகாத்மாக்கள் மதுசூதனன் சரிதாமிருதத்தை மகிழ்ச்சியோடு கூறுகிருர்கள். அக்கதாமிருதத்தை அன்போடும் ஆர்வத்தோடும் பருகிவந்தால் அவர்களைப் பசி, தாகம், வியாதி, பயம், சோகம், மோகம் இவை தீண்டமாட்டா. சோகம் = கவலை. கவலை இறந்தகாலத்தை நினைக்கும்போது வருகிறது. நம்மிடத்தில் இவ்வளவு பணம் இருந்ததே, இப்போது இல்லையே என்று எண்ணுகிறபொழுது கவலை வருகிறது. கழிந்ததை நினைக்கும்பொழுது கவலை அவசியம் வரும், கழிந்தது நல்லதேயாயினும் மீண்டும் நினைப்பது வேதனை தரும். எனவே மீண்டும் நினைக்கலாகாது.

இக்கவலை பகவானது கதையை நினைக்கும் போதும், கேட்கும் போதும் நீங்குகிறது. பயம் எதிர்காலத்திலிருந்து வருகிறது. இன்று இருக்கிற பொருள் நாளை இல்லாது போனுல் என்னவாகும் என்னும் பயம். இஃது வரும் காலத்தை நினைக்கிற போது வரும். இதுவும் இறைவன் இனிய கதையைக் கேட்கும் போது நீங்கி விடுகிறது. அச்சம் மிச்சம் இல்லாமல் ஓடி விடுகிறது.

தியக்தோதமபி பாததே ... பாகவதம். முநிநாயக! எனக்கு நன்றாகத் தெரியும். பசி, தாகம் எவ்வளவு என்று ஒருநாள் குறித்த நேரத்தில் அன்னமும் ஜலமும் கிடையாததால் தபசுவி பிராமணர் கழுத்தில் உயிரில்லாத பாம்பைப் போட்டேன். அந்த பாவத்திற்குக் காரணம் பசிதாகந்தான். அத்தகைய பசிதாகம் இன்று எனக்கு எதையும் செய்யவில்லை. இப்போது பசிதாகம் தோற்றவில்லை. உம்முடைய திருமுகத்திலிருந்து வருகிற பாகவதாமிருதத்தைப் பருகுவதால் எனக்குப் பசியுமில்லை தாகமும் இல்லை என்றான் வேந்தன். இதனுல் கதாமிருதம் மிகச் சிறந்ததென்பது தெளிவு.

நிகழ்காலத்திலிருந்து மோகம் வருகிறது. மோகம் - மனிதனைத் தன்நிலையிலிருந்து திருப்பி விடுவது. மோகம் மயக்கம் என்பன ஒருபொருள். நம்மிடத்திலிருக்கும் பொன் பொருள் நம்மை விட்டு விலகக்கூடாது என்றும் நமது மனைவி மக்கள் நம்மைவிட்டுப் பிரியக்கூடாது என்னும் மயக்கம். இதுவும் பகவானுடைய கிருபையில் பறந்து போகும். தேகசம்பந்த பசியும் தாகமும் தீர்ந்து போகின்றன. இதை மன்னன் பரிட்சித்து அனுபவப்பூர்வமாகக் கூறுவதாவது" நைஷா துஷ்சஹாக்ஷுந்மாம்.

இறைவனிடத்தில் ஆறு ஐஸ்வரியம் இருக்கிறது. அவை 1. தருமம் 2. புகழ் 3. ஞானம் 4. வைராக்கியம் 5. பிரகாசம் 6. நிறைந்த வலிமை. இவ்வாறும் பகவானுடைய கதையிலும் இருக்கின்றன. ஆகையால் கதாமிருதம் தேவாமிருதத்தைப் பார்க்கினும் சிறந்ததென்பது புலனும். தேவாமிருதம் ஜடம். கதாமிருதம் சேதனம். பகவத் வடிவம்.

தப்த ஜீவனம் — எவனொருவன் புண்ணியம் செய்து யாகம் பண்ணி, தானங்கொடுத்து சுவர்க்கத்திற்குப் போகிறானே அவன் அங்கு தேவகன்னிகையோடு திவ்யபோகத்தைத் துய்க்கிறான். அங்குள்ள அமிருதத்தையும் நுகருகிறான். இந்த அமிருதம் விஷய போகிகள் நுகருவதற்குரியது.

பகிர்முகபுருடன் அனுபவிக்கப்பட்டது. கதாமிருதம் அவ்வாறன்று. கதாமிருதம் துன்பத்தில் தோய்ந்த மக்களால் புசிக்கப்பட்டது. தேவாமிருதம் ஆடம்பரமக்களுக்கு உள்ளது. கதாமிருதம் ஏழை எளிய மக்களுக்குரியது.

கபிபிரீடிதம் - கவிகள். அயன், வியாசர், நாரதர் முதலியவர்கள். இவர் பகவத் கதாமிருதத்தை மிகப் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். கதையின் பெருமை அளவிடலரிது.

சுவர்க்கிய அமிருதம் துச்சீகிருதம். ஞானிகள் பொன்னுட்டு அமிருதத்தைத் துச்சம் என்று நினைக்கிறார்கள். இறைவா! நினது கதாமிருதம் - தியானம், பஜனை, ஞானம் இவைகளில் ஈடுபடுபவர்களுக்குங் கூடக் கிடைப்பது அரிது. அங்ஙனம் இருப்ப, காலனென்னும் வாளால் அரியப்பட்ட வானவர்க்கும், மானவர்க்கும் எங்ஙனம் கிடைக்கும். கிடையாதென்பது பொருள்.

பிரஹ்மானந்தம் பரோட்சரூபம். கதானந்தம் அபரோட்சரூபம். பரோட்சம் புலனுகாது. அபரோட்சம் புலனுகும். பிரம்மானந்தம் தியானநிலையில் உண்டாகிறது. கதானந்தம் கேட்கிறபொழுதே கிடைக்கிறது.

கோபாலா! பிரம்மத் தத்துவத்தை எளிதாக்குவதற்கு நீ அவதாரம் செய்திருக்கிறாய். ஞானிகள்கூட தியானத்தை விட்டுவிட்டு உனது கதையைக் கேட்க விரும்புகிறுர்கள். உனது சரிதாமிருதமும் கதாமிருதமும் ஒன்றேயாம். உணவு உண்டபின் இன்பத்தைத் தருகிறது. கதை கேட்கும் போதே இன்பத்தைப் பயக்கிறது. உணவு சடப்பொருள். பகவானுடைய கதைச் சேதனப்பொருள். நடன கோபாலா! உனது கதையைப் பருகுவதற்காகச் சிலர் நான்குவித-அறம், பொருள், இன்பம், வீடு என்பவை அனைத்தையும் தள்ளி விட்டு உனது கதை என்னும் கடலில் மூழ்குகிறார்கள்.

நாங்கள் எதையும் விரும்பமாட்டோம். உன்னுடைய கதையை மட்டும் விரும்புவோம் என்கிறார்கள். வறுமையில் கூட வாழ விரும்புவோம். ஆனுல் கதையை மறவோம். பாலை அருந்துபவன் கூழையேன் அருந்த விரும்புவான்? விரும்பமாட்டானல்லவா?

கல்மஷாபகம்—கர்மஷ ஏவ கல்மஷ: கர்மத்தின் மலம் தான் கல்மஷம். மனிதன் கர்மத்தைச் செய்கிற போது அவசியம் மலம் பொருந்துகிறது. மலம் - பாவம். தீபத்தின்

அடியில் இருள் இருப்பது போல. பாவத்தின் அடியில் புண்ணி யமும் புண்ணியத்தின் அடியில் பாவமும் இருக்கின்றன.

புண்ணியங் கலவாத பாவமும், பாவம் கலவாத புண் ணியமும் இல்லை என்பது உறுதி. "தூமேந ஆவிரியதே வன்னி" கீதை. அருச்சுன! புகையினால் நெருப்பு மறைவது போல் அறியாமையால் அறிவு மறைந்து விடுகிறது. கருமம் தோஷத்தால் மூடப்பட்டிருக்கிறது.

வினையில் இருக்கிற நல்லது கெட்டது அஞ்ஞானி களுக்குத் தெரிகிறதில்லை. செல்வந்தனுக்குத் தனது செல் வத்தின் நிலை தெரிகிறதில்லை. தேடிய பொருள் ஓடியே போகும் என்று உணர்வாரில்லையே. உணர்ந்தால் மீண்டும் மீண்டும் பொருளைத் தேடித் தேடி குவிக்க மனம் வருமா? வராதல்லவா.

பொருளைக் கொண்டு அருளைத் தேடு என்பது ஆன் றோர் பொன்மொழி, அருள் அன்பு கலந்த அறிவு. அருள் இல்லையாயின் பொருள் பொன்றிப்போகும்.

வினையினால் வரும் குற்றத்தைப் பகவானுடைய கதை நீக்குகிறது. வினையின் மலம் என்னும் மையை கதை அழித்து விடுகிறது. பகவானது கதை செவி வழியாக இதயத்தில் நுழைகிறது. கதையின் வாயிலாகப் பகவான் உள்ளே வருகி றார். சம்சாரம் கண் வழியாக உள்ளே வருகிறது. கதை அமிருதம், சம்சாரம் நஞ்சு.

பகவானுடைய ரூபம், குணம், லீலை, சரிதம் இவை களைக் கேட்கும் போது தீயகுணங்கள் விலகுகின்றன. நற் குணங்கள் நம்மை மேவுகின்றன. இல்லத்தில் இனிய தீபத் தை ஏற்றினோமானால் இருள் தானாக ஏகுகின்றது. இறை வன் உள்ளத்தில் உதிக்கும் போது நமது அறியாமை கடிது ஓடுகின்றது.

சுவர்க்கலோக அமிருதம் புண்ணியத்தைப் பறிக்கும். பகவானுடைய கதை புண்ணியத்தை வளர்க்கும். புண்ணியம் உடையவர்கள் பொன்னுலோகம் போவார்கள். சில காலம் அங்கு தங்கி இருப்பார்கள். புண்ணியம் பொன்றியதும் தலைகீழாக விழுவார்கள்.

க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி. கீதை. பரந்தப! சுவர்க்கத்தில் புண்ணியப் பயனை நுகர்ந்ததும் தலைகீழாக விழுகிறான் என்பது பொருள் என்றார் பகவான். விடுதிக்குச் சென்றவன் பணம் செலவானதும் வீடு திரும்புவது போல நல்வினை கழிந்ததும் சொர்க்கத்திலிருந்து புவிக்கு வருகிறான்.

மனிதன் உணவு விடுதியில் அளந்து சாப்பிடுவதில்லை. எண்ணி உண்பதில்லை. பணத்தில் கவனம் செலுத்துவதில்லை. பணம் தீர்ந்ததும் அய்யோ வென்று வீடு திரும்புகிறன். வருந்துகிறன். அது போல் இன்பத்தை நுகரும் போது புண்ணியம் குறையும் என்று எண்ணுமல் கண்டபடி அனுபவிக்கிறர்கள். சொர்க்கத்தில் உள்ள அமிருதம் ஆசையை வளர்க்கிறது. ஆனல் பகவானுடைய கதை ஆசையை முற்றிலும் ஒழிக்கிறது.

ஆகையால் கடமையை மனிதன் ஒப்புக் கொள்ள வேண்டும். கதையைக் கேட்டுக் கொண்டிருந்தால் அவ்வளவு நேரமாவது பொய்ப் பேசாமல் இருக்கலாம். பொய், பரநிந்தை, பிறரை நிந்திப்பது. சூதாடுவது, முதலிய தீயச்செயலிலிருந்து விலகி இருக்கலாம்,

பகவத்கதை மனித சமுதாயத்தையே தூய்மைப்படுத்துகின்றது. பகவான் மூன்று உலகத்திற்கும் தலைவன். ஏ பிரபோ! உனது கதை அமிருத சிந்து. சிந்து — கடல். ஏ கேசவா! உன்னுடைய கதை அனைவரது துயரத்தையும்

நீக்குகிறது. ஆதலின் ஞானிகள் உனது கதையில் மனத்தைச் செலுத்துகிறார்கள்.

சிரவணமங்கலம் — சொர்க்கலோக அமிருதம் பரிச் சின்னம். ஆனுல் பகவானுடைய கதை மக்களை மங்கலம் ஆக்குகின்றது. அதாவது தூய்மை படுத்துகின்றது' இறை வனுடைய அன்பு ஆற்றில் ஊற்றுப் போல் ஊறுகிறது. இந்த மங்கல மயீகதை சோகம், மோகம், பயம் முதலிய செயலி லிருந்து இரட்சிக்கிறது.

வேதத்தில் இரு வித வித்தைகள் இருக்கின்றன— பரவித்தையென்றும், அபரவித்தையென்றும் ஆம். பரவித்தை பரஞானம் என்றும், அபரவித்தை அபரஞானம் என்றும்' கூறப்படுகின்றன. ஆத்மாவை அறிவிக்கும் ஞானம் பர ஞானம் - பரமாத்மஞானம் சம்சாரத்தை விளக்கும் ஞானம் அபரஞானம் - அனுத்மஞானம்.

ஞானம் தனக்கு அந்நியமாகத் தோன்றினுல் அதைப் பெற முயற்சி உண்டாகும். அநுகூலமானுல் அதைப்பெற முயற்சி. பிரதிகூலமானுல் அதிலிருந்து விலக முயற்சி உண்டாகும்.

''பிரதிகூல அநுகூலாப்யாம் விவஸ்த்தா'' இது சமஸ் கிருத பழமொழி. விருப்பு வெறுப்புக்குத் தக்கவாறு முறை கள் செய்யப்படும் என்பது பொருள். ஞானம் நம்மைப் பற்றி உண்டாகுமானுல் எண்ணவோ முயற்சியோ தேவை இல்லை. அபரஞானத்தில் அனுஷ்டானம், முயற்சியெல்லாம் தேவைப் படுகின்றன. அபரஞானத்தில் யக்ஞம் தானம், ஜெபம், தருமம் முதலியவை தேவைப் படுகின்றன. பரஞானத்தில் சிரவணம் மட்டும் போதும்.

சிரவணம் = கேட்பது. பரஞானம் = சிறந்தஞானம், அபரஞானம் குறைந்தது. வேதத்தில் நான்கு புருஷார்த்தம் நவிலப்பட்டிருக்கின்றது. அறம், பொருள், இன்பம், வீடு.

இந்நான்கினும் எந்தப் புருஷார்த்தமும் கேட்ட மாத்திரத்தில் மங்கலத்தை அளிப்பதன்று.

பொருளைப் பற்றிப் பேசியதால் பொருள் கிடைக்கப் போவதில்லை. ஆசைப்பட்டதால் எதுவும் வராது. ஆரா இயற்கை அவா என்றார் வள்ளுவர். அவா=ஆசை ஆரா இயற்கை=தனியாத - ஒருபோதும் நிறைவுறாதது. தருமம் தருமம் என்பதால் புண்ணியம் வருகிறதில்லை. மோட்சம் என்று கூறினதால் மோட்சம் வரப் போகிறதில்லை வாய்ப் பந்தல் மூலமாக நிழல் கிடைக்காது. பொருளை ஈட்டுவதற் கும், ஆசையை நிரப்புவதற்கும், தருமத்தைச் செய்வதற் கும், மோட்சத்தைப் பெறுவதற்கும் கர்மம்செய்ய வேண்டும்.

மோட்சத்திற்கும் சிரவணம், மனனம், நிதித்யாசனம் இவை மூன்றும் தேவைப் படுகின்றன. சிரவணம் ஒன்றி னாலே எந்தப் புருஷார்த்தமும் கிடைப்பதில்லை. அறமோ, பொருளோ. காமமோ, கேவல மோட்சமோ மங்கலத் தைத் தருவதில்லை, பகவானுடைய கதையைக் கேட்ட மாத் திரத்தில் மங்கலம் உண்டாகிறது. கதை சுவயம் மங்கல வடிவம்.

கதையைக் கேட்க வேண்டும் என்ற எண்ணம் உண் டாகும் போதே மங்கலம் உண்டாகிறது. வழக்கறிஞரைக் கண்டதும் வழக்கு ஞாபகம் வருகிறது. வைத்தியரைக் கண்டதும் நோயின் ஞாபகம் வருகிறது. இளம் பெண்ணைக் கண்டதும் எழுச்சியுண்டாகிறது. பகவானது கதையைக் கேட்கும் போது பகவானைப் பற்றிய ஞாபகம் வருகிறது. அவனை நினைக்கின்ற பொழுது அவன் முன்னே வருகிறான். அவன் - பகவான். ''ஒருகால் நினைக்கின் இரு காலும் தோன்றும்'' திருமுருகாற்றுப்படை. ஒருகால் - ஒரு பொழுது நினைக்கின் நினைப்பவர்பால் இருகாலும் தோன் றும். இருகால் இரண்டு காலோடு தோன்றுபவன் முருகன்

என்பது குறிப்பு. யார் முன்? முருகாவென்று ஓதுவார்முன் முருகன் நாமத்தைச் சொல்லுவார் எதிரே என்பது பொருள்.

நினைப்பதில் நேரமாகலாம், ஆனால் இறைவன் வருவதில் நேரமாகாது. மலரை உள்ளங்கையில் வைத்து கசக்குவதில் நேரமானாலும் பகவான் வருவதற்கு நேரமாகாது. உளுந்து உருளுவதற்கு முன் ஓடி வருவான் முருகன்.

சம்சாரம் வெளியில் இருக்கிறது. அதனால் அதைத் தேடவேண்டும். பகவான் உள்ளே இருக்கிறார். அதனால் அவரைத் தேட வேண்டுவதில்லை.

மடியில் பணம் இருக்கிறது. மறந்துவிட்டோம். வெளியில் தேடுகிறோம். ஞாபகம் வந்ததும் மடியில் பணம் இருக்கிறதென்று எண்ணுகிறோமே தவிர தேடுகிறதில்லை. அவ்வாறு பகவான் விஷயத்திலும் அறிக.

ஆத்மத் தத்வம் ஹிருதி சம் ஸ்புரத் என்று சங்கரர் கூறுகிறார். ஆத்மத்தத்வம் = ஆத்மா-பரமாத்மா. ஹிருதி = இதயத்தில் சம் ஸ்பு'ரத் = நன்றாகத்தோன்றுகின்றது என்பது சங்கரரின் கருத்து.

உள்ளே இருக்கிற பொருளை வெளியில் தேடுகிறோம். இஃது அறியாமை. ஒரு கிழவி வீட்டிலிருந்து சேலை தைத்தாள். கையிலிருந்த ஊசி கீழே தவறி விழுந்து விட்டது. இரவு நேரம். தீபம் அணைந்து விட்டது. அம்மாது வீட்டை விட்டு வெளியே வந்து வீதியில் தேட ஆரம்பித்தாள். வழிப்போக்கர் — பாட்டி என்ன தேடுகிறாய் என்றார். பாட்டி — ஊசியைத் தேடுகிறேன் என்றாள். வழிப்போக்கர்—ஊசியை எங்கே போட்டாய்? பாட்டி — வீட்டில் போட்டேன். அங்கே போட்ட நீ இங்கு ஏன் தேடுகிறாய். பதில்--அங்கு வெளிச்சமில்லை, இங்கு தேடுகிறேன் என்றாள். இதைக் கேட்ட வழிப்போக்கர் குலுக்கென்று சிரித்தார். அவள் மதிநலத்தை வியந்து நகைத்தார்.

அதுபோல் இருளகற்றும் இறைவன் உள்ளே இருக்க மதியிலார் வெளியே தேடுவது விந்தையாயிருக்கிறது. இறைவன் நமது நெஞ்சில் இருந்தால் கொஞ்சங் கூடத் தெரியவில்லையே என்று சிலர் நினைக்கலாம். பதில்-குளத்தில் தண்ணீர் இருக்கிறது. மேலே பாசி அல்லது பாசம் படர்ந்திருக்கிறது. அங்ஙனம் இருப்ப எங்ஙனம் தண்ணீர் தெரியும்? தெரியாது போனால் இல்லை என்று பொருளா? பாசத்தை விலக்கினால் தண்ணீர் தெரியத்தானே செய்யும். அதுபோல் அகத்தில் உள்ள அழுக்கை அகற்றினால் ஆத்மா, ஆண்டவன் தானாக வெளிப்படுவார்.

உள்ளம் = குளம். தண்ணீர் பகவான். ஆசை - பாசம். எனவே பகவானுடைய கதையைக் கேட்பது சுவயம் மங்கலம். சிரவணம் மங்கலம். வைணவ முறைப்படி பக்தி ஒன்பது விதம். அவை வருமாறு— 1. சிரவணபக்தி 2. கீர்த்தனபக்தி 3. ஸ்மரணபக்தி 4. பாதசேவனபக்தி 5. அர்ச்சனபக்தி 6. வந்தனபக்தி 7. தாஸ்யபக்தி 8. சக்கியபக்தி 9. ஆத்ம நிவேதனபக்தி. இவைகளில் முதலாவது பக்தி சிரவணபக்தி. ஆதலின் கதா சிரவணம் மங்கலம்.

வேதாந்தம் இதை ஆமோதிக்கிறது. "சுரோதவ்ய" என்று கூறுகிறது. அவசியம் சிரவணம் செய்யவேண்டும் என்பது கருத்து. மகாவாக்கிய சிரவணமில்லாமல் ஞானம் வராது. 'ஞானமிலாது கதி கூடுமோ', தாயுமானார். கதி = மோட்சம். ஜனார்தனா! உனது கதை எங்களை மரணத்திலிருந்து இரட்சிக்கிறது. கதையைக் கேட்கிற போது எங்களுக்கு ஆசையுண்டாகிறது.

மாதவன் — என்ன ஆசை? கோபிகள் — மாதவன் அன்பனுக்கு அன்பன். ஆதரவு அளிப்பவன், மாதர்குலப்பிரியன், மகளிர்க்கு மரியாதை செய்பவன். நம்பின பேர்களைக் கைவிடமாட்டான் கண்ணன் என்ற ஆசை. தன்வயம் ஆக்குபவன் தயாபரன். அடியார்களைக் கைவிடமாட்டான் கமலலோசனன் என்ற ஆசை.

இந்திர உலகில் உள்ள அமிருதம் கனவு போல மான சிகம், விரசம், அசத், அதைப் பெறுவதற்குச் செல்வந்தர் கள் வேள்வி முதலியவைகளைச் செய்கின்றனர், பெரும் பெரும் பொருளைச் செலவிடுகின்றனர். வியாபாரிகள் இலா பத்திற்காக எவ்வாறு பொருளைச் செலவு செய்கிருர்களோ அவ்வாறு போகிகள் யாகத்தில் செலவு செய்கிறார்கள். கதை சிரவணமங்கலம். மோட்சத்திற்குச்சமம்,தமம், உபரதி, பொறுமை, நம்பிக்கை, சமாதானம், இவ்வாறும் மோட்சத் திற்கு வேண்டும். ஆனால் யோகம் பழக வேண்டுமானால் எட்டு அங்கங்கள் வேண்டும். அவை- சமம் - மனஅடக்கம் தமம்-பொறியடக்கம். பொறி=இந்திரியங்கள் உபரதி=வை ராக்கியம். திதிட்சை=இன்ப துன்பங்களைப் பொறுத்துக் கொள்வது. சிரத்தை=நம்பிக்கை — குருவாக்கியத்திலும் சாஸ்த்ர வாக்கியத்திலும் விசுவாசம். சமாதானம் - சித்தத் தை ஜகத்திலிருந்து இழுத்துச் சிவன்பால், திருமால்பால் வைப்பது. இவ்வாறு ஆறு அங்கங்கள் வேதாந்தத்திற்குத் தேவை.

யோகம் பழக வேண்டுமானால் எட்டு அங்கங்கள் தேவை. அவை வருமாறு— 1. இயமம் 2. நியமம் 3. ஆச னம் 4. பிராணயாமம் 5.பிரத்தியாகாரம் 6.தாரணை 7.தியா னம் 8. சமாதி. இயமம் = இயமத்தில் ஐந்து பொருள்கள் இருக்கின்றன.- 1. அகிம்சை 2. சத்யம் 3. அஸ்தேயம் 4. பிரஹ்மச்சரியம் 5. அபரிகிரகம் அகிம்சை - பிறஉயிரை இம்சியாது இருத்தல். சத்யம் - பொய்ப் பேசாதிருத்தல், அஸ்தேயம்- ஸ்தேயம் = திருடுதல். அஸ்தேயம் = திருடாதிருத் தல். அபரிகிரகம் = நாளை வேண்டும் என்று சேமித்து வையாதிருத்தல்

நியமம்ஐந்து. 1.சவுச்சம் 2.சந்தோஷம் 3.தபம் 4.சுவாத் தியாயம் 5.ஈசுவரபிரணிதானம். நியமத்தில் ஐந்து குணங் கள் இருக்கின்றன. அவை - சவுச்சம் = அகம் புறம் தூய்மை

யாக இருத்தல். தூய்மை-சுத்தம். 2. சந்தோசம் வினையின் பயனாகக் கிடைத்ததில் சுகித்திருத்தல் 3. தவம் பசிதாகம், சுகம் துக்கம் இவைகளைப் பொறுத்துக் கொள்ளுதல் 4.சுவாத்தியாயம் - குலநூல்களை ஓதுதல். பிரணவமந்திரத்தைச் ஜெபித்தல். பிரணவம்—ஓங்காரம். 5. ஈசுவரப்பிரணிதானம் — ஈசுவரபக்தி. ஆசனம்—செம்மையாக இருத்தல்.

பிராணாயாமம். சுவாசத்தை வசப்படுத்துவது. பிரத்தியாகாரம் — வெளியே செல்லுகின்ற பொறிகளை உள்ளே இழுப்பது. தாரணை—சித்தத்தைச் சிவன்பால் வைப்பது. சமாதி — (காற்றில்லாத இடத்தில் ஏற்றி வைத்த தீபத்தைப் போல்) பிரஹ்மத்தில் அசையாது இருத்தல். இவைகளை விஷேசமாக அறிய வேண்டின் யோக நூல்களில் காண்க. இவைகளை முறையாகப் பழகி வந்தால் சமாதி கூடும். கருமத்தை நினைக்கும் போது விதிகள் தேவைப்படுகின்றன. அதன் பிறகு மங்களம் உண்டாகிறது. கதை அவ்வாறன்று. கேட்ட மாத்திரத்தில் மங்களம் உண்டாகும்.

சிரவணம் சாதனம், பலம் பக்தியென்பதல்ல. பின்னை? சிரவணம் சுவயம் பக்தி. பகவானுடைய கதையைக்கேட்கிற போது கீழே இருந்து கேட்கிறோம். கீழேயிருக்கும் போது அபிமானம் போகும். மவுனமாய்க் கேட்கும் போது பொய் குறையும். வேலையை விட்டுக் கதை கேட்கும் பொழுது வைராக்கியம் வளரும். சாதுக்கள் தரிசனம் கிடைக்கும்.

''ஸ்த்ரியா விடாநாம் இவ சாது வார்த்தா'' பாகவதம். உரை - நான்கு விடர்கள் ஒன்று சேர்ந்தால் பெண்களைப் பற்றியே பேசுவார்கள். விடர்கள் = காமிகள். நான்கு சாதுக்கள் கூடினால் பகவத்ரூபம், எழில், மாதுரியம் முதலியவற்றைப் பேசுவார்கள். தனக்குச் சமானமானவர்கள் வந்தால் ஒருவருக்கொருவர் பிரஹ்மத்தைப் பற்றி உசாவுவார்கள். உசாவுதல் - ஒருவர் மற்றவரோடு பகவானைப் பற்றி உரையாடுதல். பெரியவர்கள் வந்தால் ஆன்மாவைப்

பற்றி வினவுவார்கள். தனக்குக் குறைந்தவர்கள் வந்தால் ஈசுவரனைப் பற்றிக் கூறுவார்கள். ஒருவரும் வரவில்லை எனின் தானுகப் புலம்புவார்கள். பாடுவார்கள் என்பது பொருள்.

இறைவனுடைய கதை, பகவானுடைய வடிவம், பகவானுடைய சாந்தம், இவையெல்லாம் அழகுடையன. வாசனையை நீக்குந்தன்மையன. வாசனை = கெட்டவாசனை. வேண்டாத எண்ணங்கள் என்பது பொருள். சுவர்க்காமிருதம் மனிதனை வாசனையால் கட்டித் துன்பம் என்னும் படுகுழியில் தள்ளுகின்றது. கதாமிருதம் அவனை அதிலிருந்து கரையேற்றுகிறது.

இலட்சுமி திருமாலுடைய மார்பில் வசிக்கிறாள். பகவத் கதை கேட்பவர்க்கு இகபர சவுக்கியத்தை அளிக்கிறது. ஆததம் = வியாபகம். சுவர்க்கத்தில் இருக்கின்ற அமிருதம் அற்பம். மிகக் குறைவு, இந்திரன் இல்லத்தில் உள்ள ஒரு கலசத்தில் இருக்கிறது. அள்ளினுல் குறையும், நாள்பட இருந்தால் ஊசிப் போகும். ஆதலால் அமரர்கள் அதை அருந்துவதில்லை. பார்த்துக் கொண்டே இருப்பார்கள். தேவர்கள் ஈயாத லோபிகள்.

இரு பணக்காரர்கள் இருந்தனர். ஒருவர் பெயர் குப்பன், மற்றொருவர் பெயர் சுப்பன். இருவரும் ஈயாத இயல்பினர். ஒரு நாள் இருவரும் நெய் வாங்கச் சென்றனர். வாங்கிக் கொண்டு வந்தனர். மீண்டும் ஒரு முறை கூடினர். அப்போது ஆறுமாதம் இருக்கும். ஆறுமாதம் கழிந்து கூடிய போது நெய்யைப் பற்றி விசாரித்தார்கள்.

நண்பனே! நெய் எவ்வளவு சிலவாயிருக்கிறது என்று கேட்டான். மற்றொருவன் — நண்பனே! ஆறுமாசத்தில் அரைவீசம்படி சிலவாயிருக்கிறதென்றான். முழுக்கஞ்சன் - அடே பைத்தியக்காரா? குடிமோசம் போயிற்றே. இவ்வளவு

நெய் சிலவு செய்யலாமா என்றான். அதைக் கேட்ட மற்றொருவன் — சுப்பா! உனது நெய் எவ்வளவு சிலவாயிருக்கிறது? அதற்குச் சுப்பன் - எனது நெய் அப்படியே இருக்கிறதென்றான்.

குப்பன் - நீ சாப்பிட வில்லையா? சாப்பிட்டால் எப்படிக் குறையாமல் இருக்கும்? சுப்பன் — அடே மூடா! சாப்பிடும் விதம் உனக்குத் தெரியவில்லையே. நான் சாப்பிட உட்காருவேன். மனைவியை அழைப்பேன். அவள் ஓடி வருவாள். இலையைப் போடுவாள், அன்னத்தைப் படைப்பாள். நெய்யைக் கொணர்ந்து வருவாள். நெய் பாத்திரத்தைத் திறக்கச் சொல்வேன், திறந்ததும் உற்று நோக்குவேன். பிறகு கொண்டு போவென்று சொல்லுவேன். இப்படிச் சாப்பிடுவதால் நெய் அப்படியே இருக்கிறது என்றான்.

இக்கதிதான் இமையவருக்கும். ஆததம் - வியாப்தம் பகவானது அமிருதம் பார் முழுவதும் பரந்து இருக்கிறது. எங்கும் நிறைந்திருக்கிறதென்பது கருத்து.

''வேதே ராமாயணே சைவ புராணே பாரதேததா
ஆதா வந்தேச மத்யேச ஹரி: சர்வத்ர கீயதே''.

வேதம், இராமாயணம், புராணம், பாரதம் இவைகளில் அடியிலும் நடுவிலும், முடிவிலும், பகவானுடைய குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இலட்டுவின் அடியிலும், நடுவிலும், முடிவிலும், மதுரம் நிறைந்து இருக்கிறது. அது போல் ஐகத்தின் முழுவதிலும் ஹரி - நாராயணன் நிறைந்திருக்கிறார் என்பது குறிப்பு.

''புவி கிரணந்திதே பூரிதாஜநா'':—பகவானது கதையை உலகில் யார் கூறுகிறாரோ, அவர் பெரிய கொடையாளி.

அன்னதானம், கோதானம், பூதானம், வஸ்த்ரதானம், கல்விதானம். இவ்வாறு தானங்கள் பல. இவைகளைச்

செய்பவர்கள் புண்ணிய சாலிகள். போற்றற் குரியவர்கள். நிஷ்காமமாக தானம் பண்ணுல் மனத்தூய்மை உண்டாகும். சகாமமாகச் செய்தால் சுவர்க்கத்தை அடையலாம். ஆனுல் முக்தியை அடைய இயலாது.

பகவானுடைய கதையை தானம் செய்பவர் முக்தியை நிச்சயமாக அடைவார். எவர் மக்கள் உள்ளத்தில் குடியிருக்கச் செய்கிறாரோ, அவர் பெருங் கொடையாளி. மகான்கள் — கதை வாயிலாக இறைவனையே தந்து விடுகிருர்கள். அவர்கள் பெரிய தாத்தாக்கள். தாத்தா—தானம் செய்பவர். கதை பெருந் தன்மையானது. பகவானைத் தருவது. பகவான் எங்கிருக்கிறாரோ, அங்கு அனைத்தும் இருக்கின்றன.

பிருந்தாவனத்தில் உடியாபாபா என்னும் ஒரு மகான் இருந்தார். அவர்க்குப் பல பக்தர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் ஆஸ்ரமத்தில் நீர்ப் பாய்ச்சும் பணியில் இருந்தார். வெளிவேலையும் பார்ப்பார். கூலிக்கும் பேவார். ஆனுல் தானம் வாங்கமாட்டார். பக்தர்கள் யாராவது காசு பணம் கொடுத்தால் அதை ஏழை எளிய மக்களுக்குக் கொடுத்து விடுவார். தனக்கென எதையும் வைத்துக் கொள்ளமாட்டார். அப்படிப் பக்தர்கள் கிடைப்பது அரிது.

பகவான் முன்னமே சொல்லி இருக்கிருர். என்ன சொல்லியிருக்கிருர்? நான் அன்பனுக்கு அடிமை. அதனுல் அன்பன் என்னை விற்க வேண்டுமானுலும் விற்கலாம் என்று சொல்லியிருக்கிறார். "பேச்சே தோபிக் ஜாயம்" இந்தி. என்னை விற்றால் விற்றுக் கொள்ளலாம் என்பது பொருள்.

வேதாந்தத்தில் பகவான் சச்சிதானந்த வடிவினன். வல்லபாச்சாயார் கூறுவதாவது - கதையும் சச்சிதானந்த வடிவந்தான் என்கிருர். பகவானுக்கும் பகவானது கதைக்கும் சிறிது வேற்றுமையுண்டு. பகவான் அவதாரம் எடுத்துப்

புவிக்கு வருகிருர். காரியத்தை முடித்து விட்டு மீண்டும் போகிருர். கதை இங்கேயே இருந்து விடுகிறது. இது தான் இரண்டிற்கும் உள்ள வேற்றுமை. பகவான் சுதந்திரன். கதை பக்தனுக்கு அடிமை.

பூரிதாஜனு:— கதை மட்டும் பகவானது உருவமன்று. பின்னே? இறைவனது இனிய கதையை உரைப்பவரும் இறைவன் வடிவமே.

கோபிகள் பல. அவர்கள் மனதில் பல எண்ணங்கள் உள்ளன. இதயத்தில் பல எழுச்சிகள் எழுகின்றன. ஒரு கோபி — சாரங்கபாணே! நீ இனிமையாகப் பேசுகின்றாய், முன்னே வருவதற்கு அஞ்சுகின்றாய். இஃது என்னே? கோபாலன் — பிரேமிகளே! இவ்வாறு ஏன் கூறுகிறீர்கள்? உங்கள் கரத்தில் வளையல் எவ்வாறு கட்டப் பட்டிருக்கிறதோ, அவ்வாறு நான் உங்கள் இதயத்தில் கட்டுண்டிருக்கிறேன் என்றான் முகுந்தன்.

மகளிர்களே! என் வாக்கியத்தில் நம்பிக்கை வையுங் கள் என்ருன். தப்தஜிவனம்—சக்ரபாணே! உன்னேக் காணு மல் எங்கள் ஜீவனம் கொதிக்கிறது. உனது உரைகளேக் கேட்கும் போதும் நினேக்கும் பொழுதும் எங்களுக்கு மரண வேதனேயாயிருக்கிறது. இஃது எங்கள் அனுபவம். அனுப வம் இருவகைத்து— ஒன்று உண்மையான அனுபவம். மற் ெருன்று பொய்யான அனுபவம். சாஸ்த்ர சம்மதஅனுபவம் உண்மையான அனுபவம். சான்ருேர் அனுபவம் உண்மை யான அனுபவம். நமது அனுபவம் நூலோர்க்கும் மேலோ ருக்கும் பொருத்தமாக இருக்கவேண்டும். அனுபவம் வெளி முகமாக இருக்கக்கூடாது. அகமுகமாயிருக்க வேண்டும். சர்க்கரைக் கொல்லி இலேயைச் சாப்பிட்டவனுக்குச் சீனி கசக்கும். கண்ணில் குற்றம் இருக்குமானுல் பொருள் மாறு பட்டுக் காணப்படும். இவையெல்லாம் உண்மை அனுபவம் அல்ல.

குருவிற்கும், நூலுக்கும் பொருத்தம் இல்லாத அனுபவம் உண்மை அனுபவம் அல்ல. கபிபிர்ஈடிதம்–அரசனுடைய அரண்மனையில் கவிஞர்கள், புலவர்கள், வந்திகள், வாத்தியம் வாசிப்பவர்கள் இருப்பார்கள். மன்னனிடம் ஆதாயம் பெறுவதற்கு அவனைப் புகழ்ந்து பாடுவார்கள். அம்மாதிரி மாதவா! இம்முனிவர்கள், இருடிகள், சாதுக்கள் உன்னிடம் ஊதியம் பெறுவதற்கு நின்னைப் புகழ்ந்து பாடுகிறார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன் — தேவியோம்! என் கதையைக்கேட்டவர்கள் இன்பத்தை அடைகிறார்கள். கல்மஷாபகம்—பாவத்தைப்போக்கின்றது. காதுக்கும், கருத்துக்கும் நன்மையை நல்குகின்றது. சிரவணமங்கலம் — கோபி — முராரே! உனது கதையைக் கேட்கிற போது மகிழ்ச்சியாயிருக்கிறது. விளைவுகள் ஒன்றையும் காணோம். பலன் இல்லை என்பது கருத்து. மீண்டும் ஆததம்— அறிஞர்கள் புத்தகங்களை எழுதியும், உபந்நியாசம் செய்தும், அந்தணர்கள் உன்னிடம் பணத்தை வாங்கிக் கொண்டு கதையை விரிவாக்கினார்கள்.

கிருஷ்ணன்—தேவியோம்! என் கதையைக் கேட்டவர்கள் இன்பத்தை அடைகிறார்கள். கல்மஷாபகம்—பாவத்தை நீக்கும் தன்மையது. விசாரிக்கும் போது உனது கதை சுருக்கமே தவிர பெருக்கமில்லை என்று கோபிகள் உரைத்தனர். தாபம் - சந்தாபம், கவலை என்பது பொருள். வேதாந்த முறைப்படிப் பார்த்தால் சந்தாபத்தைப் போக்குவது ஞானந்தான்.

ஞானம் உதிப்பது மனதில். சூரியனும், சோமனும் தோன்றுவது விசும்பில். அறிவும், அன்பும் தோன்றுவது இதயாகாசத்தில். சோமன் = சந்திரன். ஆகாசந் தெளிவாயிருந்தால் சூரியனும் சந்திரனும் தெளிவாக விளங்கும். அம்மாதிரி மனம் தெளிவாக இருந்தால் அன்பும் அறிவும் தெளிவாக விளங்கும். கதை வாயிலாக அன்பையும் அறிவையும் வளர்க்கவேண்டும். கோபிகள் — கோபாலா! உன் நிமித்த

மாக நாங்கள் வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பி துடிக்கிறோம். கேசவா! உன்னுடைய கதை எங்களை மயக்குகின்றது. இறைவனுடைய மாயை, இறைவனுடைய சிரிப்பு, அவனுடைய நடை அகில உலகத்தையும் தன்வயப் படுத்துகின்றன.

கண்ணன்—இவ்வளவு சிறப்புடையதென்றால் நீங்கள் கதையைக் கேட்டுக் கொண்டே இருங்கள். கோபிகள்—மாயவா! நீ செய்த கூத்துக்குக் கதை கேட்கவும் மனம் செல்லவில்லை. மதுசூதனன்—நான் என்ன செய்தேன்? கோபிகள்—நீ ஒன்றும் செய்யவில்லை. உன் சிரிப்பு எங்களை நிலைகுலையச் செய்கிறது.

நினது காதல் நிறைந்த பார்வையால் நாங்கள் சாதலுக்குத் தயராக இருக்கிறோம். சாதல் - சாவு. நீ சிரிக்கிறாய். எங்கள் மனம் சாகிறது.

ஒன்பதாவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் 10

பிரஹஸிதம் பிரியப்ரேம வீட்சணம்
விஹரணம் ச தே தியானமங்கலம் 1
ரஹஸி சம்விதோ யாஹிருதி ஸ்பிரஸ:
குகக நோ மந: க்ஷோபயந்தி ஹி 11 சு. 10

பொருள்.

இந்தச் சுலோகத்தில் பிரிய என்பது கவனிக்கத் தக்கது. இதயத்தில் இருக்கும் எங்கள் அன்பு, பண்பு, திருப்தி, இன்பம் முதலியன எல்லாம் உனக்கே அடைக்கலம் என்றார்கள். ஹிருதி ஸ்பிருஸ: பிரஹஸிதம்—உன்னுடைய சிரிப்பு எங்கள் இதயத்தைத் தீண்டுகிறது. புன்னகையோடு எங்களைப் பார்க்கும் போது உனது பார்வை எங்கள் மனதைக் கொள்ளை கொள்கின்றது.

கிருஷ்ணமூர்த்தே! உனது விகார்– டுமுக்கு டுமுக்கு என்னும் நாட்டியங்களைக் கண்டு எங்கள் மனம் - நெஞ்சம் கொஞ்சமும் தஞ்சமில்லாமல் நின்னையே நாடுகின்றது. விகார் = விளையாட்டு. நடநாகர! சற்று தயவு செய். தியான மங்கலம்-உன்னுடைய குணம் ரூபம். வடிவம் எழில், வசனம் குமிழ்சிச்ரிப்பு, இவைகளில் ஒவ்வொன்றும் தியானமங்கலம். தியானம் செய்தால் செய்தவர்க்கு நன்கலத்தை நல்கத்தக் கது. நன்கலம் = நன்மை,

''நக்கனைத் தொழுதால் நம்பாவம் போகுமே தேவாரம்''. நக்கன் = சிவன். தே ரகசி சம்வித:- ஸ்ரீமத் பாகவதத்தில் முதலாவது — ''தாம்நா சதா நிரஸ்தகுஹகம்'' குஹகம் என்று சொல்லி பரமாத்மாவை வாழ்த்தியிருக்கிறது. இவ்வாக்கியம் உற்று நோக்கத்தக்கது. குஹகம் கபடம். மாயை, வஞ்சனை, சூதுவாது என்பன.

பகவான் ஒளிமயன். அவனிடத்தில் மாயை, கபடம், வஞ்சனை யிவைகள் இல்லை. இவ்வாறிருந்தும் கோபிகள்

அவனிடத்தில் அனைத்தையும் கற்பிக்கிறார்கள். வெறுப்பு மூலமாக அல்ல. பின்னே? அன்பின் மிகுதியால். ''இந்த்ரோ மாயாபி: புரு ரூபஈயதே'' உபநிஷத். இந்த்ர:=பரமாத்மா. மாயாபி: = மாயையால் - மாயையோடு (கலந்து) புருரூப ஈயதே - வெகு வடிவத்தை அடைகிறார் என்பது பொருள்.

பகவான் அநேக வடிவத்தை எடுக்கிறார். ''அநேக ரூப ரூபாய விஷ்ணவே'' விஷ்ணு சஹஸ்ர நாமம். விஷ்ணு வியாபக முடையவர். எங்கும் நிறைந்தவர். மங்கல வடிவினர். இறைவன் நிஜமாயையால் அநேக வடிவத்தை எடுக்கிறார். 1 என்பது ஒரு பூஜ்யத்தைப் பெற்றுப் பத்தாவது போல மாயையோடு கூடி நூறாயிரம் வடிவம்எடுக்கிறான். பகவான் என்பது கூட்டிக்கொள்ளவும். மாயையால் பகவானும் பல வடிவத்தைத் தரிக்கிறார் என்பது குறிப்பு.

ஒருவன் ஒரு மகானைப் பார்த்து நீர் யார் என்றான். மகாத்மா— யாரைப் போலத் தெரிகிறது என்று வினவினார். கேட்டவன் — எங்கள் தாத்தா மாதிரி தெரிகிறதே என்றான். அவர் – ஆம் என்றார். கேட்டவன்— வம்புக்காரன் போல் தெரிகிறதே என்றான். அவர் - அதற்கும் ஆம் என்றார். ஒரு மகாத்மா இத்தனை வடிவம் எடுத்தா ரென்றால் பரமாத்மா அநந்த வடிவம் ஏன் எடுக்க முடியாது? முடியும் என்பது முடிபு.

வழியில் ஒரு முனிவர் சென்றார். அவரைப் பார்த்து மற்றொரு துஷ்டன் — ஏதுஷ்டனே நில், எவ்வளவு உயரம் இருக்கிறாய், வம்பனே நில், வஞ்சமுடையவனே நில் என்று வாயில் வந்தவண்ணம் ஏசினான். இத்தனையும் கேட்ட அம் முனிவர்— ஆடினார், பாடினார், ஆனந்தக் கூத்தாடினார். அவ் வழியாக இன்னொருவன் வந்தான். வந்தவன்—ஐயா, இவன் உம்மை வைரானே நீர் அதைக் கேட்டு ஆனந்தம் அடைகிறீரே என்ன காரணம் என்றான். முனிவர் — அன்பனே! நூல்களில் என்னைப் பற்றி மகாத்மாவென்றும், பரமாத்மா

வென்றும், தயாபரன் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவன் என்னை என்ன என்னவோ சொல்லிப்பாடுகிறானே என்று வியப்படைகிறேன் என்றார்.

ஒரு மகாத்மா இத்தனை வடிவங் கொண்டால் பரமாத்மா பல வடிவம் ஏன் எடுக்கக்கூடாது? கூடும் என்பது குறிப்பு.

கோபிகள் ஈண்டு கோவிந்தனை குஹக என்கின்றனர். குஹக = வஞ்சகன் என்றுங் கூறுகிறார்கள். பிரியன் என்றுங் கூறுகிறார்கள். பிரியம், பிரிதி, சந்தோசம், ஆனந்தம், ஆனந்தத்தை அளிப்பவன் என்பன ஒரு பொருள் பல சொல். அவன் யார்? அவன் பகவான். பகவானைப் பார்க்கும் போது கண் களிப்படைகிறது. அவன் நாமத்தைக் கேட்கும் போது செவிக்கு இன்பம் உண்டாகிறது. அவன் மலரடியை முகரும் போது நாசி இன்புறுகிறது.

அவன் மேனியைத் தீண்டும் பொழுது கரங்கள் திருப்தி அடைகின்றன. அவன் பெயரைச் சொல்லுகிற போது வாக்கு மகிழ்ச்சி அடைகிறது. அவன் கானத்தைச் சுவைக்கிற போது நாக்கு இன்பம் அடைகிறது. எல்லா இடத்திலும் அவன் என்பது பகவான் என்று தெரியவும்.

பிரியன் — பிரிணுதீதி பிரிய : என்பது இலக்கணம். பிரீஞ்— தர்ப்பணே என்பது தாது. பவுர்ணமி யன்றைக்குச் சந்திரனைப் பார்த்துச் சமுத்திரம் மகிழ்ச்சி அடைகிறது. அம்மாதிரி யாரைக் கண்டதும் இதயம் மகிழ்ச்சியடைகிறதோ அவன் பிரியன்.

அன்பு தன் பிரியனிடத்தில் தான் உண்டாகும். கற்புடைய நங்கை தன் கணவனிடத்தில் மட்டும் அன்பு வைப்பாள். மற்றொருவனிடத்தில் அன்பு வைப்பாளானால் அவள் கற்புடைய காரிகையாகாள். காரிகை = பெண். அது போல் கோபிகள் பகவானிடத்தில் மட்டும் அன்பு

வைக்கிருர்கள். உண்மையில் எல்லோருக்கும் இறைவன் தான் கணவன்—நாயகன்.

பிரஹஸிதம் — ஹாஸ்யம் = சிரிப்பு. சிரிப்புக்குப் பல பேதமுண்டு. ஸ்மிதம், ஹசிதம், விகசிதம், பிரகசிதம், உப கசிதம், அதிகசிதம், அட்டகாசம் என்பன. கிருஷ்ணனுடைய பரிஹஸிதம் மக்கள் மனதைக் கொள்ளை கொள்ளும் தன் மையது. பகவானுடைய நடை, உடை, பாவனை, சிரிப்பு, பேச்சு இவையெல்லாம் மூன்று புவனங்களையும் தன்வய மாக்கும் வலியன.

அன்பு கருப்பொருள். உள்ளத்திலிருந்து ஒளிர்வீசும் இரத்தினம். வீதியில் விற்கும் பொருள் அல்ல. மனதி லிருந்து மதிக்க முடியாத மாணிக்கம். காதலன் முன்னே யிருக்க வேண்டும் என்பது தேவையில்லை. அவன் எங்கே யிருந்தாலும் மனம் அங்கேயிருக்கும். சீதையின் மனம் இராமனிடத்தில் இருந்தது. பிராட்டியார் ஒரு ஆண்டு அயலாரூரில் இருந்தாள். இலங்கையில் உள்ள அசோக வனத்தில் வாசஞ் செய்தாள்.

இருப்பினும் அவள் மனம் தமது நாயகன் இடத்தில் தான் இருந்தது. அப்போது இராமன் அவள் முன்னே யில்லை. இப்போது இவர்கள் முன்னே முகுந்தன் இல்லை. இவர்கள் - கோபிகள். அவர்கள் பகவானை முன்னே வைத்து நீ என்று கூறுகிறார்கள். ஆனுல் இறைவன் படர்க்கையில் இருக்கிருர். காரணம் என்னே? அவர்களுக்கு அவனிடத்தில் பூரண நம்பிக்கை. என்ன நம்பிக்கை?

பகவான் நம்மை விட்டு அன்னியமில்லை என்ற நம்பிக் கை. உண்மையும் அதுதான். குடத்தை விட்டு மண் வேறன்று. ஜீவன் உண்மையில் ஈசுவரனே. இதுவேதாந்த மதம். பகவான் மனிதனுக்குப் பொன்னேயும் பொருளேயும் அள்ளிக் கொடுத்துத் தன்வயமாக ஈர்க்கப்பார்த்தான்.

அதற்கு அவன் தந்த தலைவனைத் திரும்பிக்கூடப் பார்க்க வில்லை. இறைவன் எண்ணினான். ஓ. இவ்வழியாக இவனை ஈர்க்க இயலாது வேறு வழியை நாடுவோம் என்று நினைத்தான். கொடுத்த பொன்னையும் பொருளையும் பறித்துக் கொண்டார். வெங்கனாக்கினார். பொன் பொருள் எல்லாம் இழந்தான். தெருவில் திரிந்தான். திருமாலை நினைந்து வருந்தினான். பணங்கைவிட்டுப் போனதும் பரனைநினைத்தான் அழுதான் தொழுதான். பக்தனைத் தன்வயப்படுத்த இவ்வாறு இருமார்க்கத்தைக் கையாளுகிறார்.

குழந்தைகள் விளையாட்டுப் பண்டங்களோடு விளையாடும் போது அன்னையை நினைக்கிறதில்லை. அழைத்தாலும் திரும்பிப் பார்க்கிறதில்லை. அன்னை மகன் விளையாட்டுப் பண்டத்தை எடுக்கத் தொடங்கினாள். அக்குழந்தை அன்னையைப் பார்த்து அழ ஆரம்பித்தது. அன்பன் நிலையும் இது தான்.

சூதாடிக்குச் சோற்றில் பிரியம் இருக்காது. விலை மகள் மீது மோகம் உள்ளவனுக்கு தனது மனையாள் பேரில் பிரியம் இராது. பாவிக்குப் பகவானிடத்தில் பிரியம் இராது. சம்சாரிகளும் குழந்தை மாதிரி ஆகிவிட்டார்கள். குழந்தைகள் விளையாட்டுப் பண்டங்களோடு இரமிக்கின்றன. சம்சாரிகள் பெண்டு பிள்ளைகளோடு இரமிக்கின்றனர். இவையெல்லாம் மாயையின் விளையாட்டாகும்.

விளையாட்டுச் சாமான் போல்தான் சம்சாரப் பொருள் களும். காற்றிலே பஞ்சு போல் காணாமல் போகும். மதியிலா மக்கள் இவைகளை மாயையால் செய்த மட்கலம் என்று நினையாமல் அவைகளில் மடிந்து மாள்கிறார்கள். இவன் இவைகளை விட்டு ஒரு கணமேனும் பிரிந்து வாழ விரும்புகிறதில்லை. இவன் நிலையை நினைக்கும்போது பரிதாப மாக இருக்கிறது.

அந்தோ! அந்தோ கெடுவீர் இந்த மானிடமே பட்டினத்தார். இந்நிலைக்கு மனிதன் போய்க் கொண்டிருந் தால் இம்மண்ணுலகம் என்னவாகும்? பகவானுடைய லீலை நமது சிந்தனைக்கு வருமானுல் நன்மையுண்டாகும். அருவக் கடவுள் யாருக்கும் கிடைக்கிறதில்லை. யாரையும் சந்திக் கிறதும் இல்லை. அதைச் சந்திக்க வேண்டுமானுல் அதிகாரி யாக இருக்கவேண்டும். அதிகாரி சாதனங்களை ஒருங்கே அடையப் பெற்றவன்.

தேகாபிமானிகளுக்கு மிகக்கிலேசம். இதற்கு மாருகக் கண்ணன் தானுகவே பக்தனது பாவன இதயத்தில் நுழை கிருன். கோபிகள் கோவிந்தனைப் பார்த்து ஏ, பிரிய என்று அழைத்தனர். எவருடைய மனம் இறைவனிடத்திலிருக் கிறதோ அவரை அவர் தன் வயமாகச் செய்கிருர். உலகத்தில் உனக்குப் பிரியன் யார்? தந்தையா? தாயா? மனைவியா? மயிந்தனு? மகளா? மருமகளா, மருமகனு? யார் உனக்குப் பிரியன் சொல்? நீ எதை விரும்புகின்றாய்? செல்வமா? மக்களா? உடலா, உரியசுகமா? யோகமா? போகமா? ஜென்மமா? மரணமா? அல்லது பக்தியா? மோட் சமா? இவைகளில் எதை விரும்புகிறாய்? உள்ளதை ஒளியா மல் உரை.

உனக்கு விருப்பம் எதில்? எதை நீ விரும்புகின்ருயோ அதற்கு அடிமையாகின்றாய். பாரில் உள்ள மக்களுக்கு அடிமையாகிறாயா பரமனுக்கு அடிமையாகிறாயா? இவை களில் பரமனைத் தவிர எதுவும் நிலைத்திருக்கப் போகிற தில்லை. பக்தர்களில் சிலர் இருதலைக்கொள்ளி மாதிரி இருக் கிருர்கள். இங்கும் அங்குமாகத் திரிகிறார்கள்.

ஆற்றில் ஒருகாலும் சேற்றில் ஒருகாலுமாகத் திரி கிறார்கள். உலகத்தையும் விடமாட்டார்கள். உடையவனையும் விடமாட்டார்கள். உடையவன் = இறைவன். இத்தகைய மாந்தர்கள் இங்கும் அல்ல. அங்குமல்ல.

அதிக போகத்தை அநுபவிக்கிறபோது சுகம் உண்டாகிறது. அச்சுகம் உடம்பைக் கெடுக்கிறது. தூங்கு கிறபோது இன்பம் உண்டாகிறது. அது ஆயுளைக் குறைக் கிறது. பெண்களோடு பழகிறபோது இன்பம் உண்டாகிறது. அது அறிவையும் ஆற்றலையும் கெடுக்கிறது. இறைவன் கதையைக் கேட்கிறபோது இன்பம் உண்டாகிறது. அது பிரம்மானந்தத்தைத் தருகிறது. அதுவே சிறந்த இன்பம். பகவானது கதை இகபர சௌக்கியத்தை எளிதில் ஈகிறது.

இவைகளை மனிதன் எண்ணிப் பார்க்கிறதில்லை. "ஆயுள் க்ஷீணே நஜாநாதி" சங்கரர். ஆயுள் குறைந்து கொண்டே போகிறது. இவன் அறிகிறதில்லை. இவை இன்ன நிலையில் உள்ளதென்று தெரிந்தும் நல்லகாரியத்தில் தான் தேடிய பொருளைச் சிலவிடுவதில்லை. காரணம்? அநித்தியப் பொருள்களில் ஆழமான பற்று.

எந்தப் பொருளையும் அழுத்தமாகப் பற்றினால் அது துயரத்துக்குக் காரணமாகின்றது. "பரியினும் ஆகாவாம் பாலல்ல" திருக்குறள். பொருள்-நமது ஊழில் இல்லாததைப் பரியினும்-நம்மை விட்டு நீங்கப்படாது என்று வரிந்துக் கட்டி னாலும். ஆகாவாம் — அப்பொருள் நிற்கமாட்டாது. எனவே யாருக்கும் அதிகப்பற்றுக் கூடாது.

ஒரு ஊரில் ஒரு கோடீசுவரன் இருந்தான். அவன் ஈயாத உலோபியாகவும் இருந்தான். எல்லோரும் அவனைக் கஞ்சன் கஞ்சன் என்று கழறினார்கள். இதைப் பொறுக்க மாட்டாமல் அவர் மனைவி மணவாளனிடம் கூறியதாவது— பிரிய மணவாளரே! உம்மை ஊரார் ஈயாதவன் ஈயாதவன் என்று எள்ளி நகைக்கிறார்களே யார்க்காவது சிறிது ஈந்து இந்தப் பழிச்சொல்லைத் துடைக்க வேண்டாமா என்றாள்.

அதற்கு அவன் செவி சாய்க்கவில்லை. ஒருநாள் அவ்வூருக்கு ஒருமகான் வந்திருந்தார். கரத்தில் தடிவைத் திருந்தார். வந்து முச்சந்தியில் உட்கார்ந்தார். துணியை

விரித்து மவுனமாயிருந்தார். நாலா பக்கங்களிலிருந்தும் மக்கள் வந்து பணங்களை எறிந்தனர். மகாத்மா—தடியால் அப்பணத்தை வெளியே வீசினார்.

இதைக் கண்ட உலோபியின் மனைவி தம் கணவனை அழைத்து வந்து பாருங்கள் சிறிதும் சிலவு பண்ணுமல் புகழைப் பெறலாம். நீங்களும் பணத்தை வீசுங்கள் என்ருள். அவன் அங்கு நடக்கின்ற காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். இதை உணர்ந்த துணைவியார் நாயகனே! இந்த வேளையை நழுவ விடாமல் தானம் செய்யுங்கள் என்றாள். ஜனங்கள் பணத்தை மகான் முன்னர் வீசுகிருர்கள். மகாத்மா — தடியால் வெளியே வீசுகிருர். ஈயாதவனுக்கு உத்சாகம் வந்தது. நமது பணத்தையும் இவ்வாறு வெளியே வீசுவார் என்றெண்ணி தானும் கட்டுக் கட்டாகப் பணத்தை எறிந்தான்.

மகாத்மா — அவன் பணத்தை மட்டும் தடியால் தன் பக்கமாக இழுத்துக் கொண்டார். லோபி — ஆகா! என்ன மோசம் போனேம் என்று ஏங்கி நின்றான். மக்களும் ஈயாத உலோபி இவ்வளவு பணத்தைத் தானம் செய்தானே என்று மகிழ்ந்தனர். உலோபி— மகாத்மன் உங்களுக்கு இவ்வளவு பணம் எதற்காக என்று வினவினுன். மீண்டும் முனிவரே! சிறிது தொகையை எடுத்துக்கொண்டு மீதித் தொகையைத் தந்து விடுங்கள் என்றான். மகாத்மா — பாவி! தானங் கொடுத்தப்பணத்தைத் திருப்பி யாராவது கொடுப்பார்களா? என்றார். இதைக் கேட்டதும் மனம் உடைந்து மதி இலி வீடு திரும்பினுன்.

இம்மாதிரி உலகத்தை ஏமாற்றிப் புகழைப் பெறுபவர்கள் ஏராளம் ஏராளம். இத்தகைய மனிதனைப் பார்த்துப் பட்டினத்தார் கூறுவதாவது — ஈயா மனிதரை ஏன் படைத்தாய் என்ருர் இறைவனைப் பார்த்து.

எவனுக்கு நந்தலாலிடத்தில் பிரியம் இருக்கிறதோ அவனுக்கு உலகம் புல்லெனத் தோன்றும். அவனுக்கு வையகம் பொய்யாகத் தெரியும். பிரஹஸிதம் — பகவான் எப்போது சிரிக்கிறார்? அன்பன் பொன் பொருளை அடைகிற போது சிரிக்கவும், விடுகிற போது அழவும் செய்கிருனே அப்போது அவர் சிரிக்கிருர். நீ அழுகிறபோது அவர் கேட்பார் - நீ ஏன் அழுகிருயென்று.

அப்போது நீ என்ன சொல்வாய்? எதை நினைந்து அழுகிருய் என்றால் என்ன சொல்வாய்? சொல். பகவானுடைய சிரிப்பு உலகமனைத்தையும் உய்விக்கும். அன்பனது துன்பக்கடலை வற்றச் செய்யும். பிரேம வீட்சணம்-பிரேமம் = அன்பு, காதல், நட்பு, பக்தி என்பன ஒருபொருள் பல சொல்.

இறைவனுடைய இனிய பார்வையில் அன்பும், அறிவும் கலந்திருக்கின்றன. கதிரவன் காலையில் உலகத்தைப் பார்க்கிருன். இருள் நீங்கி ஒளி மல்கின்றது. பிரகாசிக்கின்றது. இறைவன் கண்ணெடுத்துப் பார்த்தால் அக இருள் நீங்கி அறிவொளி மிளிர்கின்றது.

விஹரணம் - பகவானுடைய விளையாட்டு. விளையாட்டுப் பயனாக உலகம் வந்தது. இறைவன் விளையாட்டாகவே இவ்வுலகத்தைப் படைத்தான். பெரிய பவனத்தில் பிறந்த குழந்தைகளும் முற்றத்தில் இருந்து விளையாடுகின்றன. மணலை அழைந்து வீடுகட்டி விளையாடுகின்றன. தந்தை அல்லது தாய் அழைக்கின்றபோது ஒரு நிமிஷத்தில் கட்டிய வீட்டை அழித்து விட்டு உடனே ஈன்ருள் அண்மைக்கு ஓடி வருகின்றன. அம்மாதிரி நிற்குண பிரம்மம் சகுண வடிவமாக வெளியே வந்து மூவுலகையும் இமைப்பொழுதில் ஆக்கிக் காத்து அழித்து விட்டு மாயை என்னும் வீட்டுக்குள் நுழைந்து விடுகிறது.

ஆகையால் இறைவன் லீலையைத் தியானம் செய் மனதில் நினை. நாள்தோறும் தனியே இருந்து ஐந்து

நிமிடமாவது எண்ணிப்பார். கண்மூடி மௌனியாயிரு. அப்பொழுது உனக்கு என்ன தெரிகிறதென்று பார். வீடு, வியாபாரம், பேரன், பேத்தி, உறவினர் தெரிந்தால் கண்ணைத் திறந்து விடு. மூடிஇருப்பதால் பயன் இல்லை.

நிரம்பப் பேர்கள் கண்ணை மூடிக் கொண்டிருப்பது தியானம் என்கிறார்கள். அது தியானமில்லை. பார்க்கும் இடம் எங்கும் பரமனாகத் தோன்றினால் அது தியானம் எனப்படும். கண்ணை மூடுவதாலும் கண்ணைத் திறப்பதாலும் ஒரு பயனுமில.

ஒரு இளம்பெண் பெற்றோர்க்குத் தெரியாமல் காதலனை நாடிச் சென்றாள். வழியில் இஸ்லாமி ஒருவர் துணியை விரித்துத் தொழ ஆரம்பித்தார். வந்தமாது வழியில் கிடந்த துணியை மிதித்துச் சென்றாள். காதலனைக் கண்டாள். கனிந்து உரையாடி அவ்வழியே மீண்டும் திரும்பினாள். திரும்பிய மாதுவை இஸ்லாமி நோக்கித் தீயமாதுவே! என் தூயபோர்வையை ஏன் மிதித்துச் சென்றாய் என்று முனிந்து இடையில் இருந்த வாளை உருவி அவளை வெட்டத் துணிந்தான்.

அவள் — ஐயா! நான் ஒரு சாதாரண மனிதனைத் தேடிப் போனேன். அப்போது உங்கள் துணி தெரியவில்லை. நீங்கள் அந்த நேரத்தில் இறைவனைத் தானே தேடிச் சென்றீர்கள். என் கால்பட்டது எப்படித் தெரிந்தது என்றாள். தொழுதவர் வெட்கமுற்றுத் தலை குனிந்து அவள் தாளடியை வணங்கிச் சென்றார். உண்மையான தியானம் இது தான். மனிதனுடைய மனம் எப்போதும் உலகப் பக்கமாகவே சரியும். அதைத் தன்வயமாக ஈர்ப்பதற்காக இறைவன் விளையாடுகிறார். பார்வையும் சிரிப்பும் இங்கிதமாகும். விஹார் = விளையாடுதல். கருமரூபம் தியானமங்கலம் = தியானம் கருமவடிவம். தியேயம், லட்சியம், குறிக்கோள், உத்யேசியம் என்பன ஒரு பொருள் பல சொல்.

மனிதனுக்கு லட்சியம் இன்பம். மனிதன் பொருளை நாடுகிறான். எதற்காக? இன்பத்திற்காக. பெண்டிரைத் தேடு கிறான். எதற்காக? இன்பத்திற்காக. பிள்ளைகளை விரும்பு கிறான். எ த ற் க ா க? இன்பத்திற்காக. நீ விரும்புகின்ற இன்பம் நீ தேடுகின்ற பொருள்களில் இல்லை.

தியானம் — நினைப்பது. நினைப்பு அன்பனிடத்திலும் வரும். வம்பனிடத்திலும் வரும். அன்பனை நினைத்தால் சித்தத்தில் உவகை உண்டாகும். வம்பனை நினைத்தால் கொதிப்பு உண்டாகும். தூய்மையான அன்பு சித்தமிசை குடிகொண்டிருக்கும் இறைவனிடத்தில் உண்டாகவேண்டும்.

சர்வாத்மா ஜனார்தனனிடம் தியானம் உண்டாகுமானால் அவருடன் நமக்குச் சம்பந்தமுண்டாகும். அச்சம்பந்தம் ஒரு போதும் அறுந்து போகாது. தங்கக்கட்டியில் மாசு இருந்தால் உருக்கும் போது கரைந்து விடும். இ த ய த் தி ல் பாவம் இருந்தால் தியானத்தில் கரைந்து விடும். 'தியானமங்கலம்' விளையாடினாலும், விநோதமாய் சண்டையிட்டாலும் சரி அவை இறைவனிடம் இசைந்திருக்க வேண்டும். அதனால் அது மங்கலம்.

ஆகலின் இறைவனோடு நேசம் வை. நன்மையிலும் தீமையிலும் நாரணனோடு நட்பு வை. இறைவன் நமக்கு நன்மை செய்தாலும், தீமை செய்தாலும், இருநிலையிலும் அவனது கிருபையை ஆராய்ந்து பார். அதன் இரகசியத்தை ஊகித்து உணர்.

ஒரு கன்னிப்பெண். அவள் பருவம் எய்தினாள். அவள் தந்தை பரம வைணவர். மகளுக்கு வரன் கிடைக்கவில்லை. வரன் - மாப்பிள்ளை. தன் மகளுக்கு வரன் கிடைக்காததால் அவளைச் சாளிகிராமத்தோடு விவாகம் பண்ணி வைத்தார். சாளிகிராமம் - விஷ்ணுவிற்குப் பிரியமான கல்.

அதை அவள் காதலித்து வந்தாள். அவளுடைய அன்பு மிகுதியால் ஹரி முன்னே வந்தார். ஹரி முன்னே வந்ததும் அவள் தந்தை அந்தக் கல்லை எடுத்து விட்டார். இவள் அழத் தொடங்கினாள். இஃது அவளுடைய அறியாமை.

நாராயணனை வரச் செய்வதற்குச் சாளிக்கிராமம் ஒரு சாதனம். பகவான் நேரில் வந்த பின்பு சாளிக்கிராமத்திற்கு மகத்துவம் என்ன இருக்கிறது. ஒன்றுமில்லை. சம்சாரம் முழுவதும் சாளிக்கிராமத்திற்குச் சமானம். உலகில் உள்ள பொருள் முழுவதும் அடையாளச் சின்னம். சிலகாலம் கூடியிருக்கும். சிலகாலம் பிரிந்து நிற்கும். இவைகளைச் சாசுவதமாக எண்ணலாகாது.

இவையாவும் சந்தைக் கூட்டம் போல் கூடும் பிரியும். இதில் உண்மையான பக்தன் மகிழவும் கூடாது. வாடவும் கூடாது. ''என் செயலால் யாதொன்றும் இல்லை இனித் தெய்வமே'' பட்டினத்துச் சுவாமிகள். இந்நிலையில் இருப் பவன் ஆண்டவனுக்குத் திடமான அன்பனாகிறான். சகலமும் இறைவன் எண்ணப்படிதான் நடக்கும். அவன் அன்றி ஓர் அணுவும் நடக்காது. அவன் சங்கற்பம் இல்லாமல் எதுவும் செயல்படாதென்று அன்பனுக்கு நன்றாகத் தெரியும். அன்பு பழையதாகிறதல்ல. எப்போதும் நவீனமாகவே யிருக்கும், பகவானது பார்வை பக்தனிடத்தில் தான் இருக்கிறது. அவன் கண்ணிலிருந்து அன்பின் கருணை மழை பொழிகிறது. மாப்பணியாரத்தில் உள்ளும் புறமும் மதுரம் இருப்பது போல அன்பு மயமான ஆண்டவனிடத்தில் அகமும் புறமும் ஆனந்தமயந்தான்.

கோபிகள்- கண்ணனைக் காணாமல் கலங்கி நிற்கிறார்கள். இந்தவேளையில் முகுந்தன் ஓடிவந்து குலுக்கெனச் சிரித்தான். அவன் சிரிப்பும், அவன் பார்வையும்- கலக்கத்தையும், தாபத் தையும் நீக்கின. அவர்கள் பழையநிலைக்குத் திரும்பினார்கள். கோபிகள் என்பது குறிப்பு.

'தியானமங்கலம்'—வேதாந்தத்தில் தியானம் இருவிதம். மனம் பிரம்மவடிவமாவது ஒன்று. மற்றொன்று மனம் எதையும் நினையாதிருத்தல். "நிர் விஷயம் மன:" வேதாந்தம். யோகிகள் சித்த விருத்தியை நிரோதம் பண்ணுதல் தியானம் என்கிறார்கள். நிரோதம் = தடுப்பது. சாங்கியர்கள்—பற்றற்ற நிலையைத் தியானம் என்பர். அன்பன் ஆண்டவனை நினைக்கிறான். அதுவே தியானம் என்பது அவன் மதம்.

எமுனைக்கரை. கல கல என்று ஒலித்துக் கொண்டு பிரவாகம் செல்லுகின்றது. சுவர்ணப்பொடி போன்ற மணல்கள் மிளிர்கின்றன. இதற்கு நடுவில் கற்பகத் தரு. மையத்தில் மணிமண்டபம். அதில் அமர்ந்து முரளிதரன் புல்லாங்குழலை வாயில் வைத்துக் கொண்டு மூன்றிடத்தில் வளைந்து நிற்கிறான். பீதாம்பரம் அணிந்திருக்கிறான். சிரசில் மயில்பீலிகையால் செய்த மகுடம் இருக்கிறது. கார்முகில் வண்ணன், கமலக்கண்ணன் நிற்கிறான். இந்த இனிய மூர்த்தியைத் தியானம் செய்தால் மங்கலம்.

இம்மாதிரி ரூபம், குணம், இலாவண்யம், நாமம், மகிமை இவைகளை நினை. கிருஷ்ண மூர்த்தியை தியானம் பண்ணு, உனக்கு மங்கலம் உண்டாகும். கபில முனிவர் கூறுவதாவது—உலகும் உலகப்பொருளும் இருந்த வண்ணம் இருக்கட்டும். அவைகளைப் பற்றாதிருந்தால் அதுவே தியானம் என்றார்.

குடும்பத்தினர் அதிகாலையில் எழுந்து தியானம் செய்யலாம். தியானம் எல்லாவற்றையும் விடமிகச்சிறந்தது. தியானத்தில் பகவானுடைய உருவம், அலங்காரம் அவனது முழுவடிவம் தெரியவேண்டும். இவைகளில் எதுவும் தெரியவில்லையென்றால் தியானம் எவ்வாறு பொருந்தும்?

ஒருமுறை நான்கு மகாத்மாக்கள் குழுமி உரையாடினார்கள். ஒருவர் — பரமாத்மா எப்போதும் அரூபம் என்றார். மற்றொருவர் - இதற்கு அனுபவம் என்னவென்று கேட்டார்.

நான் தான் என்றார் முந்தியவர். பிந்தியவர் அருவக்கடவுளை நீர் அனுபவித்தீரா என்றார். அவர் ஆம் என்றார். அருவக் கடவுள் வந்தாரென்றால் எந்த வடிவத்தில் வந்தார்? ஒரு வடிவத்தில் வந்தால் அருவம் எப்படி? அருவம் ஞேய வடிவம். தியேயம் தியான வடிவம்.

நிஜ ஆத்மாவைப் பரமாத்ம ரூபமாகப் பார்ப்பது வேதாந்த சித்தாந்தம். உலக முழுவதிலும் இறைவனைப் பார்ப்பது பக்தி. பகவானுடைய திருவடி நமது இதயத்தில் எப்போதும் இருக்கிறது. பகவானுடைய மைந்தன் பிரத்யு மனனுக்குக் காதுக் குத்துச் சடங்கு நடந்தது. அவ்விழாவில் கலந்து கொள்ள இராதை தமது தோழிகளோடு பிருந்தா வனத்திலிருந்து துவாரகை வந்தாள். துவாரகைக்கு வரும் வழியில் ஒரு குளம் இருக்கிறது. அதற்குக் கோபி தாலாப் என்று பெயர். அங்கு வந்துத் தங்கினார்கள். துவாரகை நாதனுக்குத் தெரிந்தது. கண்ணன் உருக்மணியை அழைத் தார். உருக்மிணி! கோபிதாலாப் என்னும் இடத்தில் இராதா ராணிதமது தோழிகளோடு வந்திருக்கிறாள். அவர்களுக்கு உபசாரம் செய்து இங்கு அழைத்துவா என்றார். உருக்குமிணி சில பெண்களோடு அங்கு சென்று அவர்களை உபசரித்து இராதையைத் தனியே சந்தித்து பாலைச் சூடு பண்ணி கொதிக்கிற பாலைக் கொடுத்தாள். அவளும் வாங்கிப் பருகினாள்.

அவள் உள்ளங்கொதித்தது. உருக்மிணி அங்கிருந்து துவாரகைக்கு வந்தாள். அவ்வமயம் அச்சுதன் அரியணையில் படுத்துக் கொண்டு அலறினார். உருக்மிணி ஜனார்தனன் தாளைப் பார்த்தாள். காலடி வீங்கி இருக்கிறது. காரணம் வினவினாள் கண்ணன் - அதைக் கேளாதே என்றான். மீண்டும் வினவினாள். மேலும் இதுயார் செய்த கொடுமை என்றாள். மாயவன் — நீ செய்த கொடுமை தான் என்றான். நான் என் செய்தேன் இறைவா என்றாள்.

எனது அந்தரங்க சக்தி இராதைக்குக் கொதிக்கிற பாலைக் கொடுத்தாயே அதன் பரிணாமந்தான் இந்தக் கதி என்றான். உ ரு க் கு மி ணி — அவளுக்குக் கொடுத்ததால் உங்களுக்கு எப்படி நேர்ந்தது? பகவான் – அவள் இதயத்தில் தான் நான் இருக்கிறேன் என்றான். அவள் = இராதை. உருக்குமிணி பகிரங்க சக்தி. இ ரா தை அந்தரங்கசக்தி. இறைவன் திருவடி அன்பர் இதயத்தில் தான் இருக்கிற தென்பது இதனால் தெளிவாகிறது.

பகவானது தியானம் மங்கலம். "மங்கலம் பகவான் சம்பு:" "மங்கலம் பகவான் விஷ்ணு:" என்று புராணங்கள் புகலுகின்றன. "ரஹசி சம்விதோ யாஹிருதி ஸ்பிருஸ:" நீ தன்னந் தனியாக இருந்து உரையாடுகின்றாய். அதில் உனக்கு என்ன தெரிகிறது? அந்த வார்த்தை இதயத்தைத் தொடுகிறதா? இல்லையா? கோ விந் தன் கோபிகளோடு உரையாடும் போது கோபிகளைத் தவிர வேறு யாரும் இல்லை. ஆதலால் இது ஏகாந்தம்.

பகவான் அவர்களிடத்தில் என்ன பேசினார்? பகவான் – தேவி மார்களே! உங்களுக்காகக் கோலோகத்தை விட்டுப் பூலோகத்திற்கு வந்தேன். கோபாலனானேன். வனவனமாகத் திரிந்தேன். உங்கள் ஞாபகம் என் மனத்தில் எப்போதும் இருக்கிறது. உங்களை ஒருபோதும் மறவேன் என்றெல்லாம் சொன்னான் கேசவன். இதற்கு இரகஸ்யம் என்று பெயர்.

குகக நோமங: க்ஷோபயந்திஹி — மாயவா! உனது அன்பு நிறைந்த சிரிப்பும், இனிய வார்த்தையும், டு மு க் கு டுமுக்கு என்னும் நடனமும், காமனை வெல்லும் பார்வையும், நீ ல வ ண் ண மு ம், மந்த காஸ்யம் எல்லாம் கபடம். சூது. இறைவன் கிடைக்கிறான். அவர்களுக்குச் சாந்தி உண்டா கிறது. நீ எங்களுக்குக் கிடைத்தும் அசாந்தி உண்டாகிறது. பிரியஹிதம் பிரேமவீட்சணம். பிரஹஸிதம் — சத். சித்.

ஆனந்தம் என்னும் மூன்றையும் வெளிப் படுத்துகின்றன. முராரே! நீ சச்சிதானந்த வடிவமாயிருக்கின்றாய். கிருஷ்ணா! எங்களை அந்நிலைக்குக் கொண்டு வரவேண்டாம்.

நாங்கள் உனக்குத் தாசிகளாகவேயிருக்க வேண்டும். அன்புமார்க்கத்தில் இனிப்பும் இருக்கும் கசப்பும் இருக்கும். கலகமும் வரும் அன்பும் உண்டாகும். உணவு உண்ணுகிற போது இடையிடையே ஊறுகாய், துவையல், சட்னி இவை தேவைப்படுகின்றன. மதுரம் மட்டும் இருந்தால் போதாது. மதுரமும் கசப்பும் சேர்ந்து தான் அன்புத்தத்துவம் உண்டாகிறது.

இருமின்சாரம் இணைந்து ஒளி ஆவது போல. தாகம் இரசமயம். திருப்தி நிறைவுத் தத்துவம். தாகத்தில் விருப்ப மில்லை. திருப்தியில் முயற்சி இல்லை. ஆதலால் இருபொருளும் இசைந்து அன்புத்தத்துவம் ஆகிறது. தாகம் இராதை. திருப்தி கிருஷ்ணன். இதற்கு உதாரணம்—இரசகுல்லாவும், குலாபுஜாமுன் போல.

ஒருமகாத்மா பிருந்தாவனத்திலிருந்தார். அவர்க்குத் தாடியும் முடியும் இருந்தன. அவர் மலம் கழிப்பதற்காக மரம் அடர்ந்த இடத்திற்குச் சென்றார். அவ்வழியில் நின்ற உடைமரம் அவர் தாடியைப் பிடித்துக் கொண்டது. மகாத்மா இனி நான் இந்த இடத்தை விட்டு ஒரு அடி கூட எடுத்து வைக்கமாட்டேன் என்று அங்கேயே நின்றார்.

இவ்வாறு இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. மலமும் கழிக்கவில்லை. கண்ணன் பார்த்தான். மகாத்மா பல நாள் பசியோடு நிற்கிறாரே என்று எண்ணி யாதவப் பையன் வடிவம் பூண்டுக் கரத்தில் தடியும், தலையில் தலைப்பாகையும் அணிந்து அவர் முன்னே தோன்றி மகாத்மன்! தாடியை அவிழ்த்து விடட்டுமா என்றார். மகாத்மா — நீ யாரென்றார். பகவான்— நான் இடைப்பையன் என்றார். ம... தொடாதே

என்ருர். பையன்... ஏன் என்ருன். ம...இது பிருந்தாவனம், இதற்குத் தலைவன் கிருஷ்ணன். அவன் வந்து அவிழ்க்க வேண்டும். பையன்.. நான் தான் கிருஷ்ணன் என்ருர். ம... அங்ஙனமாயின் நீ எந்த கிருஷ்ணன் என்ருர். பையன்... எந்தக் கிருஷ்ணன் வேண்டும் என்ருன். ம... ஈண்டு ஐந்து கிருஷ்ணன் உளன். அவரில் நீ யார்? எந்த கிருஷ்ணன் என்ருர். பகவான் ஐந்து கிருஷ்ணன் யார் யார்? ம... 1 கோவிந்தகிருஷ்ணன் 2 கோபாலகிருஷ்ணன் 3 இராம கிருஷ்ணன் 4 இராதாகிருஷ்ணன் 5 ஸ்ரீ கி ரு ஷ் ண ன். பகவான்— இவர் ஐவரில் எந்த கிருஷ்ணன்வேண்டும் என் றார். ம... இராதாகிருஷ்ணன்வேண்டும்என்ருர். பகவான் குலுக் கென்று சிரித்தார். மனத்தில் எண்ணினுர் மகாத்மா விற்கு இராதையோடு நாம் தரிசனம்கொடுக்க வேண்டும் போலிருக்கிறதுஎன்று மீண்டும்நகைத்தார்.

இராதையை பகவான் நினைத்தார். இராதை வெளி வந்தாள். வாசுதேவனைத் தழுவினுள். மகாத்மன்! இவர்தான் கிருஷ்ணன் என்ருள். அவர் அனுமதியைப் பெற்று பகவான் தாடியை அவிழ்த்து விட்டார்.

மகாத்மா சென்ருர். இதனுல் என்ன தெரிகிறது? இராதா கிருஷ்ணன் சிறந்தவன் என்று தெ ரி கி ற து. கோபிகள் ஒரு க்ஷணங் கூடக் கோவிந்தனை நினையாது இருந்ததில்லை. நீரை இழந்து மீன் ஒரு கணங்கூட வாழ இயலாது. அதுபோல் கோபிகளும் கோவிந்தனை விட்டு வாழ முடியாது. வாழ விரும்பவும் இல்லை. ப க வா னு டை ய வியோகம்—பிரவு. ஒரு கணமும் யுகம் போல் கழிகிறது.

கோபிகள் — பிராணநாதா! நாங்கள் உள்ளன்போடு கள்ளம் இல்லாமல் உன்னிடத்தில் அன்பு வைக்கிறோமே நீ ஏன் எங்களைக் கண்டு மறைகிறாய்? சுவாமின்? பெண் குலத்தை இவ்வாறு தவிக்க விடலாமா? ஸ்ரீ நி வா சா!

பெயருக்கு ஏற்றவாறு குணம் வேண்டாமா? மாயவா! மதுசூதா! மணிவண்ணு! எங்களே ஏமாற்றாதே. கபடநாடக சூத்ரதாரி! கபட — க-சுகம் படம்-துணி. சுகவடிவ பரமாத் மாவாகிய நீ உனது மறைப்பை எடுத்து விட்டு முன்னேவா.

ஜனுர்தன! காலையிலிருந்து மாலை வரை மாலையிலிருந்து காலை வரை நினது மலரடியை நினைத்துக் கொண்டேயிருக் கிறோம் என்றார்கள். வரும் சுலோகத்தில் காலைநேரத்தின் பெருமை கூறப்படுகிறது.

பத்தாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 11

சலதியத் விரஜாத் சாரயன் பசூன்
நளிநசுந்தரம் நாததே பதம்1
சில திரணாங்குரை : சீததீதிந:
கலிலதாம் மந: காந்த கச்சதி சு. 11

பொருள்.

நாத! நீ எங்கள் சுவாமி. தலைவன். சுதந்திரன். தன் மனம் போல் நடப்பவன். உன்னைத் தடுப்பாரிலர். நாங்கள் தடுத்தால் நீ எப்படி நிற்பாய்? யத் விரஜாத் பசூன் சாரயதி. சலசி. (கோபாலா) நீ பசுக்களை மேய்ப்பதற்குச் செல்லுகின்றாயே. அப்போது எங்களுக்கு எவ்வளவு வேதனையுண்டாகிறது தெரியுமா? அதை நீ அனுபவிக்கிறதில்லை.

"வந்தியா நைவ விஜாநாதி குருவீம் பிரசவ வேதனும்" பிள்ளைப்பெறுவதால் உண்டாகும்வேதனை மலடி அறிவாளோ? அறியாள் என்பது பொருள். அதுபோல் எங்கள் வேதனையை நீ அறிய மாட்டாய். காந்த! பகவானைப் பார்த்துக் கோபிகள் காந்த என்கிறார்கள். க - சுகம். அந்தம் - எல்லைமுடிபு. எங்கே போய் இன்பம் முடிவடைகிறதோ அந்தப் பகவான் காந்தன். வெறும் காந்தனல்லன். பின்னை, ஸ்ரீ காந்தன். விரஜாத் சலசி - விரஜனம் விரஜ : விரஜபூமி. புண்ணியபூமி. இங்கிருந்து வெளியேறுகிறாய். இங்கையே திரியேன். சாரயன் பசூன். முராரே! நீ தயாவான். பசுவின் இடத்தில் இவ்வளவு கிருபையா? ஓ என்ன விந்தை? அவைகளுக்குப் பசியுண்டாகா வண்ணம் காத்து வருகிறாய். பசூன்சாரயசி - பசு விவேகமில்லாத விலங்கு. அவைகளிடத்தில் உனக்கு அன்பு. எங்களிடத்தில் உனக்கு வம்பு. மாயவா! உனக்கு இது ந்யாயம் தானா! சொல். கிருஷ்ணன் — நான் வனத்திற்குப் போகாது போனால் அவைகள் போகுமா? சொல்லுங்கள் என்றார். கோபிகள்-கோவிந்தா! நீ செல்லவேண்டும்

என நினைத்தாலும் உன் திருவடி செல்ல விரும்பவில்லை. நீ விரும்புகின்ருய் உன் திருவடிச் செல்ல விரும்பவில்லை. நாம் வனத்திற்கு க்போகாமல் இருந்தால் இவைகளுக்குத் துக்கம் உண்டாகும் என்று நீ நினைக்கின்றாய் போலும்.

ஏன் கிருஷ்ணு! இது தான் உன் எண்ணமா? எங்கள் துன்பத்தில் நீ இன்பம் அனுபவிக்கின்ருய். தாமோதரா! நீ நினைப்பது வேறு, நாங்கள் நினைப்பது வேறு. உனக்கு இன்பத்தைத் தந்து நாங்கள் இன்பமாய் வாழ விரும்புகிருேம். ஆனுல் நீயோ, எங்களுக்குத் துன்பத்தைத் தந்து இன்பமா யிருக்கவிரும்புகிருய்.

இதனுல் நீ கபடி. நீ வனத்திற்குப் போகிருய் .எதற்குப் போகிருய்? பசூன்சாரயன். முகுந்தா! நீநந்தகோபன் பின்னுல் சென்ருல் நன்ருயிருக்கும். யசோதையின் பின்னுல் சென்ருல் அதை விட மிக நன்ருயிருக்கும். நீயோ பசுக்கள் கூடப் போகின்ருய். பசுக்களுக்கு விவேகமா இருக்கிறது? எந்த வழியில் போகவேண்டும் எதில் போகக்கூடாது என்று தெரியுமா? இவைகள் உனக்குப் பின் பக்கத்தைக் காட்டிக் கொண்டே செல்லுகின்றன. பசுக்களுக்குச் சிறிது கூடப் புத்தியில்லை.

பகவானுக்குப் புறமுதுகுக் காட்டலாமா வென்று எண்ணம் இல்லை. பசூன்சாரயன் — சியாமசுந்தர! இவை களுக்கு என்ன தெரியும். பகவான் - கோக்கள் கூடச் செல் லுகின்ற பொழுது ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் செல் லுகின்றன. இக்காட்சி அவர்கள் கண்ணை விட்டு அகலா திருக்கின்றது. இடையிடையே பகவான் பசுக்கள் நாமத் தைச் சொல்லி அழைப்பார். நந்தா, காமதா, சித்ராவா என்று அழைப்பார்.

நளின சுந்தரம் நாத! தேபதம் — கோபிகள் பார்வை பகவானிடத்தில் சென்று விட்டது. இறைவன் இனிய

பாதத்தைக் கூர்ந்து நோக்குகிறார்கள். பகவத்பாதம் சென்னிறம், பகவானதுப் பாதத்தில் நான்கு குணங்கள் அமைந்திருக்கின்றன. 1. சென்னிறம் 2. கோமளம் = மென்மை. 3. சீதளம் = குளிர்ச்சி. 4. சுகந்தம் = நறுமணம். இந்நான்கு குணங்களும் தாமரையிலும் இருக்கின்றன.

தாமரை இருப்பதுத் தடாகத்தில். தடாகம் = பொஸ் தாமரை குளம். சியாம சுந்தர! உனது பாதம் கமலத்தைப் பார்க்கினும் மென்மையானது. எங்கள் இதயம் தடாகம். எங்கள் இதயத் தடாகத்தில் உன் பாதத்தை வைக்க வேண்டியிருக்க அதை விட்டு விட்டுக் கல்லும், முள்ளும் நிறைந்த கானகத்தில் வைக்கின்றாயே இஃது என்ன முறை?

நாத! தே பதம் — உன் கால்களுக்கு நீ நாதன். நீயே தலைவன். அவை உன் வயமாக இருக்கின்றன. இருந்தாலும் நீ உன் காலடியை வனத்தில் இழுத்துச் செல்வது முறையில்லை. பதம் ஒருமை. ஒரு பாதம் கூடத் தரையில் வைக்க அர்கதி இல்லாதிருக்க, நீ இருபாதத்தையும் நிலத்தில் வைப்பது அநியாயம். முகுந்தா! எண்ணிப்பார்.

"சிலத் திருணாங்குரை: சீததீதி" இப்பொழுதுக் கோபிகள் பார்வை பூமியில் இருக்கிறது. இன்றைக்குச் சற்று ஏரக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் சிலர் கோவர்த்தனகிரியை வலம் வந்தனர். அவர்கள் காலில் சில கற்கள் தென்பட்டன. அத்தனைக் கற்களிலும் பகவத்பாதச் சின்னம் காணப்பட்டது. கல்லில் பாதச்சின்னம் எப்படிப் பட்டது? பகவானுடைய திருவடிப் பட்டதும் நிலம் மென்மையாகியது. இறைவனடிப் பட்டதும் அதில் பதிந்தது.

ஐம்பூதங்களை ஆராயும் போது ஆகாசத்திற்கு விரிவும் காற்றிற்கு அசைவும், கனலிருக்குச் சூடும், புனலிருச்குக் குளிர்ச்சியும், நிலத்திற்குக் கடினமும் இருக்கின்றன என்பது தெளிவு. இது விஞ்ஞானரீதியாகவும் மெய்ஞ்ஞான

ரீதியாகவும் தேர்ந்து எடுத்த ஒரு உண்மை. எனவே நிலம் கடினம்.

ஸ்ரீராமன் இளையவனோடு சித்திரக்கூடம் சென்றார். அவனைத் தேடி ஆரியன் பரதன் அனைவரோடும் சென்றான். அப்போது இராமன். தம்பி பரதா! அய்யாவை எங்கே என்றான். அக்காட்சியைக் கண்ட மலைகளும் கற்களும் கரைந்து ஓடின. கண்ணீர் வடித்தன என்று இதிகாசம் கூறுகின்றது. ஆகையால் இறைவனுக்காகக் கல்லும் உருகிக் கண்ணீர் விடும். பகவான் அடி மேல் அடி வைக்கும் போது இதயத்தில் நருக்கென்று வேதனையுண்டாகிறது. புல் பலவிதம். பசும் புல், நாணற்புல் இன்னும் சில பசுமையாகவும், சில மென்மையாகவும். சில வன்மையாகவும் இருக்கும். அவைகளில் கமலக்கண்ணன் கால் வைத்துச் செல்லும் போது கோபிகளுக்கு வருத்தமாக இருக்கிறது. கல்லும் முள்ளும் நிரம்பிய கானகம் நமதுநாயகன் அதில் கால் வைத்துச் சென்றால் கால் நோவாதா? என்று வருந்துகிறார்கள்.

அன்பில் ஐஸ்வரியம் தெரியாது. அன்புதான் தெரியும். மற்றது ஒன்றும் தெரியாது. கணவனிடத்தில் கோடி திரவியம் இருந்தாலும் அவளுக்கு அதுத் தோற்றாது. கணவன் மட்டும் தோற்றுவார். கிருஷ்ணமூர்த்தியின் இடம் எட்டு ஐஸ்வரியங்கள் இருக்கின்றன. அவை அவர்களுக்குத் தெரிகிறதில்லை. கோபிகள் அவனை நண்பனாகவே எண்ணுகிறார்கள்.

''நண்பனே எங்கள் கோவே நாதனே ஆதிமூர்த்தி'' தேவாரம். பகவானுடைய பாதத்தில் சிறிய தூளி பட்டாலும் அவர்கள் சம்மதிக்கிறதில்லை. அவன் காலில் ஒன்று பட்டால் அவர்கள் கண்ணில் பட்டமாதிரி இருக்கும். தெரிகிறது மட்டும் அல்ல. உண்மையும் அதுதான். தங்களுக்குத் துன்பம் வந்தாலும் பொறுத்துக் கொள்வார்கள். ஆனால் பகவானுக்கு

வரும் போது பொறுத்துக் கொள்வதில்லே. "கலிலதாம் மன: — விரஜபூமிக்கு நீ தலேவன். எங்களுக்கு நீ காந்தன். காந்தன் என்பதற்குப் பல பொருளில் ஒரு பொருள் துயரம் தருபவன். எந்த வாக்கியத்தின் முடிவில் 'க' வருமானால் அது துயரத்தைக் குறிக்கும்.

அது வருமாறு — காக, குகக, அந்தக, பக, இவை யெல்லாம் துன்பம் தரும் சொற்கள். "ந: மன: கலிலதாம்" கலிலதாம் கச்சதி. எங்கள் மனதில் கலியின் கொடிபடர் கிறது. கலி = துன்பம். மரத்தோடு எது ஒட்டியிருக்குமோ அது கொடி. கலி = கலகம்.

நீ உன் மனம் போல வனத்திற்குச் செல்லுகின்ருய். எங்களுக்குள்ளே கலகம் உண்டாகிறது. கலகம் - சண்டை. கேசவன் வனத்திற்கு ஏன் போகிறான் என்று அவர்கள் எண்ணுகிருர்கள். அவர்கள் கோபிகள். மாதவன் மனத்தில் ஏதோ எண்ணிக்கொண்டு தான் போகிருன். நம்மை விட முராரிக்கு அங்கு என்ன பிரியம்? ஒரு நாளாப் போகிருன். அநுதினமும் போகிருன். அவசியம் யாதோ காரணம் இருக்கவேண்டும். காரணம் இல்லாமல் காரியம் நிகழாது. சட்டியில் இருந்தால் தான் அகப்பையில் வரும் என்பது ஒரு பழமொழி. எங்களே யேங்க விட்டு வனத்திற்குச் செல்லு கின்ருய். உன் காலில் வலி எடுக்கவில்லேயா? மற்றொரு மாது — அலா கிர்த்திகுமாரி! நமது பிரியன் மாயவன் சும்மா வா போவான். பசுக்களே மேய்க்கப் போவான் என்றாள்.

வேறு ஒரு கோபி — நந்தலால் நல்ல வழியில் தான் செல்வான் என்றாள். மனம் கூறுவதாவது - பசுக்கள் நல்ல மார்க்கத்தில் செல்லுமா? அவைகளுக்கு அவ்வளவு விவேக முண்டா? கோக்கள் எவ்வழியில் செல்லுமோ அவ்வழியில் தானே அச்சுதன் செல்லுவான் என்ருள். வனிதைகளே! பசுக்கள் ஓடும் போது (பசுபதி) கோபாலனும் ஓடத்தானே செய்வான்.

மற்றொரு கோபி — ஏண்டி கண்ணனை வயப்படுத்து வது நம் செயலன்று. எல்லாம் சிவன் செயல். நாம் அதற் கென் செய்வோம். விதாதா நம்தலையில் துன்பம் அனுபவிக்க எழுதியிருக்கிறன். கோவிந்தன் வனம் சென்று நமக்குத் துன்பம் தர எண்ணினுல் தரட்டும். ஆனுல் நாம் அவனை நோவப்படாது. அவனுக்குத் தொல்லைக் கொடுக்கக்கூடாது. அழுதால் பயனென்ன, தொழுதால் பயனென்ன, என்றபடி நோவும் மங்கையைப் பார்த்து இதயத்தில் வாழும் செங் கமலக்கண்ணன் அரிகோபிகளே! என்னைப்பற்றிக் கவலைக் கொள்ள வேண்டாம். வனத்திற்குக் காலையில் போய் மாலையில் வரத்தானே செய்கிறேன். வனத்தில் எனக்குச் சுகமுண்டாகிறது. வனவாசிகளோடு இன்பத்தை நுகருகி றேன். வனவாசி — மரம்.

செடி, கொடி, விலங்கு, பறவை, நதி இவைகளுடைய இனிய குரல்களைக் கேட்டு என் மனம் மகிழ்வு உறுகிறது. எனவே அனுதினம் அங்குச்செல்கின்றேன் என்ருன். மேலும் யமுனை நதியின் பிரவாகம் என் மனத்தைக் கவர்கின்றது. சாலைகளும் பூஞ்சோலைகளும் என் நெஞ்சைக் கொள்ளைக் கொள்கின்றன.

குயில்கள் கூவுகின்றன. மயில்கள் ஆடுகின்றன. மான்கள் வாயில் பசும் புல்லை வைத்துக்கொண்டு என்னையே பார்க்கின்றன என்று மாதவன் கூறினுன். காலைப்பொழுது மலர்ந்தது. கதிரவன் உதயமானுன். திசைகள் நகைத்தன. கோபிகள் கண்கள் குவிந்தன. மனங்கலங்கியது. கிருஷ்ணன்—நீங்கள் ஏன் கலங்குகிறீர்கள் என்றான்.

கோபிகள்— நீ காலையில் போய் மாலையில் வந்தாலும் அவ்வளவு நேரம் எங்களால் தாங்கமுடியவில்லை. கிருஷ்ணன்- அன்பன் தூரம் செல்லும் போது துயரம் உண்டானுலும் சமீபம் வரும் போது இன்பம் உண்டாகத் தானே செய்யும் என்றான் முராரி.

கோபிகள்— நீ உரைப்பது உலகவழக்கு. திரும்பி நீ வந்தாலும் இன்பத்தைக் காணோம். சியாமசுந்தரன்—மாலைப் பொழுதில் மாடுகளை முன்னே நடத்தித் தான் பின்னே வருகிறேன். சிரமிசைத் தலைப்பாகையும், தோள்களில் மெல்லிய பிரம்பும், முன்னே தேனும், பின்னே ரேணும், டுமுக்குடுமுக்கு என்று நடனமும், வாயில் வேணும் வைத்துக் கொண்டு வாசுதேவன் வருகிறான். தேனு பசு. ரேணு = புழுதி. வேணு – புல்லாங்குழல்.

வாசுதேவனுக்குப் பின் கோபாலர்கள் வருகிறார்கள். பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் வருகிறார்கள். கோபிகள்-கோபாலன் கோலத்தைக் கண்டு களிக்க அவரவர் வாசலில் வந்து இமைக்கொட்டாமல் பார்த்துக் கொண்டே நிற்கிறார்கள். சிலப் பெண்கள் ஜன்னல் வழியாக நோக்குகிறார்கள். இளம் வனிதையர்கள் மேல் மாடியில் நின்று பார்க்கிறார்கள்.

வீதியில் நிற்கின்ற பாலர்கள் விமலனைக் காணக் கை நிறையக் கனிகளை வைத்துக் கொண்டு நிற்கின்றனர். "பக்தி பிரவர்த்திதா திருஷ்டிய முநீநாமபி துர்பலா" கோபிகள் பக்தி மார்க்கத்தைப் புவியில் பரப்பினார்கள். யோகிகளுக்கும், ஞானிகளுக்கும், அன்பர்களுக்கும் அரிதாகிய அன்பு மார்க்கத்தை இவ்அரிவையர்கள் எளிய முறையில் வெளிப்படுத்தினார்கள்.

ஞானிகளும் யோகிகளும் சகலகலை நிபுணர்களும் இருப்பினும் கோபிகள் இறைவனோடு விரைவாகத் தொடர்புடையவர்கள். இதை யாருந் தெரிந்து கொள்ள வில்லை. எனவே அம்மடந்தையர் அவனியில் போற்றற் குரியவர். இவர்களுக்கும் இறைவனுக்கும் இனிமையான சம்பந்தம் உண்டு.

ஜீவனை இறைவனோடுப் பொருத்துவது எளிதல்ல. எனினும் இவ்வனிதையர்கள் தங்களைப் பகவானோடுப் பொருத்திக்கொண்டார்கள். இதுதான் இவர்கள் செய்த பாக்கியம். மாயவனோடு இத்தூயவர்கள் துய்த்த இன்பம் புனிதமானது. பாவமற்றது. இவர்கள் இறைவனை எய்துவதற்கு ஒரு நவீன மார்க்கத்தைக் கையாண்டார்கள். யோகிகளுக்குச் சமாதியில் இறைவன் தரிசனம் கிடைக்கிறது. ஞானிகளுக்கு அவர்கள் சொருபமாக அறியப்படுகிறான். இந்நங்கையர்களுக்கு நம்மைப் போல வந்து தெரிசனம் கொடுக்கிறான் சாதாரண மனித வடிவத்தில் வந்து காட்சி அளிக்கிறார். அன்பன் பெறுகிற கருணையை யார் பெறுவார்.

நமக்குக் கண் காது மூக்கு வாய் இருப்பது போல இறைவனும் இவ்வடிவத்தோடு வந்து கோபிகளோடு பேசவும், கேட்கவும், பார்க்கவும் நகைக்கவும் இருக்கிறார். இவ்வளவு கீழே இறங்கி யாருக்கும் இறைவன் வந்ததில்லை.

கோகுலத்தில் இப்போதும் எட்டு விஷயத்தைப் பற்றி கோவிந்தனைச் சிந்திக்கிறார்கள். 1. பகவான் எப்படித் தூங்குகிறார். 2. எப்படி விழிக்கிறார். 3. கோபாலரோடுக் கூடி உரையாடுகிறார். 4. உணவு எப்படி அருந்துகிறார். 5. பசுக்களை எப்படி மேய்க்கிறார். 6. சந்தனம், அத்தர், புனுகு இவைகளைக் கோவிந்தன் எப்படி அணிகிறான். 7.அவர்மகிமை என்ன 8. பீதாம்பரம், மயில்கிரீடம் இவைகளை அணிந்து எவ்வாறு மிளிர்கிறான் என்றுச் சிந்திக்கிறார்கள்.

முரளிதரன் புல்லாங்குழலின் மகிமை - இவையெல்லாம் எண்ணிப் பார்க்கிறார்கள் கோபிகள். அன்பு என்னும் மலர் நம்பிக்கை என்னும் தடாகத்தில் உதிக்கிறது. பணிவடிவமாக மலர்கிறது. பணியாற்றுகிற போது ஞாபகம் வரும்.

விஜயா! எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு என்றான் ஸ்ரீநிவாசன். சேவை இருவிதம் — ஒன்று

சாமான்யம், மற்றொன்று விசேஷம். பொருள்களையும், பெண்டு பிள்ளைகளையும் அர்ப்பணம் செய்வது பொதுவான சேவை. தன்னையே பகவானுக்கு அர்ப்பணிப்பது விசேஷ சேவை.

மீரா என்னும் புனிதமாது சாரங்கப் பாணிக்குத் தன்னை அர்ப்பணித்தாள். அவள் சொன்னது—''வரவரியோ கோபால ஜூம்'' அரிவையர்களே! ஒருவனைக் கணவனாக ஏற்றுக் கொள்ள வேண்டுமானால் கண்ணனை ஏற்றுக்கொள்ளுங்கள் என்றாள்.

பாகவதத்தில் ஒன்பதுவித பக்திகள் உரைக்கப்பெற்றிருக்கின்றன — 1. சிரவணபக்தி 2. கீர்த்தனபக்தி 3. ஸ்மரணபக்தி 4. பாதசேவனபக்தி 5. அர்ச்சனபக்தி 6. வந்தனபக்தி 7. தாஸ்யபக்தி 8. சக்கியபக்தி 9. ஆத்மநிவேதன பக்தி. கோபிகள் ஆத்மநிவேதன பக்தி பண்ணினார்கள். தங்களை இறைவனுக்கு அர்ப்பணஞ் செய்து விட்டார்கள். இது விசேஷ சேவை.

வங்காளதேசத்தில் சைதன்யமகாபிரபு என்னும் ஒரு மகான் இருந்தார். அவர் கிருஷ்ணபக்தர். அவருக்குப் பல சீடர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் ஒரு கேள்வியை எழுப்பினார். அது கீழே வருகிறது — நீங்கள் பரமாத்மாவை எவ்வாறு நினைக்கிறீர்கள்? நீங்கள் வழிபடும் தெய்வம் யாது? அது நிற்குணமா, சகுணமா? அருவமா? உருவமா? பிரஹ்மமா? ஈசுவரனா? சிவனா? விஷ்ணுவா? பதில்—இவைகளில் ஒன்றுமில்லை. எல்லாம் ஒன்றே தான் ஆயினும் எங்களுக்கு

குலதெய்வம் இராதாகிருஷ்ணன் தான். அவன் விரஜ ராஜகுமாரன் என்றார். மீண்டும் உங்கள் தாமம் எது? தாமம்=சேரும் இடம். வைகுண்டமா? கோலோகமா? சுவேதபர்வதமா? இல்லை, இல்லவேயில்லை. எங்கள் தாமம் பிருந்தாவனம் என்றார். மீண்டும் நீங்கள் வழிபடும் முறை என்ன? அது இரகசியம். இதை எவ்வாறு இயம்புவது. ஏன்?

வாய்விட்டுப் பேசொணுதது. மாசர்க்குத் தோணொணுதது. கற்பனைப் பண்ணிப் பார்க்கொணுதது. விரஜவாசிகளின் எண்ணம் மாத்திருபாவம், சகோதரிபாவம் அல்ல, பின்னை? எல்லாம் கிருஷ்ணபாவம். பாவம்—நினைப்பது.

மீண்டும்— உங்களுக்கு உரிய நூல்கள் எவை? அவை யின் நாமம் யாது? பதில் — பாகவதம். கேள்வி — அதன் மூலமாகப் பெற வேண்டிய பேறெது? பதில் – மனிதன் பெற வேண்டிய பேறு கிருஷ்ணபக்தி. கேள்வி - இது யார் மதம்? பதில்- சைதன்யபிரபு மதம். இப்போது மனிதனுக்குப் பிரியம் பொருளில்தான். அவனுடைய எண்ணம் பணம் இருந்தால் தான் நன்ருக வாழமுடியும் என்பது. ஆனல் பணம் இருந்தும் நலமாக வாழ முடியவில்லையே என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. தெரிந்தவன் மயங்கானே என்றபடி.

கிருஷ்ணன் மாலையில் வீட்டிற்குத் திரும்புகிறான். மென்மையானமேனி. பசுவின் காலடியிலிருந்து எழும் புழுதி அவன் மேனியில் படிகிறது. கோனுரைப் போலக் கோலம். நூற்றுக்கணக்கானக் கோபாலர்கள் பின்னே வருகிறுர்கள். கோவிந்தன் சிரசில் முகுடம் இல்லை. கழுத்தில் மாலையில்லை. காதில் குண்டலம் இல்லை, கரத்தில் கங்கணம் இல்லை, அரையில் தங்கக்கொடி இல்லை, பாதத்தில் சதங்கையில்லை.

பீதாம்பர வஸ்த்திரமில்லை. இதற்கு மாருக வனத்தில் உள்ளப் பூக்களால் மாலை செய்து வனமாலை என்னும் நாமம் உடைய மாலை கழுத்தில் அணிந்திருக்கிறுன் அச்சுதன். ஏழ்மையானக் கோலத்தில் வருகிறுன். அவனது சரீரம் நீர் நிறைந்த மேகம் போல் மிளிர்கின்றது. புல்லாங்குழல் இடுப் பில் சொருவி இருக்கிறுன். கண்ணனின் காட்சி கண்டவர் கண்ணையும், கருத்தையும் பறிக்கிறது. மேகவண்ணனைப் பார்த்து மயில்கள் ஆடுகின்றன. குயில்கள் கூவுகின்றன. மான்கள் மகிழ்கின்றன.

இக்காட்சியில் எழுகின்ற இன்பத்தை அன்பர்கள் தான் அநுபவிக்கமுடியும். வம்பர்களால் துய்க்கமுடியாது. இன்பரசம் பாக்கியவானுக்குக் கிடைக்கும். யாருக்கு இதயம் இருக்குமோ அவர் பருகுவார்கள். யாருடைய நெஞ்சம் கல்லா இருக்குமோ அவரால் பருகமுடியாது.

ஈரநிலத்தில் தான் முளையுண்டாகும். காய்ந்தநிலத்தில் உண்டாகாதல்லவா? அதுபோல, ''புமான் விரஜ்யேத விநா பசுக்நாத்'' எவன் தனக்கும், பசுக்களுக்கும் இம்சையைக் கொடுத்துச் சுவர்க்கத்தை அடைகிறானே அவனுக்கு இந்த இரசம் கிடைக்காது. புண்ணியம் உடையார்க்கு இந்த இன்பம் கிடைக்கும்.

அயனிடத்தில் ஒருவன் பிரார்த்தனை செய்தான். நான்முகனே! பிரஜாபதே! நீர் பெரியவர். நாங்கள் ''வயுநாநீ வித்வான்'' செய்த தவறுகளை நீர் அறிவீர். வித்வான் = அறிவாளி. அதற்குரிய தண்டனை எங்களுக்கு அவசியம் கொடும் என்றான். ஆனால் ஒன்று உம்மிடம் கேட்கிறேன் பகவானது கதையைக் கேளாமலும், விலங்குகளைக் கொன்றும் மனம் போலத் தின்று திரிகிறானே அவனுக்குரிய தண்டனை மட்டும் எனக்குக் கொடுக்க வேண்டாம் என்றான். இதனால் பகவானது கதாரசத்தை அன்பர்களைத் தவிர வேறு யாரும் சுவைக்க முடியாது.

பாயாசம் நன்றாக இருந்தாலும் நாக்கில் பித்தம் இருந்தால் சுவை தெரியாது தானே. கோபிகள் கோவிந்தனது இனிய இரசத்தைப் பருகும் பறவைகள். சாயங்கால நேரத்தில் திரும்பி வரும் பொழுது பொங்கி வடியும் பெருமானது அழகைச் செங்கண் மலர்களால் பருகும் காட்சியை அவர்கள் கூறுவதாவது—

சுலோகம் பதினொன்று முற்றிற்று

———

## சுலோகம் 12

தினபரீட்சையே நீல குந்தலை:
வனருஹாநநம் பிப்ரதாவிருதம்
கநரஜஸ்வலம் தர்ஸ்யன் முஹுர்
மநசிந: ஸ்மரம் வீர! யச்சி. சு. 12

பொருள்.

தினபரிட்சயே — ஸ்ரீகிருஷ்ணன் வனத்திலிருந்து எப்போது திரும்புகிறான்? தினபரிட்சயே — மாலைப்பொழுதில். எங்கே பார்த்தாலும் செவ்வானம் பூத்திருக்கிறது. தினமணி சாயப்போகிறது. தினம் மறைகிறது. அந்நேரத்தில் அச்சுதன் வருகிருன். ஸ்ரீதரன் அன்பின் தெய்வம். அன்பு ஒரு தலையாக இருக்கிறதில்லை. பாலம் போல் இருதலையும் பற்றி இருக்கும். அன்பு பகவானையும் பக்தனையும் பற்றி நிற்கும். பக்தி நான்குத் திசையிலும் திரும்பும். ஒரு சமயம் கிழக்கே நோக்கும் ஒருவேளை மேற்கே பார்க்கும். இவ்வாறு நான்கு புறமும் பார்க்கும்.

சியாமசுந்தரனும் நேராகப் போகமாட்டான். இங்கும் அங்குமாகப் பார்த்துக் கொண்டு தான் போவான். நினைத்தால் நடப்பான். நினைத்தால் ஆடுவான். நினைத்தால் பாடுவான். நினைத்தால் குழல் ஊதுவான். வேதம் ஓதுவான். விசுவத்தை மகிழ வைப்பான். அவனது கண்களிலிருந்து அன்பு மழை சொரியும். அவனது கடாட்சம்— கிருபா நோக்கம் நான்குபக்கங்களிலும் அமுதத்தைத் தெளிக்கிறது. மாதவனது வாயிலிருந்து மதுரஇரசம் வடிகிறது. அவனுடைய முகமண்டலத்திலிருந்து சிநேக பாவம் பொங்கிவழிகிறது. கிருஷ்ணச் சந்திரனைப் பார்த்து வெரும் சந்திரன் வெட்கப்படுகிருன். வெரும் சந்திரன் விண்ணில் உலாவும் சந்திரன். மாதவன் முகத்திலிருந்து வடியும் தேனைக் கோபிகள் கண்கள் எனும் வண்டுகள் பருகுகின்றன.

கோபிகளுக்குப் பகலில் கண்ணனைக் காணுமல் எழுந்த சந்தாபம் மாலையில் மாதவனைக் கண்டதும் மனம் குளிர்ந்து மகிழ்ச்சியடைந்தது. அவன் வசனுமிருதத்தைப் பருகியதும் சந்தாபம் தீர்ந்தது. இவ்வாறு இன்பமூர்த்தி யாகிய முகுந்தன் தனதுஇன்பத்தால் அவர்கள் துன்பத்தைத் துடைத்தான். வீட்டை அடைந்தான். அவர்கள் முராரிக்குப் பல சன்மானங்களை அளித்தனர்.

இவ்வாறு நாள்தோறும் கண்ணன் காட்சியைக் கண்ட அவர்கள் கண்கள் பார்த்த வண்ணமாகவும், கருத்து நினைத்த வண்ணமாகவே இருந்தன.

''நீலகுந்தலை: கனருகானனம் விப்ரதாவிருதம்'' நீலகுந்தலம்-சியாமசுந்தரனுடைய தலைரோமங்கள் கருநிறம். மேக வண்ணம். மேகத்தை ஒத்தன. அடர்த்தியாகவும், மென்மை யாகவும், அவன் ரோமங்கள் மிளிர்கின்றன.

அவன் தலைமுடிப் பார்ப்பவர் உள்ளத்தைப் பறிக்கும். அவனது தலைமயிர் குடிலம் =சுருட்டை உரோமம். அவன் கன்னம் வரை தொங்குகின்றன. கண்ணனின் கண் எவ் வாறு இருக்கிறது? தெளிந்த நீரில் இரு கயல் மீன்கள் விளையாடினுல் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது. இருசெவிகளிலும் மகரகுண்டலங்கள் மின்மின் என மிளிர் கின்றன.

இக்கூந்தலும். புழுதி படிந்த மேனியும், என்ன கூறு வதாவது இரசிகர்களே! உங்களை நினைந்து கொண்டிருந்த தால் தலையை வாரிகட்டவும், மேனியைக் கழுவவும் நேர மில்லாமல் போயிற்று என்று கூறின. பக்தனுடைய பரி பாலனத்தில் பகவான் முழுநேரத்தையும் செலவிடுகிறார். பக்தன் மறந்தாலும் பகவான் மறக்கிறதில்லை. மறப்பது சீவன் செயல். இறைவனுக்கு மறதி கிடையாது. அவன் மறக்கிறதில்லை. பகவான் மறந்தால் நாம் இறந்துவிடுவோம்.

என்னைக் காணாமல் உங்களுக்கு எவ்வளவு வருத்தம் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். மனிதனே! கிருஷ்ணனை ஈசுவரன் என்று எண்ணாது போனாலும் இவனது இனிய கோலத்தையாவது சற்று எண்ணிப்பார். இறைவனென்று எண்ணினாலும் என்ன செய்யப்போகிறாய்? தண்ணீரைத் தெளிப்பாய், பாலை விடுவாய், சந்தனம், அத்தர், புனுகு, ஜவ்வாது, பன்னீர் முதலிய பொருள்களைப் பூசுவாய். மாலை அணிவிப்பாய், தேங்காய் பழம் உடைப்பாய், இதை உன்னால் செய்ய முடியும். வேறு என் செய்வாய்?

இவைகளில் எந்தப் பொருளையும் இறைவன் விரும்புகிறதில்லை. அவன் அன்பனுக்கு அன்பன். ஆருயிருக்குத் தோழன். அவனுக்கு வேண்டியது அன்புதான்.

அன்பனுக்கு அன்பனடி ஆறுமுக
வேலனடி. வம்பனிக்கு வம்பனடி
வள்ளிமணவாளனடி. காவடிச்சிந்து.

இதயம் என்னும் இனிய மலரை அன்பெனும் அரியபுனலில் தோய்த்து அவன் மலரடியில் வை. மாதவா! யாதவா, மணிவண்ணா என்று மன்னிப்புக்கேள். இவ்வாறு செய்தால் உன் துயரம் எல்லாம் தொலையும். இன்பம் எய்தும்.

அவனுடன் துடர்பு வை. வைத்தால் துன்பம் தொலையும். கண்ணன் முன் கரங்கூப்பி நில். உன் கவலை தொலையட்டும். ஹரி முன் ஆணவம் பேசாதே. அழிந்து போகாதே. நேற்றிருந்தப் பொன் பொருள் இன்று எங்கே? உனது முப்பாட்டனார் எங்கே? உன் தந்தை எங்கே? நீயும் அவ்வழி தானே போகப் போகிறாய். எல்லோரும் போகிற போது நீ மட்டும் எப்படி நிலைத்திருக்க முடியும் என்று எண்ணிப்பார். பழுத்த இலை உதிரத்தானே செய்யும் என்பது உனக்குத் தெரியாதா? ஒன்றும் அறியாத நீரோ? நாம் தேடியப் பொருள் இங்கே இருக்கப் போகிறது. தேடிய நாம் ஓடிப்போகப்போகி

ரும். இதைத் தெரிந்தும் மனிதன் மென்மேலும் ஏன், பொருளைத் தேடிக் குவிக்கிருன் என்று தெரியவில்லை.

''தனந்தேடி யுண்ணுமல் புதைக்க வேண்டாம்,

தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்''

என்பது நீதிநூல். பொருள் தெளிவு, ஒரு செல்வந்தர் இல்லத்திற்கு மகான் ஒருவர் பிட்சைக்குப் போனர். அவர் அங்குச் சென்று பவதிப் பிட்சாம் தேஹி என்ருர். கேட்டதும் இல்லக்கிளத்தி உள்ளே இருந்து சீறி வெளியே வந்தாள். யாரு வீடு என்று உமக்குத் தெரியுமா என்ருள். ம... தெரியாது என்ருர். பெண்-எங்கள் முப்பாட்டனுர் வீடு என்ருள். ம... அவர் எங்கே என்ருர்? அவள் — அவர் போய்விட்டார் என்ருள். ம... பாட்டனுர் எங்கே என்ருர். அவள்— அவரும் போய்விட்டார் என்ருள். ம... தகப்பனுரை எங்கே என்ருர். அவள்—அவரும் போய்விட்டார் என்ருள். ம... பெண்மணி! இவ்வீட்டை யாரெல்லாம் என் வீடு என்றார்களோ அவர் அனைவரும் போய் விட்டாரே, நீயும் என் வீடு என்கிருயே நீயும் போகத்தானே போகிருய். இதுதானே உறுதி. இது தானே முடிபு. இதுதானே நியாயம். மீண்டும்.

மகான்—வீட்டை நோக்கி—வீடே! உன்னை யாரெல்லாம் எனது எனது என்று கூறினுர்களோ அவர்கள் இப்போது எங்கே? அவரனைவரும் போய்விட்டார்களே நீ ஏன் போகவில்லை என்ருர். வீடு-நான் இன்னும் எத்தனையோ பேர்களை அனுப்பி விட்டுப் போகப்போகிறேன் தெரியுமா என்றது மக்களே இதைச் சற்று ஊகித்து உணருங்கள்.

''வீடு இருக்க மாடுருக்க வேண்டும் பொருள் தானிருக்க,கூடிருக்க நீ போனக் கோலமென்னக்கோலமே'' பட்டினத்தார். உலகப் பொருள்களில் மமத்வம் வைப்பாயானுல் அவை உன்னைக் கைவிட்டுவிடும்.

அரசனை நம்பிப் புருஷனைக் கை விட்ட கதை போலாகும். எனவே என்றும் நிலையுள்ள இறைவனை நம்பு. கிருஷ்ணனோடு சம்பந்தம் வை. விவகாரம் சம்சாரத்தில் இருக்கட்டும். மமத்வம் வையாதே. பற்று வைத்தால் அற்று விழுவாய். ஆசையால் பாசவலையில் விழுவாய். வலைதான் கவலை.

ஒரு வீட்டில் எலித் தொல்லை நிரம்ப இருந்தது. வீட்டிலுள்ள பண்டங்களை நாசம் செய்து கொண்டிருந்தன. வீட்டில் தூங்கமுடியவில்லை. ஒருநாள் வீட்டுக்காரர் பார்த்தார். இதை ஒழித்துக் கட்டுவேன் என்று எண்ணி எலிக் கூட்டில் தேங்காய்ச்சில்லைத் தொங்க விட்டிருந்தார். இரவு நேரம் இரு எலிகள் எழுந்து வந்தன. கூர்ந்து நோக்கின. ஒன்று மதி உள்ளது. அது உள்ளே நுழைந்தோமானால் செத்துவிடுவோம் என்று வெளியே நின்று விட்டது. மற்றொரு எலி ஆசையால் உள்ளே நுழைந்து தேங்காய்ச் சில்லில் வாயை வைத்தது. படக்கென்று மூடி கீழே விழ எலியனார் உள்ளே அகப்பட்டுக் கொண்டார். வெளியே நின்ற எலி பற்றில்லாததால் வீடு திரும்பியது.

சம்சாரத்தில் பற்றற்றவன் தப்பி விட்டான். பற்று உற்றவன் அழிந்தான் என்பது இதன் பால் உணரப்படும். அற்றது பற்று உற்றது வீடு என்பது பழமொழி. கோபிகள் முற்றத் துறந்த முனிகள் அல்ல. பாலமுகுந்தனிடம் பற்றை வைத்துக் கொண்டு பரகதி அடைந்தனர்.

மீரா கூறுவதாவது — (மீராக்கோ கிரிதர மிலியாம் ஜக்மாரி சம்சார) இது மீரா பாயி சொன்னது. எனக்குக் கிரிதாரி கோபாலன் கிடைத்து விட்டான். இவ்வுலகத்தை உதைத்துத் தள்ளுகிறேன் என்றாள். "கனரஜஸ்வலம் — மாடுகள் கால்களிலிருந்து எழுந்த தூசி படிந்து மாதவன் மேனி காணப்பட்டது. நீலகுந்தலம் — தனது எழிலுக்காக ரோமங்களைக் காது கன்னம் வரை தொங்க விட்டுக் கொண்டிருந்தான். அது பார்ப்பவர் கண், மீன்களைப் பிடிப்பதற்கு வலை போலிருந்தது.

முகமழகு. முகத்தின் கூந்தலழகுஎன்பார்கள். முகுந்தன் இயல்பாக எழிலுடையவன், அவனது கூந்தலைப் பற்றிக் கேட்கவா வேண்டும். தரசயன்முகு:- கோபிகள் - மாயவா! நாங்கள் கோபம் கொள்வதற்குக் காரணம் நாங்களல்ல. நீ உன் முக அழகையும், முடி அழகையும், வேண்டுமென்றே கெடுக்கின்றாய். உன் முடியில் படிந்திருக்கும் தூசியைத் துடைக்கவுமா நேரமில்லை? பொய்தானே சொல்லுகிறாய். பொய் சொல்லாத புருஷோத்தமா! அடிக்கடி உன் ஸ்ரீமுகத்தைக் காட்டுகின்றாயே, போதும் போதும் புருஷோத்தம! நீ திரும்பித் திரும்பிக் காட்டினாலும் நாங்கள் பார்க்கமாட்டோம்.

மற்றொருத்தி — ஏண்டி! இவன் மதனமோகனம். ஸ்ரீராமன் என்றால் குனிந்த தலையை நிமிர்ந்து பார்க்க மாட்டான். சிவனோ கெம்பீர மகாபுருஷன். இவனோ விரஜ ராஜகுமாரன். யசோதையின் செல்வப் புதல்வன். சபலத் தன்மையுடையவன். இவனைப் பார்க்காது போனால் இருமு வான். இதற்குப் பிறகும் பாராது போனால் சிறிய கற்களை எடுத்து எறிவான்.

அதற்கும் பார்க்கவில்லை யென்றால் முந்தித் துணியை இழுப்பான். இந்நிலையில் உள்ளவன் கோவிந்தன் என்றாள். ''மாசிந: ஸ்மாம் வீரயச்சசி'' ஸ்மரணம் என்னும் சொல் லுக்கு இருபொருள். ஒன்று நினைப்பது மற்றொன்று காமன். மனிதனுக்கு ஆசை வருவதற்கு நினைப்புத் தான் காரணம். ஒரு பொருளை ஓயாது நினைக்கும் போது அதில் இச்சை யுண்டாகிறது. நினையாது போனால் ஆசை உண்டாகாது.

இறைவனை நினைந்தால் இறைவனிடத்தில் இச்சை உண்டாகும். உலகத்தை நினைத்தால் உலக இச்சை வரும். எதை நினைத்தால் நமக்கு நன்மையுண்டாகுமோ அதை நினைக்கவேண்டும். கோபிகள் கோவிந்தனை நினைக்கிறார்கள். மனிதனே! நீ நினைக்கிறாயா இல்லையா? நினைக்கிறேன்.

யாரை நினைக்கிறாய்? ஜகத்தையா, ஜனார்தனனையா? யாரை நினைக்கின்றாயோ அவர் எப்போது வருவார் எப்போது வருவார் என்று எதிர்பார்க்கச் சொல்லும் இதற்கு பிரதீட்சை என்று பெயர்.

காதலன் வர நேரமாகுமானுல் காதலி நினைப்பாள் நமக்கு இரு இறகு இருக்குமானுல் பறந்து இப்போதே அவன் முன்னே சென்று விடலாமே என்று சொல்லுவாள். இது மரபு. தலைவனோடு ஒன்றாகிறபோது நாம ரூபத்தை விட்டுவிடுவது நல்லது. ''நாம ரூபே விஹாய'' வேதாந்தம். நதிகள் கடலில் கவிழ்கின்றன. அப்பொழுது நாமத்தையும் ரூபத்தையும் விட்டுவிடுகின்றன. அதுபோல் நம் அனைவருக்கும் தலைவன் இறைவன் தான். அவனோடு கலக்கிறபோது சீவன் என்னும் நாமத்தையும் சீவத்தன்மையையும் விட்டுவிடவேண்டும் என்பது பொருள்.

''ஸ்மரோவாவ ஆசாயா: பூய;'' நினைப்பைப் பார்க்கிலும் ஆசை சிறந்ததென்பது பொருள். சேர்வதிலும், கூடுவதிலும் நினைப்புண்டாகும். அஞ்சை விட்டுப் பத்தைப் பிடிக்க வேண்டும் என்பது பழமொழி. பத்தை விட்டு நூறைப் பிடிக்க வேண்டும். நூறைப் போட்டு ஆயிரத்தைப் பிடிக்க வேண்டும். ஆயிரத்தை விட்டு இலக்ஷத்தைப் பிடிக்க வேண்டும். அத்தனையும் விட்டு இறைவனைப் பிடிக்க வேண்டும்.

வீர! எங்கள் மனத்தில் காமத்தை உண்டுபண்ணுகிருய். பகல்முழுதும் வனத்தில் திரிந்து வந்தால் துள்ளித் துடிப்பார்கள் என்று நினைக்கின்ருய்.

துடிப்பு உன்னைச் சேர்வதற்கு நிமித்தமாக இருக்கிறது. கங்கைக் கரையில் ஒரு மகான் இருந்தார். அவர் சித்தராக இருந்தார். அவர் பெயர் அச்சுதமுனி. அவரிடம் ஒருவர் வந்து ஒன்றைக் கேட்டார். மகாமுனிவரே!

அக்காலத்தில் யாரும் தபசு செய்தால் அதைக் கெடுப் பதற்கு மேல் உலகிலிருந்து தெய்வமாதுக்கள் வருவார்களே இப்போது ஏன் வருகிறதில்லை என்று கேட்டார்.

பதில்— இக்காலத்தில் உள்ள மனிதன் இங்குள்ள மோசமானப் பெண்களைக் கண்டு கெட்டுப் போகிற போது அங்குள்ள பெண்கள் எதற்கு என்றார். கோபிகளது மனதில் உலகவாசனை இல்லை. ஆனால் ஸ்ரீ கிருஷ்ண வாசனை இருக்கிறது. அவனைக் காண ஆவல். அவனைக் காண மருவுகிறார்கள். உன்னுடைய மனதில் யாருடைய இச்சை வருகிறது? நீ யாரை நினைக்கின்றாயோ அவரைப் பற்றி ஆசை வந்து கொண்டேயிருக்கும். உள்ளதை ஒளியாமல் சொல்

சிருஷ்டியின் மூலத்தில் காமம் இருந்தது. காமம் இல்லாதிருப்பின் அயன் இவ்வுலகைப் படைத்திருக்க முடியாது ' சோ அகாமயத பஹுஸ்யாம்'' ஈசனாகிய நான் அநேக வடிவமாக ஆவேன் என்று இறைவன் எண்ணினான். ஆசைப்பட்டான் என்பது பொருள். எனவே காமத்தை முற்றிலும் அகற்றுவது அரிது. மனதில் காமம் வரக்கூடாதென்பது முடியாத காரியம்.

ஒரு மகாத்மாவிற்கு ஆயுள் நூறு கழிந்தன. அவர் பூர்வ ஆஸ்ரமத்தில் பெரிய வியாபாரியாக இருந்தவர். அவருக்கு மரண நிலை நேர்ந்தது. அவருடைய நண்பன் வந்தான். உமக்கு என்ன ஆசையிருக்கிறது. இந்த மரண நிலையில் எதை விரும்புகிறீரென்று வினவினான். பதில் நான் முந்திய ஆஸ்ரமத்தில் பெரும் தங்க வியாபாரியாக இருந்தேன். மலைபோல தங்கத்தைக் குவிக்க வேண்டும் என்று ஆசை வருகிறது என்றான்.

இதனால் ஆசையை அறவே அகற்றுவது இயலாத விஷயம். ஒரு பெரியசெல்வந்தன். அவனுக்குப் பல இடங் களில் வியாபாரம் நடந்தது. வயசு முதிர்ந்தது. நோய்வாய்

பட்டு பாய் வாயில் கிடந்தார். மரணத்தை எதிர்நோக்கினுர். மனைவி புண்ணியசாலினி. அந்தணர்களை அழைத்து அரிய கீதாபாராயணத்தைச் செய்யச் சொன்னுள். ஏழ்நாள் இடைவிடாது பாராயணம் நடந்தேறியது. முடிவில் துணைவியார் - பிரியநாயகரே! இப்போது உங்கள் ஞாபகம் எங்கேயிருக்கிறது நீங்கள் என்ன எண்ணிக் கொண்டு இருக்கிறீர்கள் என்று கேட்டாள். கணவன் —பம்பாயில் உள்ள கடையில் இந்த ஆண்டு எவ்வளவு லாபம் என்று எண்ணிக் கொண்டு இருக்கிறேன் என்றார்.

''ஆசா பலவதி ராஜன் மா பாரதம்'' முதலையும் மூர்க்கனும் கொண்டதை விடான் என்பது பழமொழி. அது போல் ஆசையும் பிடித்தவனை விடாது. ஆதலின் காமத்தை விடுவது எளிதல்ல.

மனதில் காமவிருத்தி உண்டாகும். அதைப் பற்றிக் கவலைப்படாதே. உண்டாகட்டும். அக்காமவிருத்தியைக் கண்ணன் காலடியில் வை. அப்போது அது பக்தியாக மாறிவிடும். இவ்வழி கோபிகளால் தோற்றி வைத்த நவீன மார்க்கம். அன்பு மார்க்கத்தில் அன்பும் உண்டு, வம்பும் உண்டு. கணவனும் மனைவியும் கசிந்தும் இருப்பார்கள். கசந்தும் இருப்பார்கள். இஃது இயல்பு. அதுபோல் கோபிகள் சிலநேரம் கோபாலனைக் கடிந்தும் பேசுவார்கள், கசிந்தும் பேசுவார்கள். எப்போதும் இனிப்புக் கூடாது. இடைஇடையே காரமும் வேண்டும். கோபிகள் — முராரியை மனதில் வந்த வண்ணம் கூறிவிட்டோம். அதனுல் அவனுக்கு நம்பால் கோபம் வந்துவிட்டது. இனிக் கேசவனைச் சந்தோஷபடுத்துவோமா? வாருங்கள் என்ருர்கள்.

அச்சுதன் நாடியைத் தாங்குவோம். அவன் தாளடியை வணங்குவோம். வீழ்ந்து வீழ்ந்து வணங்குவோம். எங்கள் தவறுகளை மன்னித்து முகுந்தா! எங்கள் முன்னேவா என்று

சொல்லுவோம் என்றார்கள். நீ வரவில்லையென்றால் ஆவியைத் துறப்போம் என்றார்கள். அமரரேறே! தயநீய நிலையில் நின்று அழைக்கிறோம் என்றார்கள். கூவி அழைத்தார்கள். அழுதார்கள். தொழுதார்கள். ஆனால் அழுதால் அவனைப் பெறலாமே என்றபடி. போதும் தொழுவதும் நிந்தை தான்.

ஒரு கிராமத்தில் யாரும் எழுதப்படிக்கவில்லை. யாவரும் கல்வி அறிவில் சூன்யமாக இருந்தனர். ஒரே ஒரு பையன் எம்ஏ படித்து ஊருக்கு வந்தான். அவ்வூரில் ஒருவருக்குத் தந்தி வந்தது. அவ்வூரில் அவனைத் தவிர வேறு யாருக்கும் கல்வி அறிவு இல்லை தானே. அவனிடம் தந்தியைக் கொண்டு வாசிக்கச் சொன்னார்கள். அவன் அதை வாசித்துச் சொன்னான். எல்லோரும் அவனுக்குத் தந்தி வாசிக்கத் தெரியும் என்று புகழ்ந்தார்கள். இது அவனது நிந்தை தானே. எல்லாம் வாசிக்கத் தெரிந்தவனைத் தந்தி வாசிக்கத் தெரியும் என்றால் இழிவு தான். இறைவனைத் துதிப்பது அவனுக்காக அல்ல. நமது இதயத்தைச் சுத்தப் படுத்துவதற்காகத்தான். கோழிக்கு வேகம் கூரை மட்டுந்தான். பறவை பல. ஈயும் பறவைதான். கருடனும் பறவைதான். அந்தப் பறவைகளுக்குத் தக்கவாறு பறக்கும். அதுபோல் இறைவனைத் துதிப்பதற்குரிய வலிமை நமக்கில்லை.

தன்மதலைச் சொற்கேட்டு பெற்றோர் இன்புறுதுபோல் இறைவனும் தனது அன்பன் துதியைக்கேட்டு இன்புறுகிறான்.

"தன் மக்கள் மழலைச் சொற்கேளாதவர்" என்றார் வள்ளுவர். நீ, நான் நிரம்ப அன்பு செய்கிறேன் இறைவனிடத்தில். ஆனால் அவன் நம்மிடத்தில் அன்புசெய்கிறதில்லையென்று எண்ணினால் உனது அன்பு குறையும். ஏனெனின்? நீயே உனது அன்பை நிறைந்திருக்கிறதென்று எண்ணும் போது எங்ஙனம் நிறையும்? நிறையாதென்பது குறிப்பு.

பகவான் நம்மிடத்தில் இவ்வளவு அன்பு செலுத்தியும் நாம் அவனிடம் அணுவளவேனும் அன்பு செய்யவில்லையே என்று எண்ணினால் உனது அன்புப் பெருகும். மடையைத் திறந்து வைத்துவிட்டு நீர் பெருகவில்லையே' என்று எண்ணுவது மதிகீனம். கோபிகள் வேண்டும் என்று பகவானிடத்தில் ஆட்சேபனை செய்கிறார்கள். அவர்களுக்குக் கோபம் ஏன்வருகிறது? கண்ணன் கானகம் போகும்போது காலணியில்லாமல் போகிறான் என்றுதான்.

கண்மணியாகிய கண்ணன் காலணி இல்லாமல் கானகம் செல்வது எங்கள்கண்களில்காலைவைத்தமாதிரி இருக்கிறது. அவன் காலில் கல் தைப்பது எங்கள் இதயத்தில் தைப்பது போல் இருக்கிறது. கோபாலன் - நான் மிதியடி இல்லாமல் போனால் உங்களுக்கு ஏன் வருத்தம் உண்டாகிறது?

இதற்குப் பதில் ஒருகதை வருகிறது. ஒருமுறை யாதவநரேசன் அஸ்வமேத யாகஞ் செய்யவேண்டும் என எண்ணினான். நரேசன் அரசன். யக்ஞக் குதிரையின் பொருப்பை பிரத்யும்னன் ஏற்றுக் கொண்டான். அவன் திக்குவிஜயம் செய்தான். வனம் வனமாகத் திரிய ஆரம் பித்தான்

காலணி அணிந்தும் கல்லிலும் முள்ளிலும் சங்கடப் பட்டான். கோபிகள் தங்கள் பிரியன் காலில் தைப்பதைத் தங்கள் கண்களில் தைப்பதாகக் கருதுகிறார்கள்.

உண்மையாக ஒரும் போது = விசாரிக்கும் போது ஆண்டவன் அடிக்கமலம் அன்பர் உள்ளத்தில் தான் இருக்கிறது.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார். திருக்குறள்.

அன்பர் உள்ளக்கமலத்தில் வீற்றிருக்கும் மாட்சிமை பொருந்திய இறைவனடிக் கமலத்தைச் சேர்ந்தார் = பொருந்தினர்.

நிலமிசை - பூமியின் கண். நீடுவாழ்வார் நீண்டகாலம் வாழ்வார். நிலமிசை - முக்தி நிலத்தின் கண் பொருந்தி யிருப்பர் என்பது பொருள்.

கண்ணன் காலில் முள் தைக்கிற போது உள்ளம் நோவுகிறது. மாலைப் பொழுதில் வீடு திரும்பும் போது இதயத்தில் காமத்தை உண்டு பண்ணுகிறாய் என்கிறார்கள். இவ்விரு துயரங்களை அகற்ற வேண்டுவதற்கு இரு உபா யங்கள் செய்யவேண்டும்.

அவை- உன் பாதத்தை எங்கள் மார்பில் வை. இரண் டாவது உபாயம் உனது அதராமிருதத்தைக் கொடு என் றார்கள். இவ்வாறு செய்தால் எங்கள் தோஷம் நீங்கும். பகவானது பக்தியில் மூழ்கினால் சம்சாரத்திலிருந்து கரை யேறலாம். பகவானது கதாரசத்தில் மூழ்காதவன் சம்சாரத் தில் மூழ்குவான். முன்பக்கம் சாய்ந்தால் பின்பக்கம் உயரும். இதுதான் சம்சாரத்தின் முத்தியின் முறை. இங்கு இரு. அல்லது அங்கு இரு. நடுநாடனாக இருப்பது நல்லதல்ல.

வேம்பில் பிறந்து வேம்பில் வளர்ந்து வரும் புழுவிற்குக் கசப்புத்தான் பிரியமாய் இருக்கும். இனிப்புப் பிரியமாயிராது. கற்கண்டைச் சுவைத்தப் புழுவிற்குக் கசப்புப் பிரியமா யிராது. வேம்பு சம்சாரம். கற்கண்டு ஆத்மா.

மங்கையர்த் தங்கள் மார்பில் பாதத்தை வைக்கச் சொல்வதற்குக் காரணம், மனிதனது பாவம் மார்பில்தான் இருக்கிறது. அது நீங்குவதற்கு உபாயம் பகவானுடைய பாதஸ்பர்ஸம் பட வேண்டும். அது பட்டால் போகும்.

ஹரிஸ்பர்சனம் சர்வபாவமோசனம் என்பது பாக வதம். ''பிரணத தேகிநாம் பாபகர்ஷணம்'' என்பன பிரமாணமாகும். சாதகர்கள் தோஷத்தை நீக்கிக் குணத்தை சம்பாதிக்க வேண்டும். தோஷம்-காமம், கோபம், மோகம், துவேஷம், இவை நீக்கப்பட வேண்டும்.

குணங்கள் — சத்தியம், தவம், தயை, தருமம், நேர்மை, தூய்மை, முதலிய குணங்களைச் சம்பாதிக்க வேண்டும். ''சமதமாதி உபேதஸ்யாத்'' பிரமசூத்திரம். மேற்கூறிய குணங்களை அடைய வேண்டும் என்பது குறிப்பு,

அன்பனுடைய குற்றத்தை இறைவன் தானுகவே நீக்குகிறான். நந்தலால் நினதுபாதம் சகல ஆசைகளையும் பூர்த்தி செய்கின்றது. நற்குணம் அனைத்தும் நினதுபாதத்தில் இருக்கின்றன. ஆதலின் எங்கள் மார்பில் திருவடியை வைத்தால் எல்லாம் தானுய் வரும். நீ பெரிய வீட்டுப் பையன். உனக்குச் சங்கோச்சம்வரத்தான் செய்யும். இருப்பினும் இன்பம் தர இசயவேண்டும் என்றனர்.

பன்னிரெண்டாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 13

பிரணத காமதம் பத்ம ஜார்ச்சிதம்
தரணி மண்டனம் தியேயம் ஆபதி
சரண பங்கஜம் ஸந்த மஞ்ச தே
ரமண: ஸ்தநேஷு அர்ப்பயாதிஹந்

இறைவன் இவ்வுயிரைப் படைக்கும் போது இவ்வுயிருக்குத் துணையாக நான்குப் புருஷார்த்தத்தைப் படைத்தான். அவை- அறம். பொருள். இன்பம் வீடு. இவைகளுக்குப் புருஷார்த் தம் என்று பெயர். உண்மையில் மனிதனுக்குப் புருஷார்த்தம் ஒன்று தான். அது மோக்ஷம். அது சுகவடிவம். எல்லோரும் விரும்புவது சுகத்தைத் தான். அறஞ்செய்வதும், பொருளைத் தேடுவதும், தானம் பண்ணுவதும் இன்பத்திற்குத் தான். மனிதனுடைய இன்பம் நான்குப் பக்கங்களிலிருக்குமானல் பெற இயலாது. எனவே இன்பம் ஒரே இடத்திலிருக்க வேண்டும். அவர் பகவான். பகவான் ஒருவன். அவரிடத்தில் நான்குப் புருடார்த்தங்களும் இருக்கின்றன. 'பிரணதகாமதம்' என்பதால் காமபுருஷார்த்தமும். பத்மஜார்ச்சிதம் என்பதால் அர்த்தபுருஷார்த்தமும். தரணிமண்டனம் என்றதால் தரும புருஷார்த்தமும். சந்தமஞ்சதே என்றதால் மோட்ச புருஷார்த்தமும் கொள்ளத் தக்கன. இவை நான்கும் இறை வன் திருவடியில் இருக்கின்றன. எனவே இறைவன் திரு வடியை எய்தினோமானால் இவை நான்கையும் எளிதில் எய்தலாம். வீட்டிற்குள் தேன் இருக்கிற போது மலைக்கு ஏன் போவானேன்.

''தியேயம் ஆபதி'' விபத்துக் காலத்தில் ஹரியையோ ஹரனையோ நினைக்க வேண்டும். மருந்து அருந்திய பின்னர் நோய் போவது போல் ஹரியை நினைந்தால் அகில விபத்தும் போகும். அகிலம் = எல்லாம். உண்மையான அன்பன் — மோக்ஷத்தையும் விரும்புகிறதில்லை. பொருளையும் விரும்பு

கிறதில்லை. அவன் நின்னை மறவாதிருக்க வரம் தரல் வேண்டுமென்கிறுன். தேவாரம். ''கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வும்'' திருவாசகம். இந்திரன் வாழ்வும், அயன் வாழ்வும். மால் = மகாவிஷ்ணு வாழ்வும். கொள்ளேன் — விரும்பமாட்டேன் என்கிறார் மணிவாசகப் பெருமான். இதனுல் பக்தன் எதையும் விரும்பாமல் பக்தியொன்றையே விரும்புகிறுன். அன்பனுக்குப் பொன்னும் பொருளும் மண்ணுக்குச் சமானம். ஓடும் பொன்னையும் ஒக்கவே நோக்குவார் என்கின்றது பெரியபுராணம். ஆதிஹன்—பகவான் ஆதி வியாதிகளை யகற்றுகின்ருர். ஆதி = மனத்தில் உள்ள சந்தாபம். கவலை. உள்ளத்தில் கவலை மிகுதியாகும் பொழுது அது வியாதியாக வெடிக்கிறது. காரணச் சரீரத்தில் உபாதி, சூக்கும சரீரத்தில் ஆதி, தூல சரீரத்தில் வியாதி இவ்வாறு மூன்று தேகத்திலும் இம்மூன்றும் உபாதியில் உண்டாகின்றன. பரமாத்மாவிற்கு வடிவம் நிருபாதி.

ஆதிஹன் — மனதில் உள்ள சிந்தை, கவலை, சோகம் முதலியவைகளை நீக்குபவன் இறைவன் ஒருவனே. அவனிடத்தில் நீ அன்பு செய்யவில்லையெனில் அவை நீங்கவே மாட்டா. ஜீவன் சம்சாரத்தை நோக்கி வரும்போது இறைவனிடத்தில் கைக் கூப்பி வேண்டினுன். ஏ பிரபோ! நான் உலகத்திலேயே இருந்து விடக் கூடாது. மீண்டும் உன் திருவடியில் வந்து சேர்வதற்குரிய உபாயத்தை அவசியம் நீ செய்யவேண்டும் என்று பிரார்த்தனைச்செய்தான். பகவான் செவி சாய்த்தார். தயாமய பகவான் கூர்மையான மதியை அளித்து ஜீவர்களுடைய பிராரப்த கர்மத்தில் துன்பத்தை வைத்தான். உலகப் பொருள்களில் அதிருப்தியையும் வைத்தான்.

மக்களே! என்னை வந்து எது வரை சேரமாட்டீர்களோ அது வரை இவ்வையகத்தில் நீங்கள் எங்குச் சென்றாலும், மனிதனுகப் பிறந்தாலும், தனவானுக இருந்தாலும், உயர்ந்த

பதவியை வகித்தாலும், சிற்றரசன் பேரரசனானாலும் நலம் உண்டாகப் போகிறதில்லை. மேலுலகஞ் சென்றாலும் அங்குள்ள பொருளும் உனக்குச் சுகத்தைத் தரமாட்டாது. உண்மையாக ஓர்ந்துக் கூர்ந்து தேர்ந்து தெளியும் போது வஸ்த்துவில் இன்பமோ துன்பமோ இல்லை. இன்ப துன்பம் மனதில் உண்டாகின்றன. மானம் அபமானம், புணர்தல், பிரிதல், பகை உறவு எல்லாம் கனவு போல மனதில் தோன்றுகின்றன. மறைகின்றன. பகவான் மனதைப் பறிக்கிற போது அதில் இருக்கும் அவகுணங்கள் அனைத்தும் ஒழிகின்றன. மல்ல பூபிகா நியாயம் போல இறைவன் அனைத்து கிலேசங்களையும் போக்குகின்றனர். மல்லபூபிகாநியாயம் ஒரு தடியில் அப்பம் கோக்கப்பட்டிருந்தது. பல பறவைகள் கூடி அத்தடியைத் தூக்கிக் கொண்டு போய்விட்டன. தடி போன பின்னர் அப்பம் போயிருக்குமா வென்று கேட்க வேண்டியதில்லை. அது போல் பகவான் மனதை யெடுத்துச் செல்லும் போது துன்பங்கள் தானாகவே சென்று விடும்.

பகவானுடைய சரணம் ஜீவன் எண்ணத்தை முற்றிலும் நிறைவேற்றி வைக்கும் காமதேனுக்குச் சமானம். சூதுவாது வஞ்சனைகளோடு கூடினவனும் பகவானுடைய முன்னே வந்ததும் அத்தனை அவகுணங்களும் இரவின் இருளைப் போல நீங்கி விடும். இதை இராமனும் சொன்னான். இதற்கு ஒரு இதிஹாசம்—

எழுபது வெள்ளம் வானர சேனைகளுடன் இராமன் இராமேசுவரத்தில் கந்தமாதனமலையில் தங்கி இருந்தான். இதற்குள் நான்கு நண்பர்களுடன் விபிஷணன் வந்து ஸ்ரீராமனுடைய திருவடியில் வந்து விழுந்தான். ஐயனே! இப்பையனைத் தடுத்தாள் கொள்ளும் என்றான். அடியில் விழுந்து தொழும் விபிஷணனை யிருகரத்தால் ஆரியன் தூக்கினான். மார்பில் அணைத்து அபயம் அளித்தருள் என்றான். இதைக் கேட்ட இளையவனும், சுக்ரீவனும் பிறரும் தடுத்தனர்.

இராமன் காரணம் வினவினுன். இராமா! இவன் அரக்கன். அக்கொடிய இராவணனுடைய தம்பி. உளவு அறிய இங்கு வந்திருக்கிறான். அவுணர்களை நம்பக் கூடாது என்றுர்கள். ஆரியன் அனுமானை நோக்கினுன். ஆஞ்சநேயர் சிரித்தார். விமலன் விபிஷணனை அழைத்தான். ''பரத ஜிமிபாய்'' என்று அவனை தட்டினுன். பரத ஜிமிபாய் = பரதனுக்குச் சமமான நீ தம்பி என்று சொன்னுன். துளசி இராமாயணம். சுக்ரீவனுக்கும் இளையவனுக்கும் இவ்வார்த்தை ருசிக்கவில்லை. இளையவன் = இலக்ஷ்மணன். அப்போது ஆரியன் அருளியதாவது—

சன்முகஹோ ஜீவமோஹி ஜபஹிம்

ஜன்மகோடி அக நாசவும் தபஹிம் து. இரா.

என்னுடைய முன்நிலையில் கோடி பாவத்தோடு கூடிய ஜீவன் வந்தாலும், அவனுடைய பாவ சமுதாயம் பாவகத்தில் விழுந்த பஞ்சென எரிந்து சாம்பலாய்ப் போகும் என்றுன் இராமன். பாவகம் = நெருப்பு. இதைக் கேட்டு அனைவரும் ஆரவாரத்தோடுக் கரகோசம் செய்தனர். தன்னைத் தஞ்சம் புகுந்தவர்களை இரக்ஷிப்பது இறைவனுடைய தொழில். அதனுல் அவனுக்குச் சரணுகத வத்ஸலன் என்று பெயர். மேலும் ஸ்ரீ ராமன் சொன்னது—

ஸகிருதேவ பிரபந்நாய தவாஸ்மீதி யாசதே 1

அபயம்சர்வ பூதேப்யோ ததாம்யேதத் விரதம் மம 11

பாகவதம். எவன் ஒருவன் சகலத்தையும் துறந்து நீயே சரணம் என்று என்னை விரும்புகிருனே அவனை எல்லா உயிர்களிலிருந்தும் இரக்ஷிக்கிறேன் என்று வாசுதேவன் கூறினான். அவனை யண்டியவர்களைக் காப்பது அவனது கடமை. அவன் பரமாத்மா. ''நடுங்கினர்க் கபயம் நல்கும் அதனினும் நல்லதுண்டோ'' கம்பர் ராமாயணம். பொருள் தெளிவு.

நமது ஆசையை நிறைவேற்றுபவர்கள் அநேகருளர் ஆசை எவ்விதத்திலும் யாவராலும் நிறைவேற்றலாம். ஆனால் நமது ஆசையை யாவராலும் அகற்றமுடியாது. இறைவன் நமது எண்ணத்தையும் பூர்த்தி செய்கிறான் ஆசையையும் அகற்றுகிறான். கோபிகள் உத்தவரிடங் கூறினார்கள் — உத்தவரே! நீர் எங்களுக்கு உபதேசம் செய்கிறீர். ஆகாசத்தைப் பஜனை செய்யுங்களென்று. பகவான் இல்லையானால் ஆகாசம் எங்கிருந்து வரஇயலும்? பகவான் இல்லையானால் சம்சாரம் சூன்யந்தானே. ஒளி இல்லாத வீடு இருள் மயந்தானே. பழமிருக்கிறது ஆனால் இரசமில்லை. பழத்திற்கு மரியாதை என்னை? இரசந்தானே எல்லாமிருந்தும் இறைவன் இல்லை என்றால். பிராணன் இல்லாத உடல் போலாகும்.

அங்ஙனமாயின் இறைவன் காமதேனு, சிந்தாமணி, கற்பகத்தருவா? இல்லை. இல்லவே இல்லை. இவைகளுக்குத் தோன்றும் இடம் இறைவன். இவைகள் ஜடம், இறைவன் சேதனம். எந்த ஜீவன் தயாபர இறைவனை வேண்டினானோ அவன் இந்த ஜன்மத்தில் காமதேனுவாகவும், சிந்தாமணியாகவும், கற்பகத்தருவாகவும் ஆனான். தெய்வத் தன்மை வாய்ந்ததால் இம்மூன்றும் மக்கள் எண்ணத்தைப் பூர்த்தி செய்கின்றன. பகவான் தன்னை வழிபடுகின்ற ஜீவனைத் தன்மயமாகச் செய்கிறார். குழவி தன்னை நினைக்கின்ற புழுவைத் தன் வடிவமாக்குவது போல் தயாநிதியான பகவான் தன்னைத் தியானிக்கும் மனிதனைத் தன் வடிவமாக ஆக்குகிறார்

பகவத் தியானத்தினால் வரும் ஆனந்தத்தை அபிமானிகளால் அனுபவிக்கமுடியாது. பின்னர் யாரால் அனுபவிக்க முடியும்? பிரணத தேஹி நாம்— எவனொருவன் தனது அபிமானத்தைப் பலி கொடுத்து ஜனார்தனன் முன் தலைகுனிகிறானோ அவனால் அனுபவிக்க முடியும். ''ஏறிடும் கைகள் இறங்கிடுந் தீவினை'' பட்டினத்தார். இருகரங்களும் சென்னி

மீது ஏறும் பொழுது தீயவினைகள் சென்னியிலிருந்து இறங்கிடும். சென்னி = சிரசு.

கற்பகவிருக்ஷம், காமதேனு, சிந்தாமணி இவை மூன்றும் பகவானுக்கு உவமானமாகக் கவிகள் கூறுகின்றனர். ''உம்பர்தரு தேனு மணிக் கிசைவாகி'' திருப்புகழ். உம்பர்தரு - கற்பகமரம். இவை மூன்றும் தெய்வத்தன்மை வாய்ந்த போதினும் ஜடப்பொருள். அவைகளுக்கு விவேகங் கிடையாது. யாருக்கு எப்போது எதைக் கொடுக்க வேண்டும் எதைக் கொடுக்கக் கூடாது என்னும் உணர்வு அவைகளுக்கு இல்லை. ஒரு வழிப்போக்கன் நெடுந்தூரஞ் சென்று களைப்புற்று ஒரு மரத்தடியில் அமர்ந்தான். அம்மரம் கற்பக மரமென்று அவனுக்குத் தெரியாது. இந்நேரம் தென்றல் காற்று அடித்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணினான். காற்று வீசியது. படுக்கை வந்தால் நல்லது என்று எண்ணினான். படுக்கை வந்தது. அறுசுவையோடு அடிசில் வந்தால் அருந்தலாமே யென்றான். அடிசில். உணவு அதுவும் வந்தது. புலி வந்தால் என் செய்வது என்றான். புலியும் வந்தது. அவனைக் கொன்று தின்றது. காரணம் கற்பகமரத்திற்கு உணர்வில்லை. ஆனால் பகவான் உணர்வு வடிவினன். யாருக்கு எதைக் கொடுக்க வேண்டும் என்று தெரிந்து கொடுப்பவர். எனவே கற்பகமரம், காமதேனு, சிந்தாமணி இவைகளை விட, பகவான் மிகச் சிறந்தவர்.

பகவானுடைய திருவடியில் முடியை வைத்து வணங்குகிற போது யாருக்குத்தான் நன்மையுண்டாகாது. எல்லாருக்கும் உண்டாகும் என்பது இனிதுபுலனும். குழந்தை துணியைப் பிடித்து இழுக்கிறது. தாய் சும்மா இருக்கிறாள். பண்டத்தைத் தூக்கியெறிகிறது அம்மா சும்மா இருக்கிறாள். நெருப்பைப் பிடிக்கப் போகின்றது. அன்னைத் தடுக்கிறாள். அதுபோல் அன்பனுக்கு அனிஷ்டம் வருகிறபோது ஆண்டவன் அதைத் தடுக்கிறான்.

பாண்டவர்களுடைய வனவாசமும். ஒரு வருஷம் அஞ்ஞாதவாசமும் முடிந்தும் துரியோதனன்நாட்டைத்திருப்பி கொடுக்க மறுத்து விட்டான். அதனுல் (யுத்தம்) போர் முள ஆரம்பித்து விட்டது. இங்ஙனமிருப்ப துரியோதனனும், அருஜுனனும் ஒரே நாளில் கிருஷ்ணமூர்த்தியின் உதவியை நாடித் துவாரகைக்குச் சென்றனர். காண்டிபன் கண்ணபிரானுக்கு மைத்துனன் வேண்டும். காரணம் கேசவனுடைய தங்கையைப் பார்த்திபன் மணந்திருக்கிருன். அம்முறையாக அருஜுனனுக்கும் அச்சுதனுக்கும் மைத்துனன் முறை வேண்டும். சகோதரி சுபத்திரை. பரந்தாபனுக்குப் பத்தினி.

மற்ருெரு பக்கம் துரியோதனனுடைய மகள் கிருஷ்ணன் மகன் சாம்பவானே மணந்திருக்கிருள். துரியோதனனுடைய மகள் லக்ஷ்மணு. இவ்வாறு இருவருக்கும் சம்பந்தம் உண்டு.இதனுல் இருவரும் பகவானிடத்தில் உதவியைநாடிச் சென்ருர்கள். துவாரகையில் தங்கக் கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தார். துரியோதனன் முதலில் சென்ருன். மிகுந்த அபிமானியானதால் அவர் தலைப்பக்கம் இருந்த நார்க் காலியில் அமர்ந்து கொண்டான். பால்குணன் சற்று நேரம் கழித்து வந்தான். அண்ணன் தலைமாட்டில் இருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்து தான் பாதத்தில் அமர்ந்தான். இயல்பாக இறைவன் எழுந்து முன்னே இருந்த முகுந்தப் பிரியன் அருஜுனனைப் பார்த்தார். கருணை மழையை இரு கண்களால் சொரிந்தார். காண்டிவா! வந்ததற்குக் காரணம் யாது என வாசுதேவன் வினவினுன். விஜயன் திருமாலே எனக்குத் தேர் ஓட்ட வேண்டு மென்ருன். அவன் பணிவைக் கண்டு அச்சுதன் ஆகட்டும் என்ருன். துரியோதனன் ஆணவத்தால் அவன் மாயையாகிய படையைமட்டும் பெற்று நகரந் திரும்பினுன். பணிந்தவனுக்குப் பகவான் கிடைத்தார். வணங்காமுடி மன்னன் துரியோதனன் மாயையப் பெற்று மடிந்தான்.

இதனுல் பண்பும் பணிவும் அன்பனிடம் அவசியம் இருக்க வேண்டு மென்பதுத் துணிபு. கோபிகளிடத்தில் நற் குணங்கள் அனைத்தும் இருந்தன. அபிமானிகளுடைய எண்ணத்தை இறைவனுலும் நிறைவேற்ற முடியாது. பிறகு மனிதனுல் எவ்வாறு முடியும்?

பத்மஜார்ச்சிதம் - பத்மஜன் = பிரஹ்மதேவன்: அயனும் அச்சுதன் திருவடியை அயராது அர்ச்சித்து வந்தான். மலரவன் மாயவனை அனுதினம் வேண்டி உய்யும்பொருட்டுத் திருமாலை அழைத்து வந்தான்.

முராரே! உலகம் உய்யும் பொருட்டுப் பூமியில் வந்த மலரடி எங்கள் பிரேம தருமத்தையும் இரக்ஷிக்கத்தானே செய்யும். அதுதானே முறை. 'பிரணதகாமதம்'' வணங்கு வோருக்கு வரமளிக்கும் வள்ளலே!எங்கள் மனத்தில் இருக்கும் காமத்தைப் பூர்த்திச் செய்வது நின் கடமையல்லவா? நாள் முழுவதும் பிரஹ்மா, இந்திரன், மீத்திரன், வருணன், குபேரன் முதலியோர் உன்னேடு திரிகிருர்கள். மாலை நேரத்தில் நினது மலரடியை வணங்கிவிட்டு அவரவர்கள் ஊருக்குச் சென்றுவிடுகிருர்கள். ஊரு = உலகம்.

தரணிமண்டனம் — மாயவா! உன் தூயத் திருவடி தரணிக்கு = பூமிக்கு மண்டனம். அலங்காரம். மண்ணைப் பூசிப்பார் மங்கையைப் பூட்டிப்பார் என்பது பழமொழி. கற்புடைய மங்கைக்குக் கணவன்தான் அணிகலம். இத் தரணிக்கு உன்தாள்தான் அலங்காரம். கணவன் இறந்ததும் மனைவி விதவையாகி விடுகிருள். புருஷோத்தமன் திருவடி யிப்புவியில் இல்லையானால் இந்நிலமும் குபாக்யவதியாகி விடும். எனவே நிலத்தில் வைக்கும் திருவடியை எங்கள் மார்பில் வை. பகவானுடைய பக்திதான் பாருக்குப் பூஷணம். பார் - பூமி பூஷணம் = அலங்காரம்.

எங்கு ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிப்படுகிறதோ அங்கு பூமியின் சௌந்தரியம் பெருகுகிறது. பக்தி மய பகவான் பாதத்தை எடுத்துவிட்டால் இந்நிலம் பாலைவனமாகி விடும். ஒருகோபி மற்றொரு கோபியைப் பார்த்துத் தோழியே! பிருந்தாவனத்திற்கு அழகு ஏன் பெருகுகிறது? பதில் — பிரேமமோகன் பாதம்பட்டதால், தேவகிநந்தனன் திருவடி சுயம் அழகுக்கு நிலயம். புடவையில் பலவண்ணங்களைத் தீட்டுவதுபோல் பகவானுடையப் பாதம்பட்ட இடம் எல்லாம் பலவண்ணங்களாகக் காட்சியளிக்கின்றன.

தேயம்சதா — சதா = எப்போதும் திருமாலுடைய மலரடி தேயம் - தியானஞ் செய்ய வேண்டும். நீங்கள் நினைக்கிறீர்களா, நினைக்கவில்லையா? நினைத்தால் யாரை நினைக்கிறீர்கள்? யாரையும் நினையுங்கள். ஆனால் நமது பவப்பிணி நீங்க வேண்டும். பவம் = சம்சாரம். பிணி = பிறப்பு. இறைவனடியைச் சேர்ந்தவர் பிறவிப் பெருங்கடலை நீந்துவர். ஆகையால் அவரடியை நினைக்க வேண்டும். அத்திருவடியை நினைப்பவர் இன்னலை நீக்கி நல்லவையெல் லாந்தரும். ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அளிப்பது ஹரி யின் சரணகமலம்.

கோவிந்தன் மலரடியில் கோத்தீர்த்தங்கள் - பூமியில் உள்ள தீர்த்தங்கள் குவிந்து இருக்கின்றன. "ஆத்மதீர்த்தம் பரந்தீர்த்தம் அந்நியதீர்த்தம் நிரர்த்தகம்" சூதசம்ஹிதை. சகலத் தீர்த்தங்களும் நன்மையை நல்கின்றன. ஆத்மத்தீர்த் தம் முக்தியைத் தருகின்றது. ஆத்மத்தீர்த்தம் - ஞானம்.

பகவானுடைய பாவனத் திருவடி பிரபஞ்சம் என்னும் பெரிய வேலையைக் கடப்பதற்கு நிலையான கப்பல். வேலை = கடல். அத்தகையப் பாதத்திற்கு வந்தனம் செய்கின்றேன். உன்னுடைய மனதில் துக்கம் வருகிறதா? யாருக்காக வருகிறது? யாருக்காக வருகிறதோ அவர்களையும், அவை களையும் உன்முன்னே சேகரித்து வைக்க உன்னால் இயலுமா?

இயலாது. அங்ஙனமாயின் அவர்களைப்பற்றி வருகின்ற துன்பம் ஒருபோதும் நீங்கப் போகிறதில்லை. மனிதனையோ, பொருளையோ பற்றினதால் துன்பம் தொலைகிறதில்லை, துயரம் இறைவன் திருவடியைப் பற்றினால் நீங்கும். தியேயம் ஆபதி:- ஆபத்துக் காலத்தில் விபத்து நேரும் வேளையில் மக்களைக் காப்பது மாலின் திருவடிதான். மால் - திருமால். ஸ்ரீ கிருஷ்ணன் திருவடியில் சித்தத்தை வைக்கும்போது உச்சிப்பொழுது ஆதவன் ஒளியால் ஓடும் இருளைப்போல் ஆபத்துத் தானாகவே நீங்கிப்போகும். ஆதவன் = சூரியன். "ஹரிஸ்மிருதி: சர்வவிபத்மோட்சனம். பாகவதம். பகவானை எண்ணினால் அவ் எண்ணம் நமது விபத்துக்களை நாசம் செய்கின்றது. பாதத்தியானம் — தியான மார்க்கத்தில் பாதத்திற்கு மிகமகத்துவம் உண்டு. ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடியில் என்னென்னச் சின்னம் இருக்கின்றன என்று எண்ணிப் பார்த்தால் அதில் சென்னிறங் காணப்படும். தாமரை, சங்கு, வஜ்ரம், அங்குசம், சக்ரம் இவைகள் காணப்படும். உலகத்தைப் பார்த்துப் பார்த்து என்னத்தைக் கண்டாய்? புதுமை ஒன்றுமில்லை. உண்டதையே உண்டு உடுத்தியதையே உடுத்தி, கண்டதையே கண்டு, களித்த தையே களித்து, வருகின்றாயே இதனால் என்னப் பயனையடைந்தாய். சற்று இறைவன் திருவடியை உற்று நோக்கிப் பார். கண்ணுக்கு ஒளியும் கருத்துக்கு அளியும் உண்டாகும். அளி = இன்பம்.

இறைவனைக் கருதும்போது உனது மனதில் துன்பமிருந்ததா? சொல் என்ன இருந்தது? இன்பந்தானே, பகவானுடைய பாதமும் பாரில் உள்ள சந்தாபமும் இணைந்து இருக்கமாட்டா. இருளும் ஒளியும் சேர்ந்து இருக்குமா? இராதுதானே. துன்பத்திற்குக் காரணம் எதுஎன்று நினைத்தாயா? அபிமானந்தான் காரணம். நான் பெரியவன் என்ற அபிமானம் உண்டாகிறது. எல்லாத் துன்பங்களும் அபி

மானத்தைப் பற்றித்தான் இருக்கின்றன. நான் பெரியவன் என்று அபிமானம் வருமானுல் உனக்குப் பெரியவனைப்பார். அப்போது உன்னுடைய அபிமானம் குறையும். உலகத்தில் எல்லோருக்கும் பெரியவன் இறைவன்தான். அவனைப்பார். அவனைப்பார்த்தால் உனது அபிமானம் சிறிதளவேனும் நில்லாது. நிற்கமாட்டாதென்பதுக் கருத்து.

சந்தமம் - பகவானுடைய ஸ்ரீ சரணம், சந்தமம் சகல அமைதிக்கும் நிலையமான சாந்தியைத் தரத் தக்கது. பிரிய மான உணவைப் பெற்றும் அமைதியைப் பெற இயலாது. விரும்பிய பொருளைப்பெற்றும் அமைதியை அடையமுடியாது. பெண்டிர் பிள்ளைகள் வீடுவாசல் இவைகளை அடைந்தும் சாந்தியை மேவமுடியாது. ஒரேஉபாயம் இறைவனுடைய அடிக்கமலத்தைச் சென்று இறைஞ்சினால் அமைதியை அனுதினம் பெறலாம். சந்தமம் சாந்தி. அமைதி, மோட்சம் எல்லாம் பரியாயங்கள். ஒன்று என்பது பொருள்.

மோட்சம் பகவானுக்கு அன்னியமில்லை. பகவத் சொரூபமே. பகவான் கருடத்வஜன் பெயர்தான் மோட்சம்.

எனவேதான் விஷ்ணுதொண்டர்கள் அவன் திருவடி யைப் பற்றுகின்றனர் எவன் இறைவனை நினைக்கிறதில் லையோ அவன் மனதில் சங்கையுண்டாகும். தியானம் பண்ணிஞல் நினைத்தக் காரியம் முற்றுப்பெறுமா பெருதா என்று அன்பனுக்கு அவ்வாறு சந்தேகம் உண்டாகாது. அவனது அகத்தில் அகமில்லை. அகம் = உள்ளம். இரண் டாவது அகம் பாவம். அன்பன் பகவானிடத்தில் உலக இன் பத்தை விரும்புகிறதில்லை. அன்பன் அனுதினம் ஆண்டவ னிடத்தில் அவன் அருளையே விரும்புகிருன். இறைவனருள் இறைவனுக்கும் மேன்பட்டது.

பகவான் தானம் பண்ணுகிருர், தயை செய்கிருர், தரி சனங்கொடுக்கிருர், இரண்டொருவார்த்தையைப் பேசுகிருர்.

பிறகு மறைந்து விடுகிறார். அவனது அருள் அன்பன் இதயத்தில் உறைந்து விடுகிறது. அன்பனேடு அன்பு கலந்து ஒன்றிவிடுகிறது. அன்பிற்கு ஆண்டவனும் கட்டுண்டிருக் கிருன். அன்பு பகவானைத்தாஸனுகஆக்குகிறது. தாசனுகவும், சுவாமியாகவும், நண்பனுகவும், புத்திரனுகவும், பதியாகவும், சாரதியாகவும், சேவகநாகவும் செய்கின்றது. இன்றைக் குள்ள அன்பனுடைய வார்த்தையும் புதுமையாகத் தான் இருக்கிறது. விவகாரத்தில், வியாபாரத்தில், பவனத்தில் பதவியில், அதிகாரத்தில் புத்தியைச் சிதற விட்டிருக்கிருன். ஒரு தடவை. இருதடவை இறைவன் நாமத்தைச் சொல்லி விட்டுப் பாவி பரமாத்மா இன்னும் வரவில்லையே என்று வருந்துகிருன். பகவான் கொடுத்த பொருளையடைந்து அவனை நினையாமல் சம்சாரத்தை நினைக்கின்ற நீ பாவியா? பகவான் பாவியா? அருஜுனன்பகவானைச் சாரதி ஆக்கினுன். தேவகியும், யசோதையும் மகனுகஆக்கினுர்கள். கோபிகள் பதியாக்கினுர்கள். உத்தவர் நண்பனாக்கினார். துளசிதா சரைக் காப்பதற்கு வில்லைத் தாங்கிக் கொண்டு காவலனுக ஆனுர். இத்தகைய இறைவனை மறந்து அவனைப் பாவியென் கிருேமே நாம் பாவிகளா? இறைவன் பாவியா?

இறைவனுக்காக இவ்வளவு துன்பப் பட்டும் பாவி யென்று பகர்ந்ததேயில்லை. அதனுல் தான் கோபிகள் வைணவ உலகத்தில் சிறந்து திகழ்ந்தார்கள். கோபிகள்— வாசுதேவா! வா. கிருஷ்ணன் — வந்து என்ன செய்ய? கோபிகள் — ஆதிஹன் எங்கள் மனக் கவலையை அகற்று. மதுசூதனு! மாயவா! மங்கையை மருவவிடலாமா மாதவா! நின் மலரடியை எங்கள் மார்பில் வை. மாசிலாமணிவண்ணு! உன் ஆசிலா அடியை வை. மாசு, ஆசு = குற்றம்.

ஜனுர்தன! உன் சரண பங்கஜத்தை யெங்கள் நெஞ்சில் வை. நாங்கள் கேள்வியுற்றேம். கிருஷ்ணன் - என்ன கேள்வி யுற்றீர்கள்? ஹிரிஷிகேச! இருடிகள் அனைவரும் உனது

மலரடியைத் தங்கள் இதயத்தில் வைத்து தியானம் பண்ணு கிறார்களாம். ஓஹோ! என்ன விந்தை! கோபிகள்-கோபாலா! நினது கற்பிதத்திருவடியைத் தியானிக்கும்முனிவர்களுடைய சோகம், மோகம் கவலை. துயரம் இவைகளைப் பொய்யான நினது அடிக்கமலம் அகற்றுமானால் நீ உனது திருவடியை எங்கள் நெஞ்சில் நிறுத்தும் போது கேட்கவேண்டுமா? தயாநிதே! முராரே! எங்களுக்கு உன் பொய்யான பாதம் வேண்டாம். மெய்யான திருவடி வேண்டும்.

''யஸ்யாம் பூமௌ நிபதே: தாம் ஆலப்ய விமுச்யதே'' என்பது ஒரு நியாயம். தரையில் விழுந்தவன் தரையைப் பற்றித் தானே யெழுந்திரிக்கமுடியும். அதுபோல சம்சாரத் தில் விழுந்தவன் இறைவனைப் பற்றித்தான் கரையேற முடியும். அரை நிமிஷம் பகவானை நினைக்கிறார்கள். மீதி 24 மணி நேரமும் சம்சாரத்தை நினைக்கிறார்கள். அரை நிமிஷம் இறைவனை நினைத்து விட்டு இறைவன் நமக்கு அதைத் தரவில்லையே இதைத் தரவில்லையே யென்று வருந்து கின்றார்கள். இத்தகைய மனிதர்களை யென்ன சொல்வது?

வெளியில் தங்களைப் பெரிய பக்தர்களாகவே வேடங் களால் காட்டுகிறார்கள். பலூனைப் போல் உள்ளே யொன்று மிருக்கிறதில்லை. பகவானுக்கு வெளிவேடம் தேவையில்லை, உள்ளத்திலுள்ள பண்புகள் தேவை. கள்ளமில்லாத பக்தி கடவுளுக்குத் தேவை. கள்ளம் மனிதனைப் பள்ளத்தில் தள்ளு கின்றது. பள்ளம் படுகுழி. துன்பம் என்பது துணிபு. எவனுக்கு தேகத்தில் யான் எனது என்னும் பற்று இல்லையோ அவன் (நிற்குண) அருவக் கடவுளை வழிபடுதற்குரியவன். எவனுக்கு தேகத்தில் அழகு. ஆடை அணிகலங்களில் அபிமானம் அடியில் இருந்து முடிவரை ஒவ்வொரு உறுப்புக் களிலும் நிறைந்திருக்கிறதோ அவன் அருவத்தில் எங்ஙனம் நிலைத்திருக்கமுடியும். அவனுக்குத் தான் இறைவனும் தேகத்தோடு (உருவமாக) வந்து அபிமானத்திலிருந்தும்

அபிமானத்திற்கு இடமாகிய உடம்பிலிருந்தும் அவனைத் தூக்கவேண்டுமென்றும் வருகிறார். இக்காயம் உனக்குச் சொந்தமல்ல, நான் தான் உனக்குச் சொந்தமென்று உணர வேண்டும் என்கிறார்.

இத்தகைய மனிதனுக்கு இறைவன் தான் படிப்புக் கற்பிக்க வேண்டும். கோபிகள் — புருஷோத்தம! உனது காலடியைக் கல்லிலும் முள்ளிலும் வைக்காதே. ஸ்ரீஹரி — பின்னை? எங்கே வைப்பது. கோபிகள் — எங்கள் மார்பில் வை. எந்தப் பொருளைப் பார்த்து, கேட்டு இரசித்தாலும் அந்த இரசம் உதயமாவது இதயத்தில் தானே? ஸ்ரீகிருஷ்ணப் பிரேமக் கோபிகள் இதயத்தில் உதயமாகிறது. கோபாலன் காலணி அணியாமல் கானகத்திற்குச் செல்வது காரிகைகளுக்கு மனதில் வேதனையுண்டாகி மாதா யசோதையிடம் சென்று மறியல் போராட்டம் செய்தார்கள். அவர்கள் மறியலால் போக்குவரத்திற்குப் பெருந்தடைகள் நேர்ந்தன.

மாதா யசோதை — மடந்தையர்களே! மறியலுக்குக் காரணம்யாது என வினவினள். மாதர்கள்—தேவி; செல்ல மகன் ஸ்ரீகிருஷ்ணன் காலணியில்லாமல் கானகத்தில் கல்லிலும் முள்ளிலும் செல்லுகின்றானே உனக்கு இரக்கமில்லையா? அதற்காக மறியல் செய்கிறோம் என்றார்கள். யசோதை சிரித்துக் கொண்டு ஏண்டி! என் மகன் காலணியில்லாமல் கானகத்திற்குப் போனால் உங்களுக்கு என்ன வென்றாள். கோபிகள் — அவன் கல்லில் காலை வைக்கும் போது எங்கள் கண்ணில் முள் தைத்த மாதிரி யிருக்கிறதே யென்றார்கள். ஓஹோ! மாதா யசோதை - மணிவண்ணா! கோபாலா! என்றாள் கிருஷ்ணன் - என்னம்மா வென்று ஓடி வந்தான் கிருஷ்ணன். என்ன? இவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கேள். என்ன சொல்கிறார்கள்? இவர்கள் கிருஷ்ணன் வனத்திற்குப் போகிற போது காலணியில்லாமல் ஏன் போகிறான் என்று கேட்கிறார்கள். முகுந்தன் — அம்மா நான் காலணியில்லாமல் சென்றால் இவர்களுக்கு என்ன? மாதா -

நீ காலணியணிந்து தான் போனுல் என்ன? கிருஷ்ணன்- அம்மா! அவர்கள் கூறுகிருர்கள் என்று நீயும் கூறுகிருயே. பசுக்கள் நம் குலதெய்வமல்லவா. அவைகள் காலணியில்லாமல் நடந்து போக நாம் காலணி யணிந்து போவதாவென்று அச்சுதன் சொன்னுன். அதைக் கேட்டதும் மகிழ்ச்சி யடைந்தார்கள். கோக்கள் இடத்தில் கோபால னுக்கு எவ்வளவு பக்தி இருந்த தென்பதை இவன் பால் காணலாம். இன்று நாம் எல்லோரும் பசுவின் பால் பருக விரும்புகிறோம். ஆனுல் பசுவைப் பாதுகாப்பதற்கு விருப்ப மில்லை. ஹிந்து மதத்தில் பசு இறைவன் வடிவமாகக் கருதப் படுகிறது.

நாம் எந்தப் பொருளோடு நட்பு வைக்கிறோமே அந்தப் பொருள் ஒரேமாதிரியிருக்கிறதில்லை. வையகத்தில் வைக்கும் கேண்மை மாறுதலையடையும். வையகம் சுவயம் மாறுதலை யுடையது. வெளியில் உள்ள விஷயத்தை நுகரும் வலிமை அளவுடையது. அதிக போகத்தைப் புசிக்கும் போது சக்தி குறைந்து வலிமையை இழக்கும்படி நேரும். நமது சுவையும் எப்போதும் ஒரே மாதிரி இருக்கிறதில்லை. நித்தியம் அல்வா பிரியமாயிருக்காது. இடை இடையே சற்று மாறுதல் தேவைப்படுகிறது. ஆகையால் எவன் உலகத்தில் அன்பு வைப்பானே அவன் நிலைகுலைந்து திரிவான்.

அன்பை உறுதிப்படுத்த வேண்டும். உயிர்நிலை அன்பின் வழியது. பிரீதி—அன்பின் நிலைகுலைகிற போது உயிர்நிலையும் குலையும். ''லோகோயம் கரம்பந்தன;'' கீதை. உலகத்தில் வைக்கும் நேசம் துன்பத்திற்குக் காரணம். உலகத்தில் உள்ள பந்தனம் பலவிதம். அதையறுப்பது மிகக் கடினம். கட்டையைத் துளைக்கின்ற வண்டு தாமரை யிதழைத் துளைக்க முடியவில்லை. அதில் கட்டுண்டு இருக்கிறது. இஃது என்ன விந்தை? இறைவனுடைய பந்தனம் இனிமையான பந்தனம். உலகம் மாறுபட்டாலும் உலகநாதன் மாறுபடு கிறதில்லை. அதனுல் அவன் ஏகரசம் எனப்படுகிருன்.

அவனிடத்தில் வைக்கும் அன்பும் ஒரு படித்தாக இருக்கும். இறைவன் நமது வடிவமாயிருக்கிருன். நம்மிடத்தில் நமக்கு அருச்சி யுண்டாவதற்குக் காரணமில்லே. ஈசுவரன் பொறிகளால் அனுபவிக்கப்படுபவன் அல்லன். ஆத்மானந்தம் இந்திரியங்களால் துய்ப்பவையல்ல. ஆதலால் அதை நுகரும் போது நமது வலிமை குறைகிறதில்லே. ஈசுவரனுடன் மூன்று அவஸ்தைகளிலும் நமக்கு இன்மையுண்டாகிறதில்லே. "நாபாவோ வித்யதே சத:" கீதை. மூன்று காலத்திலும் சத்ரூபஆன்மாவிற்கு அபாவமில்லே. அபாவம்=. இன்மை. ஆகையால் நிலேயான அன்பு இறைவனிடத்தில் தான் உண்டாகும்.

ஒரு தடவை ஒரு மகாத்மா இன்னெரு மகாத்மாவிடம் பிரேமை யெப்படி யிருக்கவேண்டும் என்று கேட்டார். பதில்- நம்மிடத்தில் நாம் எப்படி வைக்கிரேமோ அப்படி யிருக்க வேண்டும் என்ருர். "ஆத்மநஸ்து காமாய சர்வம் பிரியம் பவதி" உபநிஷத். யாக்ஞ வல்க்யர் சொன்னது. எல்லாம் தன் பொருட்டாகவே பிரியம் இருக்கின்றது என்பது பொருள். எல்லாம் பரமாத்மாவிற்காக இருப்பதால் இறைவனேத் தன் வடிவமாக ஆக்கிக் கொள். விஸ்வன் வைசுவானரனுக ஆகிவிட்டால் சகலமும் நமது வடிவமாகி விடுகின்றன. நிகிலமும் ஒன்று என்னும் அன்பு உண்டாகும். நம்மிடத்தில் உள்ள நட்பு நமக்கென்று இராமல் விராட்டுக்கென்று இருக்கவேண்டும். வியஷ்டி அன்பு சமஷ்டிக்குப் போய் சேர்ந்ததும் நமது அன்பு இறைவனுக்கு உரித்தாகின்றது. நாம் என்பதும் நமது என்பதும் விலகிவிடுகின்றன. அசுத்தம் சுத்தமாகி விடுகிறது. குற்றம் பரிச்சின்னத்தில் தான் இருக்கிறது. வியாபகத்தில் இல்லே. யான் எனது என்பது தான் பரிச்சின்னம்.

உனது அன்பு வியாபகத்திற்குப் போக வேண்டும் என்ருல் எனது என்னும் தன்மையை விட்டு இறைவனுக்

கென அன்பு செய்தோமானுல் அது வியாபகப் பரமாத்மா விற்குப் போய்ச் சேரும்.

இறைவனைத் தனக்குத் தலைவனுக எண்ணி அவனுக்குத் தன்னைச் சேவகனுகக் கருதி அன்பு செய்ய வேண்டும். அன்பு மார்க்கத்தில் தலைவனுக்குத் தான் முன்னுரிமை. இறைவன் சகல உலகததையும் சம்பூர்ண உயிர்களையும் ஒவ்வொரு க்ஷணமும் உண்டு பண்ணிக் காத்து அழிக்கும் வலிமையன். அவன் நமக்கு அரிய காயத்தையும் வாழ்விற்குரியஉபகரணங் களையும் அளித்திருக்கிருன். இப்பரந்த உலகத்தைச் சிறந்த முறையில் உருவாக்கித் தந்து நம்மை மகிழ்வித்திருக்கிருன். அத்தகைய இறைவனுக்கு நம்மை நாம் அர்ப்பணிக்க வேண்டும்.

''நன்றி மறப்பது நன்றன்று'' திருக்குறள். இறைவன் செய்த இனிய உபகாரத்தை மறப்பது நல்லதல்ல. நாம் செய்கிற வினைமுழுவதும் இறைவனை மகிழ்விக்க வேண்டும். சிரத்தை - நம்பிக்கை — கடவுள் இடத்தில் நிறைந்து இருக்க வேண்டும். இவையெல்லாம் பக்தி யென்னும் பாவன வல்லிக்கு உணவும் உரிய நீருமாகும். வல்லி = கொடி.

இறைவனை நண்பனுகவும் பழகலாம். ''நண்பனே யெங்கள் கோவே'' என்பது தேவாரம். ஜீவனும் ஈசுவரனும் அனுதி. இவர் இருவர்க்கும் கால நிர்ணயமில்லை. என்று நீ அன்று நான். ஆகையால் இருவரும் தோழர்கள். இருவருக்கும் ஆயுள் ஒன்றுதான். ஜீவனுக்கு ஆயுள்குறைவு. ஈசனுக்கு ஆயுள் நிறைவு என்று யாராவது இயம்புவாரானுல் அது தவறு. ஏனெனின்? ஜீவன் இல்லாத போது ஈசுவரன் யாருக்கு? பிரஜையில்லாது போனுல் அரசன் யாருக்கு? எனவே இவர் இருவரும் பழமையான நண்பர்கள். கதிரவன் உதிக்கும் பொழுதே கதிர்களும் உதிக்கின்றன. கதிர்கள் = கிரணங்கள்.

ஈசுவரனும் ஜீவனும் அனாதி தோழர்கள் என்று பழ மறைகள் முழங்குகின்றன - "துவாசுபர்ணா சயுஜா சகாயா" முண்டகசுருதி. ஜீவன் ஈசுவரன் என்னும் இரு பறவைகளும் தோழர்கள் என்பது சுருதிப்பொருள். நண்பர்கள் கூடுகின்ற போது மனம் விட்டுப்பேசுகிறார்கள் - நாம் இருவரும் ஒருவர் என்று இரு பறவைகளும் ஒரு விருக்ஷத்தின் கூண்டுக்குள் இருக்கின்றன. விருக்ஷம் = தேகம். கூண்டு = இதயம். இதயத் திற்குள் இருமணிகள் போலும், இரண்டு ஐம்பது காசுகள் போலும், இரு லட்டுகள் போலும் விளங்குகின்றார்கள்.

ஜீவேஸ்வரர்களுடைய ஏற்றத்தாழ்வு உபாதியால் வந்தவையல்லாமல் உண்மையில் அல்ல. "உபாதியால் வரு பேதமே யிவர் பேதம்" சசிவன்ன போதம். உண்மையில் ஓர்ந்து பார்க்கும் போது இருவரும் ஒருவரே.

ஞானம் பிரகாச வடிவம். ஞானம் உண்மையான பொருளை யுள்ளவாறு விளக்கும். ஆனால் பொருளை மாற்ற முடியாது. ஞானத்திற்குச் சுத்த வடிவம் மவுனம். அன்பு கல்லையும் கடவுளாகக் காட்டுகிறது. கல்லில் கடவுள் தெரிய வில்லையென்றால் உனது பக்தியில் மெலிவிருக்கிறது. குறை விருக்கிறது. குற்றமிருக்கிறது. மாசு படிந்த கண்ணாடியில் முகந்தெரிகிறதில்லை. கோபிகீதத்தில் அதிகமாகப் பிரேமை கூறுவதால் பயன் என்னை என்றால் கோபிகள் உள்ளத்தில் உறைந்திருக்கும் பக்தியைப் போல நம் உள்ளத்திலும் பக்தி யிருக்க வேண்டும் என்பது தான். இறைவன் பணியில் மிகச் சிறந்த பணி அவன் பக்தியை அவனியில் பரப்புவது தான். குடும்பத்தினர் குணங்களைப் பிறருக்குக் கூறுவது போல குவலய நாதனுடைய குணங்களையும் குவலய மக்களுக்குக் கூறவேண்டும். குவலயம் = உலகம்.

பிரணதகாமதம் —கோபிகள் கூறுகிறார்கள்—சியாம சுந்தர! நினது திருவடி, பிரணாமஞ் செய்பவர்களது எண்ணத்தை நிறைவேற்றுகின்றது. நாங்களும் உனக்கு

வந்தனஞ் செய்கின்றோம். ஆகையால் எங்கள் எண்ணத்தையும் நிறைவேற்றுவாயாக. கேசவ! நீயெங்கு இருந்தாலும் விரைவில் வந்து தரிசனம் தரவேணும். ஸ்ரீ கிருஷ்ணன்— இவ்வளவு தானா? என்னை வணங்குவோர்க்கு அவர் முன்பு செய்த பாவத்தை நீக்கி இன்பத்தை யளிப்பது தான் எனது மலரடியின் மகத்துவம் என்றான். கோபிகள்—இல்லை, இல்லவேயில்லை. பின்னர்? மதுசூதா! நினது மெல்லியமலர்ந்த பாதங்களை "பத்மஜார்ச்சிதம்" கமலாசனனும், கமலையும் அனுதினமும் வழிபடுகிறார்கள். கமலாசனன் - நான்முகன். கமலை = மகாலெட்சுமி.

தரணிமண்டனம் - தாமோதர! நினதுதாள் தரணி-பூமிக்குப் பூஷணம். மாயவா! உன் மலரடி பூமியில் இல்லையானால் இவள் விதவையாகி விடுவாள். இவள்-பூமாதேவி, கேசவ! எங்கள் இதயமும் பிருதிவியின் அம்சந்தான். எனவே நினது சரணபங்கஜத்தை வைத்து எங்கள் மார்பை அலங்கரிப்பாயாக என்றனர்.

தேயமாபதி — கோபிகளுக்கு முக்கிய நோக்கம் பகவானுடைய முகத்தில்தான். இருப்பினும் இப்போது ஆபத்தில் அகப்பட்டிருக்கிறார்கள், ஆகையால் கோமல பாதத்தை வர்ணிக்கிறார்கள். தேயமாபதி - ஆபத்து - பிரிவு. பகவானுடைய பிரிவு ஆற்ற முடியாமல் வெயிலிடப்பட்ட மெழுகென உருகிறார்கள். தலையை விட்டுவிட்டுத் தாளைத் துதிக்கிறார்கள் - முகுந்தா! உனது மலரடி நினைப்பவர்களது துன்பத்தைத் துடைக்கின்றது விபத்து வரும் போது அவன் அடியைத் தியானம் பண்ண வேண்டும் என்பது குறிப்பு. எங்கள் பிரிவு என்னும் விபத்து நீங்க வேண்டும் நெடியவ! என்கின்றனர்.

தேயம்-தியானம். "தத்ரப்ரத்யைக தானதா தியானம்" பதஞ்ஜலி யோகசூத்ரம். தத்ர = பிரஹ்மத்தில். பிரத்யய – விருத்தியை (உருக்கி) ஏகதானதா = (தைல தாரையை, மது

தாரை. ஜலதாரை பால்தாரையைப்போல் விழும்படிச் செய்வது. குரங்குப் போல் திரிகிற மனதை ஒரு நிலைப்படுத்தி ஆன்மாவில் கவியச் செய்வது தியானம் என்பது கருத்து.

சரணபங்கஜம், சரணம் கமலத்திற்குச் சமானம். கோமலம், அருணம், இரத்தநிறம், சீதலம் = குளிர்ச்சி, சுரபி = நருமணம், சுந்தரம். மதுமயம் = மதுரவடிவம். இவ்வளவு குணமுடையது இறைவன் திருவடி. எனவே நாத! நின் திருவடியை எங்கள் மார்பில் வை. அதனுல் எங்கள் பிணி மூப்புச்சாக்காடு இவை நீங்கும் என்பது பொருள். கிருஷ்ணன்—மிகநன்று. நான் உங்கள் எண்ணங்களை நிறைவேற்றுகிறேன் என்ருன். கோபிகள் - மாயவா! இதனுல் மட்டும் போதாது, பின்னை?

பதிமூன்றாவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் 14

சுரத வர்த்தனம் சோக நாசனம்
ஸ்வரித வேணுநா சுஷ்டுச்சும்பிதம்
இதர ராக விஸ்மாரணம் நிருணும்
விதர வீர நஸ்தே அதராமிருதம் 14

இ—பொருள்.

ஸ்ரீ ராமனுஜ ஆசாரியார் கூறுவதாவது — பகவான் எந்த வடிவத்தில் இருக்கிருர் என்று ஒருவர் வினவினுர். பதில் எப்படி வெளிப்படுகிருரோ அதுவே அவருக்கு வடிவம் என்ருர். ஆகையால் பகவானுடைய அதராமிருதமும் பகவத் வடிவந்தான். சுரதவர்த்தநம் — சுரதம் — அன்பு — பிரேம். இன்பத்தில் தான் அன்பு உண்டாகும். அன்பு அறத்தால் வருகின்றது. எனவே சுரத வர்த்தனம் என்ருர். இன்பம் தருபவன் என்பது இனிது புலனும். அநியாயமாக ஈட்டிய பொருள் வேதனையையும், அச்சத்தையும் அளிக்கும்.

அதனுல்தான் ''தீவினை விட்டு ஈட்டலே பொருள்'' என்று பூமகள் புகன்ருள். பூமகள் = ஔவையார். அதர்மத் தினுல் அனுபவிக்கும் போகம் ரோகத்திற்கு நிமித்தமா கின்றது. இகழாகும். பகவானுடைய வாயிலிருந்து வரும் அமிருதம் நிறைந்த தருமமாகும்.

சோக நாசனம் — ''தரதி சோகம் ஆத்மவித்'' என்று சுருதி சொல்லுகின்றது. ஞானி கவலையை வென்று விடு கிருன் என்பது பொருள். இதனுல் என்ன தெரிகிறது? பகவானுடைய அதராமிருதம் ஞானவடிவம் என்பது புலனும்.

வறுமையில் வருகின்றத் துயரம் பொருள் வந்ததும் நீங்குகின்றது. ஆனுல் எல்லாம் இருந்தும் வருகின்ற துயரம் விவேகத்தால் ஒழிகின்றது. ஒரு பெரும் பணக்காரன் கவலை அடைந்து கொண்டு இருந்தான். ஏன் என்று வினவும் போது எனக்குப் பெரும் நஷ்டம் வந்து விட்டதென்ருன். இங்ஙனம்

இருப்ப,அவனுடைய நண்பன் அவன் பால் வந்தான். கவலைக் குக் காரணத்தை வினவினுன். எனக்கு வியாபாரத்தில் நஷ்டம் நேர்ந்தது என்முன். நண்பன் — கணக்குப் புத்தகத் தைக் கொணர்ந்து வரச் சொன்னுன். அவ்வாறு அவன் செய்தான். இவன் கணக்கைப் பார்த்தான். இரண்டு லெக்ஷத்திற்கு இலாபம் வந்திருக்கிறது. அதை அவன் பால் உரைத்தான். மிகமகிழ்ந்தான். கவலைத் தொலைந்தது. எண்ணிப் பாராததால் வந்தக் கவலை ஓர்ந்து தெளிந்ததால் ஒழிந்தது.

இம்மாதிரி இருந்த சம்சாரத் துன்பம் அஞ்ஞானத் தால் வருகின்றது. இஹத்தில் வரும் துன்பம் அனைத்தும் மறதியால் வருகின்றன. மறதி நீங்கி ஞாபகம் வந்ததும் ஞானத்தால் நீங்கி விடுகின்றது. பகவானுடைய அமிருதத் தில் பரிபூரண ஞானம் இருக்கிறது கோபிகள் — சியாம சுந்தர! உனது பாதத் தலம் பட்ட மாத்திரத்தில் எங்கள் வேதனையிரவியைக் கண்ட இருள் போல நீங்குகின்றது.

கேசவா! எங்கள் நெஞ்சில் வேதனையேன் வந்தது தெரியுமா? நீ காலணியில்லாமல் கானகஞ் செல்கின்ருய். அதனுல் எங்கள் மனம் உடைந்திருக்கிறது. அவ்வேதனை நீங்குவதற்காக உனதுத் திருவடியை எங்கள் நெஞ்சில் வை. கோவிந்தா! கூறுவதைக் கவனமாய்க் கேள். வீர! எங்கள் மனத்தில் காமத்தை உண்டு பண்ணுகின்ருய். காமத்தை நீக்க வந்த நீ அதை வளர்க்கின்ருய். இஃது என்ன முறை? முராரே! உன்னைக்காணமனம் முனைகின்றது. துயரைத் துடைக்க வந்த சொல்வீர! துன்பத்தைத் தரலாமா? எங்கள் துயரத்தைத் துடைககும் மருந்து நின்பால் இருக்கிறது. அம்மருந்தை அவசியம் அளிக்கவேண்டும் ஜனுர்தன! என்றனர் கோபிகள்.

மருந்தும் உன் மயமாகத் தானிருக்கிறது. சுரதவர்த் தநம் என்பதால் தருமருபம், சோகநாசனம் என்பதால் ஞானவடிவம் எனத் தெரிகிறது. ஸ்வரித வேணுநா சுஷ்டுச்

சும்பிதம் என்றதால் நிறைந்த புகழுமிருக்கின்றது. முரளிதர! நினது வேணு நாதந்தான் ஜகத்தில் உனது புகழைப் பரப்பியது.

இதரராக விஸ்மாரணம் நிருணும் — இதில் வைராக்கிய முழுவதும் இருக்கின்றது. மனிதனுடைய மற்றய ஆசைகளை நிராசை நீக்கி விடுகிறது. வைராக்கியவான் ஆசைப்படு கிறதில்லை. அவனுக்குத் தெரியும் ஆசையில் நிறைவு இல்லை யென்பது. ஆசை ஒரு பெரும் படுகுழி. அதில் விழுந்தவன் எழுந்திரிக்கவே மாட்டான் என்று அவன் உணருகிறான்.

கங்கையில் அணைக் கட்ட வேண்டுமானால் இருஉபாயங் கள் செய்யவேண்டும். நதியை அடைக்க வேண்டும். மறு பக்கந் தோண்ட வேண்டும். இம்மாதிரி இறைவனை யெய்த வேண்டுமானால் உலகத்தை நோக்கியோடுகின்ற விருத்தியை நிறுத்தவேண்டும், நின்றபின்பு அவ்விருத்தியை இறைவனி டத்தில் செலுத்தவேண்டும்.

கோபிகள் இதயத்தில் இருக்கும் கோவிந்தன் கூறுகிறான் — மங்கையர்களே! எனது அதராமிருதத்தை யேன் விரும்புகிறீர்கள் என்றான். கோபிகள் - அதனால் அன்பு வளரும். ஸ்ரீகிருஷ்ணன் - அன்பை வளர்த்து என்ன செய்யப் போகிறீர்கள்?

கோபிகள் — அன்பு இன்மையால் தான் உனக்கும் எங்களுக்கும் பிரிவு உண்டாயிருக்கிறது. உனது அன்பு எங்கள் உள்ளத்தில் இருக்குமானால் எங்களை விட்டு ஏன் பிரிந்து போகின்றாய்?

ஸ்ரீகிருஷ்ணன்— எனது அதராமிருதம் துர்லபம். கோபிகள் — புருஷோத்தம! பொய் புகலாதே. உனது அத ராமிருதம் புல்லாங்குழலுக்கும் எளியமுறையில் கிடைக்கின் றது. அங்ஙனமிருப்ப எங்ஙனம் அரியது? கோபாலா! சொல்.

ஸ்ரீ கிருஷ்ணன் — புல்லாங்குழலுக்குச் சமானம் உங்களுக்கு வைராக்கியம் எங்கே யிருக்கிறது. வனிதையர்களே! நிஷ் காம கருமத்தைச் செய்து வைராக்கியத்தை யடையுங்கள் என்று அச்சுதன் சொன்னுன். கோபிகள் — வாசுதேவ! வைரக்கியமும் அமிருதத்தில் இருக்கிறது. ஆகையால் உனது அதராமிருதத்தை எங்களுக்கு அளித்தால் பூரண வைரக்கியம் வரும் என்று வனிதையர் கூறினர். பகவா னுடைய சௌந்தரிய மாதுரியத்தில் மனம் பொருந்துமாளுல் உலகத்தில் உள்ளப் பற்றுக்கள் சற்று மில்லாமல் அற்றுப் போகும். இராக துவேஷமும் நீங்கி விடும்.

வீர! அதராமிருதத்தில் வீரத்வம் என்ன? தான வீரன் என்பது பொருள். ஈஸ்வரன் — ஈரயதி — ப்ரேரயதி அகிலம் ஜகத் இதி ஈஸ்வர: உலக முழுவதையும் இயக்கி வைப்பவன் ஈசுவரன். அவன் தான் வீரன். "குணேஷு அசக்த தீ ஈஸ்வர" முக்குணங்களிலும் பற்றற்றவன் எவனோ அவனே ஈசுவரன், அவனே வீரன்.

அமிருதம் — இவ்வளவு பெருமை பொருந்திய அமுதத்தை நீ யளிப்பாயாக. சக்ரபாணே! கவனமாகச் சிந்தித்தால் உனக்கும் இந்த மருந்து தேவைப்படும். இம் மருந்து இதர ராக விஸ்மாரணம் — (அ) பகவானுக்கு அந் நியமான சம்சாரத்தில் வைக்கின்ற ஆசை தான் நம்மை பிச்சைக்காரனுகவும், துக்கியாகவும் செய்கின்றது. நிறைவு பொருள்களில் இல்லை. நிறைவு உள்ளத்தில் இருக்கிறது.

உள்ளத்தில் இருக்கின்றப் பூரணத்தை உணராததால் வையத்தில் ஒவ்வொரு பொருளையும் விரும்புகிறேம். ஜகத் தில் உள்ள பொருள் முழுவதும் அற்பமும் துச்சமுமாம். இதில் வைக்கின்ற ஆசை தான் பிணி. இதற்கு மருந்து நினது அதராமிருதந்தான். ஆகையால் அதை எங்களுக்கு அளிப்பாயாக என்று கோபிகள் யாசிக்கிருர்கள்.

இறைவன் எப்பொழுது நம் பார்வையிலிருந்து மறைந்து விடுகிருனோ அப்பொழுது நமது எண்ணம் விஷயத்தை நோக்கிச் செல்லுகின்றது. இஃது பசுபுத்தியாகும். சிறிய பொருளில் மனதைக் கொடுக்கும் பொழுது இறைவன் தெரிகிறதில்லே. சம்சாரி மனிதன் தனது அற்பபுத்தியால் யான் எனது என்னும் தன்மையில் மூழ்கியிருக்கிருன். செருக்கு வந்து அறிவுக்கண்ணே மறைக்கிற பொழுது இறைவன் எங்ஙனம் தென்படுவான்?

கோபிகளின் நிலே இதற்கு மாறாகவுள்ளது. பகவான் முன்னே நிற்கிறபோது அவர்கள் திரும்பிப் பார்க்கவில்லே. பகவான் மறைந்ததும் காணவேண்டும்என்று கதறுகிருர்கள். இது தான் மங்கையின் மனோ நிலே. கண்ணன் நெருங்கி நிற்கிற சமயம் அவர்கள் தங்கள் மேனியை நோக்கத் தொடங்கினுர்கள். அப்போது கண்ணன் அவர்கள் முன்னிலேயில் மறைந்தான். மடந்தையர் மாதவனே மறந்தனர். மாதவன் மறைந்தான்.

அன்புமார்க்கத்தில் நான்கு வார்த்தைகளேக் கவனிக்க வேண்டும் 1) அன்பு மென்மேலும் வளரவேண்டும். 2) அன்பனேத் தவிர வேறு யாரிடமும் நட்புக் கொள்ளலாகாது. 3) கழிந்ததை நினேத்து வருந்தாமை. 4) அன்பின் மார்க்கம் எளிதாக இருக்க வேண்டும். பிரேம மார்க்கம் கடினமாக இருக்கக் கூடாது. ஒத்தடிப் பாதையில் யாரும் நடக்க விரும்பமாட்டார்கள். அன்புமார்க்கம் இனிமையான மார்க்கம். கல்லிலும் முள்ளிலும் செல்ல யாரும் விரும்பமாட்டார்கள் அல்லவா?

"அன்பெனும் பிடியில் அகப்படும் மலேயே" இராம் லிங்க சுவாமிகள். இளம் மனேவியைக் காட்டுப் பாதையில் அழைத்தால் வருவாளா? அன்பை மென்மையாக்குவதற்கு மருந்து பகவானுடைய அதராமிருதம். ந தராமிருதம் இதி அதராமிருதம். அலௌகிக அமிருதம். தரை — பூமியில்

கிடைக்கும் அமிருதம் — நெல், புல், மருந்து, பழவர்க்கம், கரும்பு, இழநீர், நவவித தான்யம். இவையெல்லாம் தராமிருதம். தரையில் கிடைக்கின்ற அமிருதம். ஞானம் பகவான் வாயிவாயலாகக் கிடைக்கும் அமிருதம். வாசவன் இல்லத்தில் அமிருதம் பொற்கலசத்தி லிருக்கிறது. பகவானுடைய அமிருதம் அளவுக்கப்பால் பட்டது.

அது சான்றோரிடத்திலும் சத் சாத்திரத்திலும் இருக்கிறது. வாசவன் அமிருதத்தை அள்ளினாலும் பருகினாலும் குறையும். வாசுதேவன் அமிருதம் குறையாது. வாசவன் = இந்திரன். பாசம் வந்து கண்ணை மறைக்கிற போது பக்கத்தில் உள்ள பொருள் தெரிகிறதில்லை. பாசம் = குலஅபிமானம். நான் ஆசாரசீலன் என்ற அபிமானம். ஜாதியபிமானம், சந்தேகம், லஜ்ஜை, நிந்தனை யிவையெல்லாம் பாசம் எனப்படுகின்றன. இப்பாச மூலமாக ஜீவன் கட்டப்படுகிறான். இவைகளையறுத்து எறியாது போனால் ஜீவனுக்கு விடுதலை கிடையாது.

இவைகளில் கோபிகள் இடத்தில் ஒன்றுமில்லை. ஜாதி அபிமானமோ, குல அபிமானமோ, லஜ்ஜை அபிமானமோ, அவர்களிடத்தில் ஒன்றுமில்லை. உலகம் என்ன சொல்லும் என்ற பயமுமில்லை. கூசாமல் கூறுகிறார்கள் — தே அதராமிருதம் உனது அதராமிருதத்தை எங்களுக்குக் கொடு என்கிறார்கள். பிரமேயம் = எதனோடு பிரேம் செய்யப்படுகிறதோ அதற்குப் பிரமேயம் என்று பெயர். மனிதனே! யாரோடு ஸ்நேகம் பண்ணுகின்றாய்? மனிதனா, பசுவா, பிரேதமா? அல்லது தெய்வமா, யாருடன் பழகுகின்றாய் சொல். நினது அன்பு யாருக்கு? உன்னுடைய பழக்கம் சுத்தமாக இருக்க வேண்டும். வாசனைக்கு அடிமையாகக் கூடாது.

கோபிகள் சிறந்த நிலையில் இல்லாமல் போனாலும் கண்ணனிடத்தில் களங்கமில்லாத அன்பினராய் இருந்தனர்.

இதை யாரும் மறுக்கமுடியாது. அவரிடத்தில் சகாம பக்தி நிரம்ப இருந்தது. "கோப்ய: காமாத் பயாத் கம்ச:" என்கின்றது பாகவதம். கோபிகள் ஆசையாலும், கம்சன் பயத்தாலும் பகவானை வழிபட்டனர் என்று சுகபிரஹ்மம் சொல்லுகிறார்.

தாழ்த்தப்பட்ட மனிதன் விருத்தியும் மோசமானது. கீழ்த்தரமான செய்கை. இருப்பினும் இத்தகைய மனிதன் இறைவனோடு கேண்மையை வைத்தானானால் அவனும் அவனது விருத்தியும், அவன் செயலும் தூய்மை அடைகின்றன. அவன் கிருஷ்ணமயமாகி விடுகிறான். கம்சனுடைய பயமும் சிசுபாலனுடையத் துவேசமும் பகவான் வடிவமாயின. கோபிகள் வசம் இருந்தது காமமல்ல. சுத்தபிரேமு தூய்மையான பக்தியென்பது பொருள்.

கோபிகளின் குணங்களை வர்ணிப்பது கோபானுடைய பெருமையைக் கூறுவதாகும். விருத்தி சுவயம் நல்லதோ கெட்டதோ ஆகமுடியாது. விருத்தி=செயல். அது எதைத் தழுவி நிற்கிறதோ அதைப் பொருத்து நல்லதாகவோ கெட்டதாகவோ ஆகிறது. கோபிகளுடைய காமம் கோவிந்தனைச் சேர்ந்திருக்கிறது. ஆகையால் அது சிறந்த தாகின்றது. "மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு" என்றபடி

ஸ்ரீகிருஷ்ணன் மகாபுருஷன். எனவே இழிந்த விருத்தியையும், இழி குலத்தவரையும், பவக்கடலிலிருந்து கரையேற்றுகிறான். ஒரு பக்தன் — நான் குடிகாரன், வியபசாரி, சூதாடி, களவாணி, கொலையாளி, மாமிசாகாரி, பிறரைப் பழிப்பவன். இவ்வாறிருந்தும் குருவையடைந்தேன். அடைந்ததும் புனிதனாகி விட்டேன் என்றான். அங்கண நீரும் கங்கையோடு கலந்து மங்கல நீராகிறது. அது போல் பாவியும் பகவானை மேவி புனிதனாகின்றான். இதனால் குருவின் பெருமை கூசாமல் தெளிவாகிறது.

கோபிகள் சகாமபக்தர்கள் என்றது பகவானுடைய மகிமையை எடுத்துக் காட்டுவதற்காக.

சுரத வர்த்தனம் — சுரதம், அன்பு, கேண்மை. கேண்மையில் வருகிற ஆனந்தம் சாந்தானந்தம் இல்லை. ஞானத்தில் வருகிற ஆனந்தம் சாந்தானந்தம். உலகபோகங்களில் வருகிற ஆனந்தம் ரோகத்திற்குக் காரணமாகின்றது. பிறரிடத்தில் இரவல் வாங்கிய ஆனந்தமாகும். அஃது நம்மை அடிமையாக்கும். அதில் வாசனையின் வேகமும், விஷயத்தின் தொடர்பும் இருப்பதால் அழிவிற்கு ஏதுவாகும். விஷய சுகத்தின் பின்னுல் களைப்பும், துன்பமும் ஆம். பிறகு இரங்குதல், அனுதாபம், பிணி, இகழ் நிறைந்த விபத்துக்கள் இருக்கின்றன. அறத்தினுல் வரும் இன்பம் பரோட்சம். கருமதருமங்களை முறைப்படி செய்தால் பின்னுல் மகிழ்ச்சியும், மரணத்திற்குப் பின் சொர்க்கானந்தமும் உண்டாகும். அதனுல் அறத்தினுல் வரும் இன்பம் பரோக்ஷ வடிவம். பிரேமானந்தம் அவ்வாறன்று. அது பரோக்ஷமும் அல்ல. அசுத்தமும் அல்ல. தற்காலத்தில் அனுபவிக்கப்பட்ட ஆனந்தம். இறைவனுக்கு ரமணன் என்று ஒரு பெயர்.

இவ்வானந்தத்தில் அவன் ரமிக்கிறுன். ஆகையால் ரமணன் என்று ஒரு நாமம். அன்பினுல் விளையும் இன்பம் தூய்மையானது. விஷயத்தால் வரும் இன்பம் கற்பிதமாக இருக்கிறது. விஷயம் பல. ஒரு விஷயம் எல்லோருக்கும் ஒரே மாதிரி இன்பத்தை ஈயாது.

மாம்பழம் உண்ணுகிறோம் நமக்கு ஆனந்தம் வருகிறது. அந்த ஆனந்தம் மாம்பழத்தில் இல்லை. மாம்பழத்தில் இருக்குமானுல் எல்லோருக்கும் இருக்க வேண்டும். ஜப்பானில் மாம்பழத்தை அபசகுணமாகப் பார்க்கிறுர்கள். மாம்பழத்தைக் கண்டால் என்ன நேருமோவென்று அஞ்சுகிறுர்கள். ஆகையால் மாம்பழம் உண்ணும் போது வரும் ஆனந்தம் நமது ஆனந்தமே.

மனிதனுக்கு மனிதன் கிடைத்தால் வரும் இன்பம் சகலஇன்பத்தைப் பார்க்கினும் பெரியது. ஏனெனின்? அப்போது இருவர் மனமும் ஒன்று சேருகிறது. இந்த இன்பமும் குறைந்த இன்பந்தான். கருத்து என்னவென்றல் ஜீவனுடைய இன்பம், ஜீவனது சக்தி அளவிற்கு உட்பட்டவை. ஜீவனிடம் சுகத்தை நாடுவாயானல் அஃது ஒரு எல்லைக்குள் மறைந்து விடும். உதாரணமாக ஜீவன் உறக்கத்தில் மறைந்து விடுகிறன். அதுபோல் அவனல் கிடைக்கும் இன்பமும் ஒரு குறிப்பிட்ட எல்லையில் குன்றிப்போகும்.

இதற்கு மாருக ஈசுவரனது இன்பம் முடிவு இன்றியது. இறைவன் ஈறிலாதவன். அதனுல் அவனது இன்பமும் ஈறிலாதது. ஈறு முடிவு. குன்ருது, குறையாது. என்றும் ஒரு படித்தாக இருப்பது இறை ஆனந்தம். அதை நாடுவது ஜீவனுக்கு நலம். நதிநீரைப் பறவைகள் எவ்வளவு அருந்தினுலும் நீர்குறைகிறதில்லை. அம்மாதிரி இறைவன் இன்பமும் ஆம்.

சுரதவர்த்தனம் — மாயவா! பிரேமானந்தம் பெருகுவதற்கு மருந்து கொடு. கங்கை இமயத்திலிருந்து தோன்றுகிறது. தோன்றுமிடத்தில் சிறிய அருவியாக விழுகிறது. போகப் போக விரிகிறது. கங்கைக் கடலில் கவிழ்கின்ற போழ்து விரிந்தப் பிரவாகமாக விழுகிறது. இதற்கு மாருக அணைகளிலிருந்து விழும் நீர் போகப் போகச் சுருங்கிக் குறைந்து சமுத்திர சமீபம் கலந்து விடுகின்றது. இம்மாதிரி அன்பு இருக்கக்கூடாது. துவக்கத்தில் சுருக்கமாக இருந்தாலும் போகப்போகப் பக்திப் பெருக்கமாக இருக்க வேண்டும்.

அன்பு கங்கையைப் போலவும், வாசனை அணையைப் போலவும் இருக்க வேண்டும். நாளுக்கு நாள் அன்பு வெள்ளமாகப் பொங்கித் ததும்ப வேண்டும். பூரணமாயிருக்க வேண்டும் என்பது கருத்து. எது குறைந்தாலும் இறைவன் அன்புக் குறையக் கூடாது. பொருளில்லையானுல் இவ்வுலகமில்லை. இறைவன் அன்பில்லையானுல் இகபரமிரண்டுமில்லை.

சோகநாசனம் — மனிதனுடைய மனம் இறந்தகாலத்தோடு அதிக கவனஞ் செலுத்துகின்றது. நான் முன்னமே மிக நன்ருக வாழ்ந்தேன் என்கின்ருன். என்னிடத்தில் இவ்வளவு பொருள் இருந்தது. எவ்வளவு மாடமாளிகையிருந்தது. எவ்வளவு கிளேஞர் இருந்தனர் என்கின்றனர். எதுவாக இருந்தாலும் கழிந்ததை நிணேக்கும் போது சோகந் தான் வரும். கவலேயுண்டாகும். கழிந்த விஷயம் கவலேயைத் தரும் என்பது பழமொழி. நல்லதை நிணேத்தும் கலங்குகின்றனர். தீமையை நிணேத்தும் கலங்குகின்றனர். எனவே இறந்த காலத்தில் மனதைச் செலுத்துவது அறிஞருக்கு அழகல்ல. இறந்த காலத்திற்குப் பூதகாலமென்று ஒருபெயர். பூதம் பொல்லாதது. அதனுடன் மனதைச் செலுத்திருல் தொல்லேயே.

கடவுளேக் காண விரும்பினுல் மூன்று காலத்தையும் உலகில் உள்ளப் பற்றையும் விடவேண்டும். உலகப்பற்றணேத்தையும் விட்டு அப்பற்றை ஆண்டவனிடத்தில் வைக்க வேண்டும். மனதை முற்றிலும் இன்மையாக்க முடியாது. அதற்கும் பற்றுக் கோடு வேண்டும். ஆகையால் மனதைப் பகவானிடத்தில் கொடுக்க வேண்டும். வாழ்க்கையில் முன்னேற வேண்டும். கவலே பூத விருத்தி.

வருங்காலத்தை யெண்ணும் போது அச்சம் உண்டாகிறது. அச்சம் = பயம். நிகழ்காலத்தில் இருக்கும் பொருள் மனே, மனேவி, குழந்தைகள், ஆடை அணிகலங்கள் வருங் காலத்தில் இல்லாது போனுல் எப்படி வாழ்வோம் என்ற அச்சம் வரும். இது எதிர்காலத்தைக் குறித்து வருகிறது' மோகம் — நிகழ்காலத்தில் வருகிறது. இறைவனிடத்தில் எல்லாப் பொருள்களும் எப்போது மிருக்கும். ஜீவனிடத்தில் என்றுமிராது. இவ்வுலகம் பரிவர்த்தன சீலம் உடையது. மாற்றமுடையது. ''மாற்றமாம் வையகத்தின் வெவ்வேரே வந்தருள்வாய்'' என்கின்றது திருவாசகம். மாற்றமுடைய இவ்வுலகில் எதுவும் நிலேத்திருக்கிறதில்லே.

பிரியும் பொருளைப் பிரியாமல் இருக்க வேண்டும் என்று நினைப்பது மோகம் எனப்படும்.

வாழ்க்கையில் விசாரத்தினால் இன்பம் வரவேண்டும். அங்ஙனமாயின் மேற் கூறிய சோகம், பயம், மோகம் வர மாட்டா. அன்பன் யாரிடமும் வெறுப்பு வைக்கமாட்டான். வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் மாறிமாறி வரும். இது இயல்பு. இவைகளைக்கண்டு அன்பன் வருந்தினால் யாரோடும் துவேஷங் கொள்ள மாட்டான். ஏனெனின்? வெறுப்புக் கொதிக்கும் விருத்தியாகும். அந்த விருத்தியில் ஆண்டவன் இருக்கமாட்டான். கொதிக்கும் விருத்தியில் சிவனோ, திருமாலோ இருக்கமாட்டார்கள். சிவனார் இருப்பது இமயத்தில். திருமால் இருப்பது பாற்கடலில். ஆகையால் இருவருக்கும் குளிர்ச்சியான இடந் தேவை. விருத்தி = இதயம், ஆகையால் அன்பன் ஒருவரோடும் பகைக்கமாட்டான்.

இம்மாதிரி இருக்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? சுரத வர்த்தனம் — அகத்தில் அன்புப் பெருக வேண்டும். ஆருயிர் மாட்டுக் கருணையிருக்க வேண்டும். இது எளிதல்ல. மாராக அதற்குப் பதில் — ஸ்வரித வேணு நாசுஷ்டுச்சும்பிதம் — கிருஷ்ணன் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் மின்சாரம். (கரண்டு) தன் வயமாக இழுப்பவன். கரஷதீதி கிருஷ்ண; என்பது இலக்கணம். பகவானுடைய வேணு நாதம் என்றால் என்ன? பகவானுடைய இன்பத்தை ஈர்த்து அன்பர்களுக்கு அளிக்கும் ஒரு சிறந்த கருவி. வேணு நாதத்தின் வாயிலாக விஷ்ணுவையும் உலக முழுவதையும் ஆலிங்கனஞ் செய்கிறார். இவ்வுலகைத் தழுவ வேண்டுமென்னும் அவசியம் பகவானுக்குத் தேவை தானா என்று கேட்பது தன்கரத்தால் தன்காலை வெட்டுவதாகும். யாருடைய நன்மைக்காகத் தந்தை பவனத்தை யுண்டுபண்ணுகிறாரோ அந்தத் தந்தையை நோக்கி எதற்காக பவனத்தை உண்டு பண்ணுகிறாய் என்றால் அம்மைந்தனைப் பார்க்கினும் மரக்கட்டையைப் பெற்றால் மிக நன்று.

உலகம் உய்யப் பகவான் அவதாரஞ் செய்கிருர், அங்ஙனம் இருப்ப அவ்வுலகம் பகவான் ஏன் அவதாரஞ் செய்கிருர் என்று கேட்டால் நன்றியில்லாத உலகந்தானே. விரஜ ராஜகுமாரன் ஸ்ரீகிருஷ்ணன் நமக்கு ஆனந்தம் அளிப்ப தற்காக அவனிக்கு வந்தான். இது அவனது கருணே. அக் கருணையை வாரி நுகர்வதற்கு நமக்குப் பாக்கியமில்லை.

சம்சாரி மக்களுக்கு அக்ஞானமிகுமாளுல் அல்லது அக்ஞானத்தால் துன்பம் வருமாளுல் வியாசர், சுகதேவர், பகவான் சங்கரர், இவர்கள் உபதேசத்தால் அவைகளைப் போக்கிக்கொள்ளலாம். இவர்களுக்கு வந்திருக்கும் துயரம் இராகத்தினுல் வந்திருக்கிறது. இவர்கள் இராகம் உலகத் திலிருக்கிறது. வேணுநாதத்தை யூதி விஷ்ணு உலகத்தில் வைத்திருக்கின்ற இராகத்தை மறக்கச் செய்கின்ருர். அவ்வாறில்லையாயின் சம்சாரத்தில் உள்ள இராகம் ஜீவனை இன்பத்திற்காக ஒவ்வொருவர் முன்னிலையிலும் கையேந்தி நிற்கச் செய்யும். உலகத்தின் முன் கையை விரிப்பதற்குப் பதிலாக இறைவன் பால் கையேந்து. அல்வா கிடைக்கும் பொழுது தவிடை விரும்புவானேன்? அதுபோல், இறைவன் குழலோசைக் கேட்டதும் உலகவிஸ்மரணம் உண்டாகிறது. ஜகத்தை மறந்து விடுகிருன். எனவே குழல் ஊதுவது அவசியமும் அவசரமும் ஆம்.

ஸ்ரீகிருஷ்ணன்—எனது அதராமிருதத்தைப் பருகுவதற்கு உங்களுக்கு அர்கதியில்லை. தகுதி உங்களிடம் இருப்பதில் பிரமாணம் என்னே?

கோபிகள்—கோவிந்தா! உன்னுடையப் பிரிவு ஆற்ரு மையால் நாங்கள் வாடுகின்ருேமே அதுவே பிரமாணம். கோபாலா! உனக்கும் எங்களுக்கும் பிரமாணம் வேண்டுமா? நாரணு! சற்றுச் சிந்தித்துப் பார். நீரில்லாமல் மீன் வாழ இயலுமா? இயலாதல்லவா? நெடியவனே! நீ யில்லாது

போனுல் நாங்கள் எங்ஙனம் வாழ்வது? கண்ணு! உன் கடைக் கண்ணைத் திறந்து பாராய்.

புருஷோத்தமா! உன்னைக் கண்டதும் வரும் உவகையும், உள்ளக்கிளர்ச்சியும், முகமலர்ச்சியு முண்டாகின்றன. இது வே எங்கள்ப் பிரேமிற்குப் பிரமாணம். அமரறேரே! உன் வியோகத்தில் எங்களுக்குப் பகலிலும் இன்பமில்லை, இரவிலும் இன்பமில்லை. நீ இன்ப வடிவினன் எங்களுக்குத் துன்பத் தைத் தருகின்ருய். இஃது என்ன நியாயம்? உலகத்திற் கெல்லாம் இன்பத்தைக் கொடுத்து விட்டு எங்களுக்குத் துன்பத்தைத் தர நீ இங்கு வந்திருக்கிருய் மணிவண்ணு! கமலக்கண்ணு! என்ருர்கள். மேலும் பரிந்துரை—

நான் என்னும் இடத்தில் அவனை வை. அவன் ஈசுவரன் நான் என்ருயிற்று? நான் வியாபகமாய்ப் போயிற்று. ஜீவன் ஈசுவரனுயிற்ருன். தேகத்திலிருந்தவன் ஜெகத்திற்குப் போய் விட்டான். இறை நிலையை இயம்ப இயலாதது போல் அன்பு நிலையும் அறிவிக்க இயலாது. அது உள்ளேயிருக்கிற ஒப்பற்ற மணி. இன்பநிலையில் மலரும் அன்பு வம்பிற்கு விஷயமன்று. இறைவன் பரோக்ஷன். தூரத்தில் இருப்பவன். அன்பு கிட்டத்தில் இருப்பது. ரொட்டியைத் தேனில் கலந்து உண்பது போல அன்பின் ரசத்தில் ஆண்டவனைக் கலந்து அனுபவி. பகவத் சேவையில் தன்னை அர்ப்பணி.

ஈசுவர வழிபாடு மறந்து விட்டது. குருபணிவிடையைத் தூரத்தில் விட்டு விட்டோம். ஆனுல் மனிதனை வழிபடுகி ருேம். ஒவ்வொரு காரியத்திலும் மனிதனுக்கு நமஸ்காரம் செய்கிருேம். அவனை வழிபடுகிருேம்.

எவன் இறைவன் சமீபம் இருக்கிருனே அவனை இறைவன் கையைப் பிடித்துத் தூக்குகிருன். எவன் வெகு தூரம் இருக்கிருனே அவனைத் தனது வயமாக்குவதற்கு வேணு கானம் ஊதவேண்டியிருக்கிறது. யாருக்கு இறைவன் புல்லாங்குழலின் இரசங் கிடைத்து விட்டதோ அவனுக்கு அன்னியப் பொருள்களில் இச்சை இருக்கிறதில்லை. சம்சார இராகம் நீங்கிவிடுகின்றது. பால் கிடைக்கிற போது கூழை யேன் விரும்புவான்.

பதினான்காவது சுலோகம் முற்றிற்று.

## சுலோகம் 15

அடதியத் பவான் அஹிநிகானனம்
துருட்டிர்யுகாயதே துவாம் அபஸ்யதாம்
குடிலகுந்தலம் ஸ்ரீ முகம்ச தே
ஜட உதீக்ஷதாம் பக்ஷ்மகிருத் திருஸாம்.

இ—பொருள்.

கேசவ! என்ன சொல்வது? எங்கள் இமைகளைப் படைத்த அயனுக்குப் புத்தியில்லை, எதனுலோவெனின்? உன் முகத்தைப் பார்த்த இமைகள் அசைகிறது கூட இல்லை. அசைவற்று ஜடம் போல இருக்கின்றது. நான்முகனுடைய விளையாட்டு இதுவா? உலகத்தை நோக்கும் பொழுது இரு இமைகளும் அசைகின்றன. நினது முகக்கமலத்தை நோக்கும் போது அசைகிறதில்லை. இஃது என்ன விந்தை? இதனுலன்ரே தேவர்களுடைய இமைகள் அசைகிறதில்லை. அதனுல் அவர்களுக்கு இமையவர்கள் என்று திருநாமம் சூட்டப்பட்டது.

மாயவா! உன் முகத்தை நாங்களும் பார்க்கிரோம், ஆனுல் எங்கள் இருவிழிகளும் சஞ்சலத்தை அடைகின்றன. இஃது என்ன மாயம் தூயவா சொல்.

கிருஷ்ணன் — அரிகோபிகாள்! அமரர்களுக்கு ஆயுள் மிகுதியாக இருப்பதால் அவர்கள் இமை அசைகிறதில்லை. ஜீவர்களுக்கு ஆயுள் குறைவு. ஆகையால் இவர்கள் இமைகள் துடிக்கும்.

"துருட்டிர்யுகாயதே த்வாம் அபஸ்யதாம்" துருட்டி - ஓர் அளவு. ஊசியைக் கொண்டுத் தாமரையிலையைக் குத்தினுல் எவ்வளவு நேரம் பிடிக்குமோ அந்த நேரத்திற்குத் துருட்டி யென்று பெயர். "தினைத்துணை" தினைப்போதளவும் என்று முறையாக வள்ளுவரும், பட்டினத்தாரும் சிறிய அளவைக் குறிப்பிட்டிருக்கின்ருர்கள்.

அம்மாதிரி சிறிய அளவிற்குத் துருட்டி என்று சொல்லுவார்கள். இந்நேரம் உனது பிரிவால் யுகமாகின்றது. நான்கு சதுர்யுகம் கழிகின்றன. முரளிதர! எங்கள் ஆயுளும் மிக அதிகமாகத்தான் இருக்கின்றது. எங்ஙனம் எனின்? உன்னைக் காணுமல் நூறு, ஆயிரம், இலக்ஷம், கோடி யுகங்களாகக் கழிகின்றன. கோவிந்தா!

கோபாலா! நினது பிரிவு ஆற்ருமையால் இவ்வளவு காலம் துன்பங்களை அனுபவிக்கிருேம். தேவர்கள் இன்பம் நுகருகிருர்கள். நாங்கள் துன்பம் நுகருகிருேம். இதுதான் இருவருக்கும் உள்ள வேற்றுமை. கோபிகளது அன்பு அலௌகிகம், அற்புதம். அச்சுதனிடத்தில் அன்பு செலுத்துவது அவர்களுடைய கடமை யென்கின்றனர். ஒரு நாள் இராதையை நோக்கி லலிதா என்கிற தோழி கூறியதாவது- கோவிந்தன் இடம் சற்று கோபத்தைக் காட்ட வேண்டும். அப்பொழுது தான் அன்பு வளரும். கதிரவனைக் கண்டதுந் தானே கமலம் விரிகிறது. அது போல் கண்ணன் உன்னைக் காண வரும் போது நீ சற்று கோபக் குறியைக் காட்டி முகத்தைத் திருப்பிக் கொள். அப்போது அவன் உன் மையலில் விழுந்து மயங்குவான் என்ருள். ஆகட்டும் என்ருள் இராதை.

இதற்குள் கண்ணன் வந்தான். தோழி கூறியதை மறந்தாள். மலர்ந்த முகத்தோடு மாதவனைத் தழுவினுள். மறுநாள் லலிதா-இராதே! கண்ணன் வந்தானு? நீ அவனிடம் பேசாமலிருந்தாயா என்றெல்லாங் கேட்டாள். இராதை — லலிதா! நான் உன்னிடஞ் சொன்னதை மறந்து விட்டேனென்ருள்.

அடதியயத் பவான் அகனி கானனம் — இந்த வாக்கியத்தின் மூலமாகப் பிருந்தாவனத்தைக் கானனம் என்று சொல்லி கேலி செய்கிறார்கள். குத்ஸித ஆனனம் கானனம் என்பது இலக்கணம். இவ்வனத்திற்கு முகம் அழகில்லாதது.

இவ்வனத்திற்குள் விரஜராஜ குமாரன் நுழைந்து மறைந்து விட்டான். எனவே இவ்வனத்தில் எழில் குறைந்து விட்டது.

கம்-சுகம். ஆனனம் கானனம் என்பது மற்றொரு இலக்கணம். ஆனந்த கானனம் வனம் என்பது வேறொரு பொருள். கம் — பிரஹ்ம என்கின்றது சுருதி. இப்பிருந்தா வனத்தில் எங்கு பார்த்தாலும் எழிலும், இன்பமும் ஆம். இன்பம் நிறைந்து எழில் கொழிக்கும் இனியவனம் என்பது பொருள். இவ்வனத்திற்கு எழில் எங்கிருந்து வந்திருக்கிறது? சியாமசுந்தரன் பசுக்களை மேய்ப்பதற்காக இங்கு மங்கு மாய்த் திரிகிறான். அவனது அழகு இவைகளுக்குக் கிடைத் திருக்கின்றது. அழகிற்கு நிலயம் அச்சுதன்.

துருட்டியுகாயதே—அன்பன் ஆண்டவனைக் காணுமல் அரை நிமிஷங் கூட இருக்க மாட்டான். இஃது அவனது பலஹீனம். மீன் நீரில்லாமல் வாழ்தலரிது. அதுபோல் பக்தனும் பகவானைக் காணுமல் வாழ்தலரிது. துன்பம் வரும் போது நேரம் கழிவது அரிது. இன்பம் வரும் போது பொழுது போகிறது தெரியாது. உத்சவம் கொண்டாடும் போது நேரம் கழிந்ததே தெரியாது.

''துக்கிதஸ்ய நிசா கல்ப: சுகிதஸ்ய நிசா க்ஷணம்'' யோக வாசிட்டம். கவலையடைந்திருக்கும் மனிதனுக்கு இரவு கல்பம் போல கழியும், இன்பமான மனிதனுக்கு இரவு கணப் பொழுதில் கழியும் என்பது மேற்கூறிய வாக்கியத்தின் பொருள்.

சௌபரி யென்பவர் ஒரு ரிஷி. அவர் அதிக காமத்தில் மூழ்கியிருப்பவர். அவருக்கு விவாகம் நடந்தது. மனைவியின் பால் அதிக வேட்கை வைத்திருந்தார். இல்லற இன்பத்தை இடையறுது இனிது துய்த்து வந்தார். காலம் நேரங்கழிவது அவருக்குத் தெரிகிறதில்லை. ஒரு நாள் அதிகாலையில் எழுந் தார். துணைவியார் இன்று என்ன அவசரம் என்று கேட்டாள்.

அவர் சூரியன் உதயமாகி விட்டது. சந்தியாவதனம் செய்ய வேண்டும் என்றார். துணைவியார் — இன்று நவீன சூரியன் உதயமாகிறானா? நாள்தோறுந்தான் சூரியன் உதயமாகிறான், இன்றைக்கு மட்டும் இவ்வளவு விரைவு எதற்கு என்றாள்.

சிலருக்குத் தீயகாரியத்தில் பொழுது போகிறது தெரி கிறதில்லை. சத்சங்கத்தில் ப க வா னு டை ய கதையைக் கேட்கும் போது கரத்தில் கட்டியிருக்கும் கடிகாரத்தை அடிக்கடிப் பார்ப்பார்கள்.

கோபிகள்—மதநமோகந! உன் முகத்தைக் காணாமல் ஒவ்வொரு க்ஷணமும் ஒவ்வொரு யுகம் போல கழிகிறது என்றார்கள். ''குடில குந்தலம் ஸ்ரீ முகஞ்சதே'' கிருஷ்ண மூர்த்தே! நின்னுடைய சுருட்டரோமமும், ஸ்ரீமுகமும், எழில் நிறைந்த கன்னங்களும் எங்கள் நெஞ்சை உருக்குகின்றன. எந்த எழில் வெளியே இருக்கிறதோ, அந்த எழில் உனது இதயத்திலும் இருக்கவேண்டாமா? ஸ்ரீ நி வா ச ா! சொல். உள்ளேயிருக்குமானால் எங்கள் வாட்டத்தைக் கண்டு நீயும் வாடவேண்டாமா முகுந்தா! புவன சுந்தர! உனது அழகு நிறைந்த ஆனனத்தைக் காட்டாயோ என்றார்கள். ஆனனம் - முகம். உன்முகம் ஒன்றை அறிவிக்கிறது, உன் நெஞ்சம் மற்றொன்றை அறிவிக்கிறது. இஃது உ ல க ந டை க் கு ஒவ்வாது.

''நெஞ்சம் கடுத்ததைக் காட்டும் முகம்'' என்பது குறளமிருதம். கேசவா! நாங்கள் உனக்காகத் துடிக்கிறோம் வனத்தில். நீ மறைந்து இருக்கிறாய். இஃது என்ன நியாயம்? இஃது நினது சித்தத்தின் வஞ்சனையை எடுத்துக் காட்டு கிறது. பெரிய வீட்டுப் பிள்ளைக்கு இது அழகல்ல. ''நெஞ்சை யொழித்தொரு வஞ்சகமில்லை'' யென்பார்கள். மணிவண்ணா! மனந்திறந்து முன்னே வா.

''ஜடஉதீக்ஷ்யதாம் பக்ஷமகிருத் திருசாம்'' கோபிகள் நீ யெங்கள் முன்னே யெப்பொழுது ஓடி வருவாயோ அப் பொழுது உன்னைச் சிறந்தவனென்று சொல்லுவோம் என்றார்கள். முரளிதர! உன்னைக் காண இமைகள் துடிக் கின்றன. நீயோடி வந்து கத்தரிக்கோல் கொண்டு இமை களை வெட்டி விடு. கிருதி கிருந்தநே என்னும் தாதுவி லிருந்து கிருதி சப்தம் பிறந்திருக்கிறது. இதற்கு அர்த்தம் வெட்டுதல்.

ஸ்ரீகிருஷ்ணன் — கோபிகளே! என் முகத்தை நோக் கினால் நீங்கள் குரூபிகளாக ஆகிவிடுவீர்கள் என்றான். கோபிகள் — அதனால் ஒன்றுமில்லை. உன் திருமுகத்தைப் பார்ப்பதால் நாங்கள் குரூபி ஆனாலும் பரவாஇல்லை. உலக ளந்த உத்தமனே! நினது வதனத்தைக் காண்பிப்பாயாக. அன்பு மார்க்கத்தில் எண்ணி எண்ணி யெழுதுவதல்ல. அன்பு இதயத்தில் உதிக்கிறது. அன்பன் எதை யெண்ணுகிறானோ அதையவ்வாறே சொல்லுகிறான். ''சட்சுராக; பிரதம: அன்பு உதயமானதும் தன்இயல்பைக் கண்ணில் காட்டுகின்றது. பின்னர் கை வாய் செவி மெய் நாசி மனம் புத்தி சித்தம் என்னும் சகல அங்கங்களிலும் காட்டுகின்றன. ஆனால் முதலாவது நேத்திரத்தில் தான் காட்டும்.

ஆசக்தி — (விருப்பு) எங்கே யுண்டாக வேண்டும்? நந்தநந்தன் முரளிதரன் சியாமசுந்தரன் பீதாம்பரதாரி மதந மோகன ஸ்ரீநிவாசனிடத்தில் உண்டாக வேண்டும். உலகத் தில் ஆசையை வைப்பது பாம்புப் பொந்தில் கையை விடுவதோடொக்கும்.

துன்பம் வந்தால் பின்னால் இன்பம் வருகிறதென்று தான் அர்த்தம். நெருப்பில் விழுந்த தங்கம் மாசு நீங்கி ஆசு நகை வடிவமாக வந்து மிளிர்கின்றது. துன்பத்தில் தோய்ந்த மனம் இன்பத்திற்கு நிலையமாகின்றது. கொட்டிப் பார்த்து குடத்தை வாங்குவது போலும், தட்டிப்பார்த்து தங்கத்தை

வாங்குவது போலும். சோதித்துப் பார்த்து பக்தனைப்பகவான் தனது மடியில் வைக்கிறார். பிரேம மார்க்கத்தில் பிரிவோடு கூடிய பிரியம் சுகத்தை நல்கும். எவ்வளவு இனிப்பை உண்டாலும் இடை இடையே ஊறுகாயும், புளிப்பும் மோரும் இருந்தால் தான் உணவு ருசிகரமாக இருக்கும். அதுபோல் வாழ்க்கையில் சிறிது துன்பமும் வேண்டும்.

நிறைந்த அன்பு பிரிவில் தான் உண்டாகிறது. அன்பு மார்க்கத்தில் கஷ்ட மனுபவிக்கக் கூடா தென்றால் கஷ்டம் வந்த பின்னர் இனிய அன்பு நிலைத்திருக்கும் என்பது எப்படித் தெரியும்.

அன்பு சிலநேரம் நேராக வந்து இன்பத்தைத் தந்து விட்டுப் போய் விடும். சிலநேரம் பிரிவில் வந்து துன்பத்தைத் தந்து அழச் செய்து விட்டுச் சென்று விடும். அன்பு இவ்விரு நிலையிலும் வரும். எந்நிலையிலும் இறைவன் அன்பை மறவாதிருக்க வேண்டும். பிரகலாதன் ஒரு அசுரபாலகன். அவன் திருமாலிடத்தில் பெருமால் கொண்டிருந்தான். அதற்கு இடையூறுகள் எத்தனையோ எழுந்தன. அத்தனைக்கும் அப்பாலகன் அஞ்சாமல் அரியை நேசித்து வந்தான். இறுதியில் இறைவனடியை யெய்தினான்.

உத்தமபக்தனுக்குத் துன்பத்தில் தான் பக்தித் திடமாகின்றது. கோபிகள் அன்பின் வடிவம். அவர்கள் கூறுவதாவது — "அடதியத் பவான் அஹ்நி கானனம்" — நடநாகர! நீ யெப்பொழுது கானகத்திற்குச் செல்லுகின்றாயோ அப்பொழுது உனக்கு ஒரு க்ஷணம், உன்னைக் காணாமல் எங்களுக்கு ஒரு யுகம். ஒரு பொழுது ஒரு யுகமாகக் கழிகிறது என்றார்கள்.

அடதி - திருமால்! நீ உனது இச்சானுசாரம் வனத்தில் திரிகிறாய். சில தனவந்தர்கள் கோடைக்காலத்தில் கொடைக்கானல், ஊட்டி, சிம்லா (ஸ்ரீநகர்)காஷ்மீர், முதலிய இடங்களுக்குச் செல்வது போல செல்கின்றாய் மாதவா!

அஹ்னி — பகற் பொழுது. வனத்தில் பூக்கள் பூத் திருக்கின்றன. வண்டினங்கள் ரீங்காரம் செய்கின்றன. பசு இனங்கள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. பறவைகள் கூவிக் கொண்டிருக்கின்றன. அந்நேரத்தில் வனத்தில் உலா வுவது மிக மகிழ்ச்சியாக இருக்கும். அதற்காக அங்கு செல்லுகின்ருய். அப்போது உன்னைக் காணுமல் எங்கள் கண்கள் துடிக்கின்றன. நெஞ்சம் கொஞ்சமும் தஞ்ச மில்லாமல் அஞ்சுகின்றது.

பகலில் இந்தக் கதியானுல் இரவில் என்ன கதியாகும் என்பது உனக்குத் தெரியாதா மணிவண்ணு! நாங்கள் அபலா — மடவார்கள். பெண் பாலென்பது குறிப்பு. இரவு நேரத்தில் குழி, கல்லு, முள்ளு, பள்ளம், மேடு, மிருகங்கள், பாம்பு, தேள், கரடி, புலி, சிங்கம் முதலிய ஜந்துக்கள் திரி கின்ற நேரம். இவைகளால் ஒன்று நேர்ந்தால் என்ன வாகும் மனமோகன! சற்றுஎண்ணிப்பார்க்கவேண்டாமா? நந்தலால்!

துருட்டியுகாயதே — நொடிப் பொழுது யுகப் பொழு தாகக் கழிகிறது. அன்பு நஞ்சுக்குச் சமானமாகவும், அமு தத்திற்கு நிகராகவும் இருக்கும். எப்போதும் நஞ்சுமில்லை. எப்போதும் அமுதமுமில்லை. கனிவும் கசப்பும் இடையிடையே வரும்.

> இன்பமாயது இடையறாது ஓங்கவும்
> துன்பமாயதுத் தூரத்துள் நீங்கவும்
> முன்பராபரன் மொய் குழலோடணைந்து
> அன்பின் ஈன்றதோ ரானையைப் போற்றுவாம்.

என்று கவி கூறினுர். பொருள் வெளி. யானை - விநாயகப் பெருமான். நிழலின் அருமை வெயிலுக்குப் போனுல் தெரி யும் என்பார்கள். வெயிலும் நிழலும் போலுந்தான் துன்பமும் இன்பமும்.

சிருஷ்டியில் முதல் ஜீவன் பிரம்மா, பிரளயத்தில் இறுதி ஜீவனும் அயன் தான். மற்றைய ஜீவராசிகள் அன்று முதல்

இன்று வரை அனைத்து ஜீவராசிகளும் எவ்வளவு இன்பத்தை நுகருகின்றனவோ அவையனைத்தையும் சேர்த்தாலும் பகவானுடைய பிரிவால் வரப்பட்ட இன்பத்தில் எள்ளளவுங் கிடையாது என்று துளசிதாசர் கூறியிருக்கிறார்.

அது எதனாலோ வெனின்? எல்லா வுலகத்தையும் ஆட்டிப் படைக்கின்ற இறைவனது இன்பம் அகில உயிர்களையும் ஆட்டிப் படைக்கும், அன்பு மார்க்கத்தில் சென்ற அன்பனும் ஆண்டவனும் ஒன்றாகி விடுகிறார்கள். பிரிய கேசவ! நீ எங்கள் முன்னே வராத போது ஒரு பொழுது கல்பமாகக் காணப்படுகிறது. முன்னர் வந்த போது இமைகள் அசையாமல் நிற்கின்றன. இவைகளைப் படைத்த அயனிடத்தில் கோபம் வருகின்றது என்று கோபிகள் கூறினார்கள்.

''ஸ்ரீ முகஞ்சதே'' — ஞானிக்கு எல்லாமுகமும் ஒன்று தான். ஞானி அனைவரையும் நிஜஆன்ம வடிவமாகவே பார்க்கிறான். ஆகையால் யாரைப் பார்த்தாலும் இன்புறுகிறான். ஆனால் அன்பன் அவ்வாறன்று. பின்னே? அன்பனுக்கு ஆண்டவன் முகத்தைத் தவிர எந்த முகமும் நன்று இருக்கிறதில்லை. பார்க்க விரும்புகிறதுமில்லை.

குடில குந்தலம் - குந்தலம் - தலைரோமம். தலை ரோமத்திற்குக் குந்தலமென்று பெயர். நெற்றிக்கும் குந்தலமென்று பெயர். விரஜ ராஜமணி கிருஷ்ணமூர்த்தே! உனது குந்தலம்-தலைரோமம் குடிலம். பார்ப்பதற்கு எழிலாக இருக்கிறது. ஆனால் எங்கள் நெஞ்சை யுருக்குகிறது. இவ்வளவு எழிலும் பொலிவும் நிறைந்த இனிய முகத்தை எங்களுக்குக் காண்பிப்பாயாக. நடவரநாகர! நின்னுடைய பொலிவு எங்களுடைய இதயத்தைக் கொள்ளை கொள்கின்றது. மனதைப் புண் படுத்துகின்றது.

ஸ்ரீ கிருஷ்ணச் சந்திரன் முகம் அமிருத மழையை வருஷிக்கின்றது. அவனுடைய அரும் கூந்தல்கள் வாழ்வை அளிக்கின்றன. வாழ்வளிக்கும் வண்ணத்தோடுக் கூடியது. இவ்வளவு எழில் நிறைந்த ஆனனம் — முகத்தைக் காணும் போது இமைகள் இரண்டும் கீழே விழுந்து இடையூறு செய்கின்றன. உன் முகத்தைத் தெரிசிக்க வொட்டாமல் கண்ணை மூடிக்கொள்கின்றன. இதனுல் கோபம் வருகிறது நான்முகனிடத்தில். அயனுக்குத் தெரியாதா. நாங்கள் கண்ணன் முகத்தைக் காண விரும்புகிறேமென்று. தெரிந்தால் இப்படியேன் படைத்தான். அதனுல் அவன் மூர்க்கன்.

கோபிகள் — முகுந்தா! நாங்கள் உன்னிடத்தில் மோகங் கொண்டு எங்களுடைய உடைமை யெல்லாம் தியாகஞ் செய்து விட்டு (துவமேவ சரணம் மம) என்று ஓடி வந்திருக்கிறோம். அங்ஙனம் இருப்ப நீயெங்களோடு அநியாயஞ் செய்கிருய். இஃது முறைதானு? அழைக்கும் விதம் முறையாக இருக்க வேண்டும். எங்களைக் காணுமல் உனக்கு மிக வருத்தமிருக்கும். ஆகையால் நீ வாயென்ருல் வருவாயா, வரமாட்டாய். அதற்காக மாற்றி யழைக்க வேண்டும்.

பதினைந்தாவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் 16

பதிசுதான்வய ப்ராத்ரு பாந்தவான்
அதிவிலங்கிய தேஅந்த்யச் சுதாகதா
கதி விதஸ்த வோத்கீத மோஹிதா.
கிதவ யோஷித : கஸ்த்யஜேன் நிஸி 16.

இந்தச் சுலோகத்தில் பதியின் தியாகத்தால் பிள்ளைப்பாசம் நீங்கிவிட்டது. பிள்ளை ஆசையை விட்டதால் பொருளாசை நீங்கி விட்டது. பிள்ளைகள் பருவம் வந்ததும் பெற்றோர் களுக்குப்பொருளைத் தேடிக் கொடுக்கின்றன. உறவினர்கள் தியாகத்தால் உலகப்பற்று நீங்கி விட்டது. கோபிகள் — மாயவா! உண்மையான அன்பர்களைப் போல மூன்றுவித ஆசையையும் விட்டு விட்டோம் என்றார்கள். எல்லா ஆசை யையும் அறவே உதறித் தள்ளி விட்டு உன்னை நாடி யோடி வந்தோம் உன் சமீபம்.

கோபிகள் ஆறு வார்த்தைகளைக் கூறுகிறார்கள் — 1. முராரே! அச்சுத! நீ எங்களிடம் சொன்னது என்ன? அதைக் கடவாய். நீ சொன்ன சொல்லைக் காப்பாய் என் பதில் எங்களுக்கு விசுவாச மிருக்கிறது. 2. உலகளந்த உத்தமனே! உனக்காக நாங்கள் பெரிய தியாகஞ் செய் திருக்கிறோம். 3. கதிவித: நீயெங்கள் சமீபம் வந்துவிட்டாய். 4. எங்கள் நிலையுனக்குத் தெரியாததில்லை.

பக்தியைப் பற்றி பலர் பல்வேறு விதமாகப் பகர் கின்றார்கள். இன்னுஞ்சிலர் அன்பு அன்பு என்று அனவரதம் சொல்லுகிறார்கள். அனவரதம் = அடிக்கடி. ஆனால் அன்பின் அடிப்படையை அறிகிறதில்லை. அன்பிற்கு நூறுஎண் என்றால் அவைகளில் தொன்னுத்தொன்பது தியாகத்திற்காகும். ஒரு நவீன காசு கூடத் தியாகம் பண்ணாத மாந்தர்கள் அன்பிற்கு விளம்பரம் செய்வார்கள்.

அன்பு மார்க்கத்தில் தியாகம் முக்கியம். இதைக் கோபிகள் கூறுகிருர்கள் — மனித சமுதாயம் முன்னேற வேண்டுமாஞல் தியாக உணர்வு அவசியம் வேண்டும். மணி வண்ணு! கமலக்கண்ணு! நாங்கள் சகலத்தையும் தியாகஞ் செய்து விட்டு உன்னிடம் வந்திருக்கிறோம். தீனதயாளோ! நாங்கள் உனக்குப் பணிபுரிய சகலத்தையும் துறந்து வந் தோமையா. கோபிகள் கோவிந்தனை நோக்கி ஏ குடிலா! ஏகபடி! என்றெல்லாம் கூறியது பக்தியின் பெருமையைப் பாரில் எடுத்துக் காட்டும் பொருட்டு.

ஸ்ரீகிருஷ்ணன் முன்னமே கோபிகள் வீட்டில் வெண் ணெயைத் திருட வந்திருக்கிறான். ஒரு நாள், முகுந்தன் ஒரு கோபியின் இல்லத்திற்குச் சென்றான். உறியில் தொங்கும் தயிர்ப் பானையில் கையை நுழைத்தான். இதற்குள் அவ் வீட்டுக்காரி வந்தாள். முராரியை முனிந்தாள். என் வீட்டுக் குள் ஏன் நுழைந்தாய் என்றாள்.

முகுந்தன் — 1 கிம் தவகிரகம்? என்ன இது? உன் னுடைய வீடா? கோபி-ஆம் என்னுடைய வீடு. கிருஷ்ண மூர்த்தி- ஐயோ! என்வீடு என்றல்லவா வந்தேன் என்ருன். உண்மையில் வீடு யாருக்குச் சொந்தமென்று ஊகித்து உணர்க.

''அன்பெனும் குடில்புகும் அரசே'' இராமலிங்க சுவாமிகள். அன்பு = பக்தி. அதுவே குடில் = வீடு—இதயம். இறைவன் இதயம் என்கின்ற குடிசையில் நுழைகிறான். தண்ணீர் நிறைந்தத் தடாகத்தில் தாமரை வெளி வருவது போல் அன்பு நிறைந்த அகத்தில் ஹரிஹரன் நுழைகிறான். இறைவன் தனது உண்மை வடிவத்தை யொருபோதும் வெளிப்படுத்துவதில்லை. இரண்யாக்ஷன் முன் வராக வடிவ மாகவும், இரண்ய கசிபுமுன் சிங்க வடிவமாகவும், யசோதை முன் குழந்தை வடிவமாகவும், பகவான் வந்தார். இவை களில் ஒன்று கூட பகவானுடைய நிஜ வடிவமில்லை.

நாம் உண்மையாக இருந்தால் பகவானும் உண்மை வடிவத்தை யெடுத்து முன்னே வருவார். கிருஷ்ண! நீ யெங்கள் சித்தத்தைத் திருடிவிட்டாய். எனவே நாங்கள் எல்லாவற்றையும் தியாகஞ் செய்து விட்டு உன்பால் வந்திருக்கிறோம். பெரியோர்கள் கூறுவதாவது — தன் வாயால் தன்னுடைய தியாகத்தைப் புகழக் கூடாது. தன்னை வியந்தவன் விரைந்து கெடும் என்கின்றார் திருவள்ளுவர். கோபிகள் தன்வாயால் தங்கள் தியாகத்தைக் கூறுகிறார் கள். இந்திரன் கூட தன்வாயால் தன் புகழைப் பாடுவா னுயின் "லகுதாம்யாதி" — சிறியவனுவான். ஒருவரும் ஒரு போதும் தன் பெருமையை உரைக்கலாகாது. என்பது குறிப்பு. அங்ஙனம் இருப்ப எங்ஙனம் கோபிகள் தங்கள் தியாகத்தைத் தம்வாயால் உணர்த்துகிறார்கள்?

கோபிகளுக்குக் கவனம் இப்போது கிருஷ்ணனிடத்தில் இருக்கிறது. மாயவனைத் தேடி அத்தூயவர்கள் வனம் வன மாகத் தேடி அலுத்துப் போனுர்கள். கண்ணனைக் காணோ மென்று கண்கலங்கி நிற்கிறார்கள். செய்வனத் தவிர்வன சொல்வன இன்னதென்று தெரியாமல் தயங்குகிறார்கள். எப்படியும் கேசவனை யழைக்க வேண்டும் என்ற ஒரே நோக்கம். சிறிது தியாகத்தைப் பற்றிப் பேசினுல் என்ன? பெரிய தியாகிகள் நீங்கள் என்று கோபப்பட்டுக் கொண் டாவது கோவிந்தன் வரட்டுமே என்பதற்காகத் தியாகத் தைப்பற்றி பேசுகிறார்கள். வேறு காரணமல்ல.

பெரிய பெரிய மகான்கள் தியாகம் பண்ணி இறை வனையடைந்திருக்கிறார்கள்.

"நகர்மணு நபிரஜயா தனேன
தியாகே நைகே அமிருதத்வமாநசு:" கைவல்ய

உபநிஷத்து. இறைவன் கருமத்தினுல் அடைகிறதில்லை. நகர்மணு — சிரமப்படுவதாலும், வேள்வி, தவம், தானம், தீர்த்தம் இவைகளாலும் இறைவனை யெய்த முடியாது.

நபிரஜயா — பிள்ளை பெருவதாலும், பெண்டிர், மண்மனை இவைகள் மூலமாகவும் கடவுளைப் பெற முடியாது. மிகுந்த போகத்தாலும் முடியாது. எவ்வளவு விலை கொடுத்தாலும் பகவான் விற்கப்படமாட்டான். ஆகையால் பணத்தைக் கொண்டு பகவானைப் பெறலாம் என்று நினைப்பது தவறு.

தருமபுருஷார்த்தத்தாலும், அர்த்தபுருஷார்த்தத்தாலும், காமபுருஷார்த்தத்தாலும் வேறு எந்த உபாயங்களாலும் இறைவனை எய்த முடியாது. மகான்கள் தியாகத்தின் மூலமாக நிற்குண வடிவ பிரஹ்மத்தை அடைகின்றனரோ அது போல் நாங்களும் தியாகத்தின் மூலமாகச் சகுண வடிவ சியாம சுந்தரத்தைப் பெற விரும்புகிறோம் என்றனர் கோபிகள். தியாகம் = பதிசுதான்வய ப்ராத்ரு பந்தவான்- முக்கியத்தை அனுசரித்து முறையாக நாமம் கூறப்படு- கிறது. பதிமுக்கியம். பதி=கணவன். பெண்களுக்கு முக்கியம். அதன் பின்னர் புத்திரன். அதன் பிறகு மாமனார் குலம். இதன் பின்பு பெண்ணுக்குத் தாய்குலத்தில் சகோதரன் முக்கியமாகிறான். பந்துக்கள் (கிளைஞர்கள்) இருகுலத்திற்கும் சம்பந்தமுடையவர்கள். வனிதைக்கு மேலான தருமம் பதிசேவை. ஆதலால் பதித்தியாகஞ் செய்வதால் தரும புருஷார்த்தம் தியாகம் ஆகிவிட்டது.

புத்திரன் காம புருஷார்த்தம். காமப் பொருள்களிலே புதல்வனுக்கு முக்கியத்வமிருக்கிறது. ஆகையால் புத்திரனைத் தியாகம் செய்ததும் காமபுருஷார்த்தம் தியாகம் ஆகிவிட்டது. வம்சத் தியாகத்தால் புகழைத் தியாகம் செய்தாகி விட்டது. சகோதரத் தியாகத்தால் உலகத் தியாகம் முடிந்து விட்டது. உறவினர்கள் தியாகத்தால் மரியாதை தியாகமாகி விட்டது. தமர்களிடம் ஜனங்களுக்கு மரியாதை மிக இருக்கும். எனவே அவர்கள் தியாகத்தால் மரியாதையும் நீங்கி விட்டது.

அதிவிலங்கிய - மேற்கூறியவர்களை எந்தவிதத்திலும் தியாகம் பண்ணவே கூடாது. பொதுவாகக் கணவன், மைந்தன், தமயன்' தம்பி, தமர்களைத் தியாகம் பண்ணுவது முறையன்று. அவ்வாறு தியாகஞ் செய்வது தருமம் அல்ல. அறத்திற்கு விபரீதமாகும். இங்ஙனமிருப்ப இவர்களைத் துறக்கவில்லை, பின்னை முற்றிலும் துறந்து விட்டோம் என்கிறார்கள் கோபிகள். இவர்கள் எங்களை மிக முயன்று தடுத்தார்கள். நாங்கள்அவர்களை மதியாமல் விட்டு விட்டு வெளியேறினோம்.

கண்ணனைக் காண நீங்கள் போகக்கூடாது என்று நாயகன் மைந்தர்கள் உறவினர்கள் எல்லோரும் தடுத்தனர். நாங்கள் அதை மீறினோம். கோவிந்தன் குழலோசையால்

நாங்கள் மயங்கி அவன் வயப்பட்டு விட்டோம். அதனால் அவர்கள் சொற்களைக் கேட்டு நிற்கவில்லை. மாத்திரு சம்பந்தி மாதா, பிதா, சகோதரன், ஆகியோர் எங்களை வழிமறித்துச் சத்யாகிரகஞ் செய்தனர். தரையில் படுத்து விட்டனர். இந்நிலையிலுங்கூட 'அதிவிலங்கிய' அவர்களைப் புறக்கணித்து விட்டுக் கோபாலனிடம் சென்றனர்.

இறைவனை யெய்திய பின்னர் ஞானி திரும்புவதில்லை. ''மீட்டிங்கு வாரா நெறி'' அஞ்ஞானிகளுக்கு திரும்பி வர நேரும். ஞானம் வழியடைக்கும் கல். சம்சாரப் பாதையை அடைத்து விடும். அப்பொழுது கோபிகள் கூறுகிறார்கள்- 'கதிவிதஸ்தவ' முராரே! நாங்கள் நிலைமையை நன்கு அறிவோம். ஒருமுறை பிருந்தாவனத்தில் பசுக்களை மேய்த்துக் கொண்டிருக்கும் போது கோபாலர்களுக்குப் பசி நேர்ந்தது. எல்லோரும் கண்ணனை மருவி மறுகினார்கள். கேசவா! பசி வாட்டுகிறது சோறு வேண்டும் என்றனர். பகவான்- கோபகுமாரர்களை அழைத்து மாதுர பிராமணப் பெண்களிடஞ் சென்று பகவான் உண்பதற்கு உணவு வாங்கிவர அனுப்பி வைத்தார். அவர்கள் அங்கு சென்று அவர்களிடம்

பகவான் சொன்ன மாதிரி சொன்னார்கள். பிரமாண மகளிர்கள் உணவு இல்லையென்று கூறிக் கோபாலர்களை அனுப்பி விட்டுத் தாமாகவே உணவுகளைத் தலைமிசை சுமந்து கொண்டு வந்தார்கள். அவர்களையும் அவர்களுடைய பதி மார்கள், தமயன், தனயர்கள், உறவினர்கள் தடுத்தார்கள். அவர்கள் அவர்களை மீறி பகவானிடம் வந்தார்கள். இவ் விஷயத்தைச் செவிமடுத்தக் கம்சன் முனிவு கூர்ந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் இடையன். அவன் சமீபம் செல்வது நன் றன்று என்று கம்சன் கடிந்தான்.

அந்தணமாதர்கள்—இவர் வழிமறித்தும் நிற்கவில்லை. அவர்கள் கேசவன் அருகாமைக்கு வந்தனர். முகுந்தன்—அவர்களை நோக்கி ஸ்வாகதம் வோ மகாபாகா என்று கரத்தைத் தூக்கினார். ஸ்வாகதம் = வரவேற்பு. வேதியர் மடவார்களே! வீட்டிற்குச் செல்லுங்கள் என்றான் விமலன். அவர்களும் மறுத்து விட்டனர். கோவிந்தா! இவ்வாறு கூறுவது அழகல்ல. நாங்கள் மறையவர் மகளிர். வேதங் களைப் படித்திருக்கிறோம். அதன் இரகஸ்யத்தைக் கேட்டும் இருக்கிறோம். உன்னையடைந்த ஜீவர்கள் திரும்பிச் செல்வ தில்லை. எனவே வேதவாணியை உண்மையாகச் செய். முராரே! நாங்கள் இங்கிருந்து வீடு திரும்பினால் எங்களை யெங்கள் கணவன்மார்களோ, பிள்ளைகளோ, கிளைஞர்களோ ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

தேவிமார்களே! அஞ்சற்க. உங்களை வரவேற்பதற்காக உங்கள் பரிவாரங்கள், பதிமார்கள், பெற்றோர்கள் அனை வரும் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். அன்புடன் நீங்கள் ஏகலாம் என்றான், பகவான் சொன்ன வார்த் தையைக் கேட்ட பார்ப்பார் பாவைகள் – பரந்தாமா! இவ் வாறு ஈரம் இல்லாத வார்த்தையை இசைக்கலாகாது என்றார்கள்.

நாங்கள் வேதங்களை நன்குக் கேட்டிருக்கிறோம். உன்னையடைந்த ஜீவர்கள் மீண்டும் சம்சாரத்தை நோக்கிச் செல்வதில்லை யென்று சுருதிச் சொல்லுகிறது. ஆகையால் வேதவாணியைச் சத்தியமாகச் செய். இஃதல்லாமலும் இனி நாங்கள் திரும்பிபோனால் எங்கள் பதிமார்களோ, பையன் மார்களோ பந்து வர்க்கங்ளோ யாரும் விரும்பமாட்டார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன்—இதுதான் பயமா? போதும் போதும் அஞ்சற்க. மாதுர பிராம்மணர்கள் உங்களை வரவேற்க எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். என்னிடமிருந்து திரும்பிய உங்களை நம்பாக்கியமென்று கருதுவார்கள். இதனால் அவர்களுக்குத் திரும்பிப் போகும்படி நேர்ந்தது. அவர்கள்= பிராம்மணப் பெண்கள்.

கோபிகள் கண்ணன் குழலோசைக் கேட்டதும் கதி கலங்கினார்கள். கணவன், மைந்தன், உறவினர் முதலியோர் கள் மறித்தனர். இவர்களையும் மீறி அவர்கள் அச்சுதனிடம் சென்றதும் முன்போலவே ''சுவாகதம் வோ'' என்று வர வேற்றான். வந்தவர் அனைவரோடும் இனிமையாய் உரை யாடிய பின்னர் நீங்களும் திரும்பிப் போகலாமென்றான். இம் மொழியைக் கேட்ட பாவையர்கள் நிலையைப் பற்றிச் சுக பிரஹ்மம் கூறுவதாவது —

''ததர்த்த விநிவர்த்தித சர்வகாமா:''

கோபிகள் சம்சாரத்தில் உள்ள எந்தப் பொருளையும் விரும்பு கிறதில்லை. ஒருவாறு விரும்பினாலும் தங்கள் பொருட்டு விரும்புகிறதில்லை. கோபிகள் தரித்திரிகள் அல்ல. போக போக்கியங்கள் அவர்களிடம் நிரம்பியிருந்தன. எந்தப் பொருளுக்கும் அபாவம் இல்லை. சகல சௌபாக்கியசாலி களாக இருந்தனர். இவ்வளவு இருந்தும் அவர்களுடைய மனம் அச்சுதனிடத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. தேனில் விழுந்த ஈ அதிலிருந்து எழ முடியாதது போல் மாயவனி

டத்தில் விழுந்த மனம் அவனிடத்தில் பதிந்து விட்டது. அவன் நிமித்தமாக அவர்கள் அனைத்து போகத்தையும் துறந்தார்கள். துச்சமாகக் கருதினார்கள்.

உண்மையும் அதுதான். பால் கிடைத்தபின் கூழ் துச்சமாகத்தான் தெரியும். இறைவன் அரிசி போல. உலகமும் உலக போகமும் பதறு போல் கருதி பரனை நினைந்து இம்மூன்றையும் விட்டதே பேரின்பவீடு என்று ஔவையார் அருளினார். இறைவனுக்காக எதையும் விடலாம். அதனால் குற்றமொன்றுமில்லை. நாங்கள் உன்னை நன்கு அறிவோம். நீ தருமத்தை நன்றாகப் புரிந்திருக்கிறாய். மாயவா! உனக்குத் தெரியாததொன்றில்லை.

உண்மையில் ஓர்ந்து கூர்ந்து பார்த்தால் தெரியும் நீதான் பந்தும், நீதான் பரிஜனமும் நீதான் சகலமும் நீயே சாரங்கபாணே! "அம்மையும் நீ அப்பனும் நீ அன்புடைய மாமனும் மாமியும் நீயே" என்கின்றது தேவாரம். பொருள் வெளி. பொன்னும் நீ பொருளும் நீ பூவிலுள்ள மணமும் நீயென்ற வாக்கியம் எல்லாம் இறைவன் என்பதை எளிதில் புலப்படுத்துகின்றது. எனவே எங்கள் இடத்தில் நீ அன்பு செய்வாயாக என்றனர். நீ யெல்லாருடைய துயரங்களைத் துடைப்பவன். ஆதலின் எங்கள் தீயசமஸ்காரத்தைப் போக்கி நல்ல சமஸ்காரத்தையளிப்பாயாக கேசவ!

நாங்கள் குடும்ப வேலையை விட்டு விட்டு உன் வேலையைச் செய்ய வந்திருக்கிறோம். மணிவண்ணா! கமலக் கண்ணா! கண் பார், ஆசையோடு உன் சமீபம் வந்திருக்கிறோம். அதைப் புரிந்து செய்வாய் என்றனர். நாங்கள் எங்கள் நலத்திற்காக வரவில்லை. பின்னை, உனக்குப் பணி புரிய வந்தோமய்யா.

சிலர் அர்த்த சந்நியாசியாகி விடுகிறார்கள். அவர்கள் பொருளைத் தியாகஞ் செய்கிறார்கள். சிலர் காம சந்நியா சியாகியிருக்கிறார். இவர்கள் காம போகத்தை விட்டு விடு

கிறார்கள். சிலர் தரும சந்நியாசியாக இருக்கிறார்கள். இவர்கள் சந்தியா வந்தனத்தை விட்டு விடுகிறார்கள். சிலர் பரிஜன சன்னியாசி. அவர்கள் பரிஜனங்களை — கிளைஞர்களைத் தியாகம் செய்கிறார்கள். தியாக மார்க்கம் மிகச்சிறந்தது.

''நவா அரே ஸர்வஸ்ய காமாய சர்வம் பிரியம் பவதி
ஆத்மநஸ்து காமாய சர்வம் பிரியம் பவதி''

சம்சாரத்தில் பதி பத்னி மாதா பிதா சகோதரன் சகோதரி புத்ரன் மித்ரன் அன்பன் இவர்களுக்காக யாரும் எதையும் விரும்புவதில்லை. நட்பும் வைக்கிறதில்லை. தனக்காகவே ஒருவரோடு ஒருவர் கேண்மை வைப்பார்கள். இஃது ஞான மார்க்கம்.

''புத்ராத்ப் ப்ரேய: வித்தாத் ப்ரேய: அந்யஸ்மாத் ஸர்வஸ்மாத் பிரேய: இது சம்சாரமார்க்கம். பொதுவாகக் கூறப்போனால் சகல சுகமும் தனக்காகவே தான்.

வேறு விதமாகவும் கோபிகள் மனப்பாங்கை நினைக்கலாம். ஒருமுறை அருஜுனனும் அச்சுதனும் உறங்கினார்கள். அச்சுதன் விழிக்கும் முன் அருஜுனன் விழித்தான். ஸ்ரீ கிருஷ்ணன் வாயிலிருந்து கோபிகள் நாமம் வந்த வண்ணமாக இருந்தது. விழித்தபிறகும் வந்தது. அருஜுனன்-அச்சுதா! இரவும் பகலும் கோபிகள் நாமத்தைக் கூசாமல் கூறிக்கொண்டேயிருக்கிறாயே மற்றவர்கள் நாமத்தை விட அவர்கள் நாமத்தில் என்ன விசேஷம் இருக்கிறது என்றான். ஸ்ரீமுகுந்தன் - அன்பனே! என் ஆருயிர் தோழனே! அருஜுன நான் கூறுவதைக் கவனமாய்க் கேள் — கோபிகள் தன்மையைக் கேட்கின்றாய்? அவர்கள் தங்கள் உடம்பையும் தங்களுக்கென நினைக்கிறதில்லை. தங்கள் கண்களில்(அஞ்ஜனம்-) மை தீட்டுகிறார்கள். இக்கண் கேசவனுக்குச் சொந்தமென்று தீட்டுகிறார்கள். ஸ்நானஞ் செய்கிறார்கள், எனக்காகச் செய்கிறார்கள். ஆடை அணிகலன்களை யணிகிறார்கள் யாருக்காக? மாதவனுக்காக. மலர்களைச் சூடுகிறார்கள்? கிருஷ்ணனுக்காக.

மைத்துனு! அவரிடம் என்ன இருக்கிறதோ அவை-பொன், பொருள், மண்மனே, உடல்உடைமை, பிராணன் இந்திரியம் சகலமும் ஜநார்த்தனுக்காகத்தான். ஆகையால் அவர்கள் அன்பின் மிகுதியால் அவர்கள் நாமத்தை அடிக்கடி அனு தினம் சொல்ல வேண்டியிருக்கிறது என்றான் முகுந்தன். கோபிகள் பக்தியில் ஆசை அணுவளவுமில்லே. இதைக் குறிப்பிட்டு நாரதர் கூறுவதாவது—

"ஸா நகாமயமாநா நிரோத ரூபத்வாத்" நா. சூ.சுருதி யெல்லாம் தனக்காக என்கின்றது, கோபிகள் கூறுகிருர்கள் பக்தியெல்லாம் பாலமுகுந்தனுக்காக என்கிறார்கள். எனவே ஞானமார்க்கத்தை அறிவிப்பது சுருதி. பக்திமார்க்கத்தை அறிவிப்பவள் கோபி. உத்தவர் சொன்னுர்—

பக்திமார்க்கத்தில் முக்தி சிறியது, பக்தி பெரியது. எனவே கோபிகள் மார்க்கம் சிறந்த மார்க்கமென்பது தெளிவு. சுருதிகள் மனதில் ஸ்ரீகிருஷ்ணனே அடையவேண்டு மென எண்ணங் தோன்றியது. ஒரு மகானிடஞ் சுருதி சென்றது. மகான் வந்தவிஷயம் என்னவென்று சுருதியை விசாரித்தார். சுருதி — ஸ்ரீகிருஷ்ணனே அடைய விரும்புகி றேன் என்றது. மகான் — சுருதியே! நிற்குணம் நிராகாரம் சச்சிதானந்த வடிவபூர்ண பிரஹ்மம் உனக்குக் கிடைத்திருக் கிறது. அங்ஙனம் இருப்ப சகுணவடிவ ஸ்ரீகிருஷ்ணனே யேன் விரும்புகிறாய் என்று மகான் வினவினுர்.

சுருதி — பிரஹ்மத்தின் அடைவு அடைவல்ல. அது நித்தியம் அடைந்திருக்கிறது. நேதி நேதி செய்து பார்த்தால் எல்லாம் நீங்கி அதுதான் மிஞ்சியிருக்கும். அது = பிரஹ்மம். நான் விரும்புகின்ற தெய்வம் என்னேடு கொஞ்சி குலாவி பேசவேண்டும் என்றது சுருதி. இவ்வாறு இருக்க வேண்டு மானுல் சத்சங்கம் பண்ணவேண்டும் என்ருர் மகான்.

பத்மபுராணப் பாதாள கண்டத்தில் காயத்ரி, பிரஹ்ம வித்தை முதலிய சுருதிகளில் சொல்லி இருப்பதாவது—

கண்ணனைக் காண பல சாதனங்களைச் செய்ய வேண்டும் என்றும், அதில் ஜபம் தபம் முக்கியம் என்றும் மொழிந் திருக்கிறது. கோபிகள் கோவிந்தனை ஹே அச்சுத! என்று அலறுகிறார்கள். சுதம் = அழிவு. எது எதனாலும் அழிகிற தில்லையோ அது அச்சுததத்துவம். கிருஷ்ணத்தத்துவம் அழி கிறதில்லை. எனவே ஸ்ரீகிருஷ்ணனுக்கு அச்சுதன் என்றொரு பெயர். எங்ஙனம் பிரஹ்மம் தன்னுடைய சத் சொரூபத்தி லிருந்து நழுவுகிறதில்லையோ அங்ஙனம் ஸ்ரீ கிருஷ்ணனும் எதனாலும் அழிகிறதில்லை.

தங்கத்தினால் இருவடிவம் செய்யப்பட்டது. ஒன்று சிரித்தமுகம், மற்றொன்று அழுதமுகம். இருவடிவம் வேறாக இருப்பினும் தங்கம் ஒன்று தானே. யார் எப்படியிருந்தாலும் அவர் சத்துச் சித்து ஆனந்தவடிவமே. கோபிகள்-கோபாலா! நீ யெங்களுக்கு வரங்கொடுத்திருக்கின்றாய். அதில் இருந்து நழுவக்கூடாது. நழுவுதல் நினது செயலல்ல என்றார்கள். முராரே! உன் பிடிவாதத்தை விட்டு எங்களுக்குச் சன் மானத்தைக் கொடு. எங்கள் அழுகைக் குரல் உன் காதில் விழவில்லையா? எங்கள் சிரிப்பொலி நினது செவியில் ஏன் விழவில்லை? அமரரேறே! மணிவண்ணா! மண்ணளந்த மாயவா! வா. ஒளியாதே உத்தமா!

காமம் எதைத் தீண்டுவதில்லையோ அது அச்சுதத் தத்துவம். உன்னை நாங்கள் ஒரு முறையடைந்துவிட்டோம், இனியுனைப் பிரிந்தால் சுருதிப் பொய்த்துப் போகும். சுருதிப் பொய்த்துப் போனால் உனக்கு இழுக்கு.

அச்சுதாகதா:— (நாரணா!) நாங்கள் திரும்பிப் போவ தற்காக இங்கு வரவில்லை. நீயிங்கு வந்து தரிசனங் கொடுக்க வில்லையென்றால் நாங்கள் இங்கே ஆவியைத் துறப்போம், யாக்கையை விடுப்போம் என்றார்கள்.

அதி விலங்கிய — இறைவா! இனிமையாய்க் கேள். எங்கள் கணவரையும், எங்கள் கண்மணிகளையும் தியாகம்

பண்ணினது மட்டும் அல்ல, பின்னே? அதிவிலங்கிய - அவர்க ளிடத்தில் மாயா மமதையில்லே. மற்றுப்பற்றும் இங்கு இல்லே. இங்கு = எங்களிடத்திலில்லே. ஈசுவரனேயடைய வேண்டு மானல் பொன் பொருள் இவைகளே விட வேண்டியிருக் கிறது. சேமிப்புகளேயும், போகங்களேயும் தள்ளிவிட்டு இறைவனே நோக்கி செல்லவேண்டும். ஆனுல் தருமத்தைத் தியாகஞ் செய்ய வேண்டியதில்லே. தருமபரிபாலனம் அவசி யஞ் செய்ய வேண்டும்.

அன்பர்கள் மோட்சத்தை விரும்புகிறதில்லே. ஆனுல் மரியாதையை யாரா இருந்தாலும் காக்க வேண்டும். ஸ்ரீ கிருஷ்ணு! உனக்காக எல்லாவற்றையும் விலங்கனம் = தாண்டிவிட்டோம். இனி தாண்டுவதற்கு ஒன்றுமில்லே.

அந்தி ஆகதா: — கிருஷ்ணு! நாங்கள் உன் அருகா மைக்கு நெருங்கி விட்டோம். உண்மையில் ஓரும் போது ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் இடைவெளி – தூரம் – சமீபம் என்பதில்லே. இருப்பினும் மலவிக்ஷேப ஆவரணத்தின் கார ணமாகத் தூரசமீபம் இருப்பதுபோல்காணப்படுகிறது. அது மயக்கம். கோபிகள் மனம் தூய்மையானது. பரிசுத்தமானது. பகவானிடத்தில் பற்றுடையது. அங்ஙனம் இருப்ப எங்ஙனம் மலம்விட்சேபம் ஆவரணம் இருக்கக்கூடும் என்பது கேள்வி. அது உண்மை தான்.

சமீபத்திற்குப் பொருள் நம்இருவருக்கும் இடைவெளி யில்லேயென்பதுதான். ''இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க'' திருவாசகம். இஃது காலத்தைக் குறிக்கிறது. 'எங்கும் பிரகாசமாய்'' தாயுமானுர். இஃது வஸ்துவைக் குறிக்கிறது. ''பரிபூரணுனந்தமே'' இஃது தேசத் தைக் குறிக்கிறது. இந்நிலேயில் ஆன்மா இருக்கிறது. அப்படி இருக்க எப்படி ஜீவ ஈசுவரருக்கத் தூரம் இருக்க முடியும்?

இராதை கிருஷ்ணனுடைய அந்தரங்க சக்தி. கோபிகள் இராதையின் அம்சவடிவங்கள். பகிரங்க சக்தி. இவ்வுலக மனைத்தும் பகவானுடைய சக்திகள் தான்.

கதிவித :- முகுந்தா! எங்கள் நிலைமையை நீ நன்கு புரிவாய். ''விஸ்வாநி தேவ வயுநாநி வித்வாந்'' ஈ உபநிஷத்து. ஏ தேவ! ஏ பரமாத்மன்! வயுநாநி எங்கள் வினைகளை. வித்வான் = நன்றாக அறிவாய் என்றுஉபநிஷத்தின் ஒள்ளியப் பொருள். பொதுவாக நம் வினைகளை நாரணன் நன்கு அறிகிறான் என்பது துணிபு. கோபாலன் - பெண்பாவாய்! உங்களுக்கு என்னைப் பற்றி நன்றாகத் தெரியும். கோபிகள் - என்ன தெரியும்? நான் உலகத்தைத் தோற்றி வைத்து நிலை நிறுத்தி லயப்படுத்துகிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். ''மயி சர்வம் லயம் யாதி'' சகலமும் என்னிடத்தில் ஒடுங்குகின்குன.

கோபிகாள்! ஜகத்திற்கு ஆதிபீஜம் நான் தான். ஆதிபீஜம் முதற்காரணம். கதிவித:- சங்கீதத்திற்கு மர்மக்ஞன் நீ தான், கோவிந்தன் சங்கீதகலாநிதி. சங்கீதம் = கான வித்தை. கானவித்தை நாயகன் கண்ணன்.

''காயந்தம் ஸ்த்ரய: காமயந்தே'' சங்கீதம் பாடுகின்ற மனிதனை மகளிர்கள் விரும்புகின்றனர். இதனுனும் பகவான் கேசவன் கானவித்தையில் சிறந்தவன். இவரை வனிதையர் அனைவரும் விரும்புவதில் அதிசயம் என்னை? ஒன்றுமில்லை யென்பது குறிப்பு.

தவஉத்கீத மோஹிதா:- முராரே! நீபெரிய சங்கீதக்ஞன். உன்னுடைய குழலோசையைக் கேட்டு நாங்கள் உன் பேரில் மோகத்தை அடைந்து விட்டோம். உன் கானம் எங்களை நின் வசமாக ஈர்த்து விட்டது. ஆகவே இங்கு வந்தோம் என்றார்கள். சங்கீதத்தின் பெருமையென்ன? கேட்டவர்கள் சங்கீத வித்வானுடன் செல்வது தான். சென்று அவருடன் சற்று உரையாடுவது தானே பெருமை.

கிதவ யோஷிதாம் கஸ்த்யஜேந் நிசி — மாயவா! உன் மாயாவித் தனத்தை அறிவோம். யாராவது இரவில் வனத்திற்கு வரச் சொல்லி வந்த பின்னர் வீட்டிற்குப் போகச் சொல்வார்களா? நீ யெங்களைப் போகச் சொல்கின்றாயே இது முறைதானா? மேலும் எங்களைத் தனியாக விட்டு விட்டு மறைந்திருக்கின்றாயே இது எங்ஙனம் நியாயமாகும்?

கிருஷ்ண! நீயிங்கு வந்தது எதற்காக? ஆதரிக்கின்ற மஹிலாவை நிராகரிக்கவா வந்திருக்கின்றாய்? சொல். சொல்லு செல்வனே! கோபிகள்—தவ உத்கீத மோஹிதா:— என் செய்வது இறைவா! உன்னுடைய கானம் எங்கள் உடைமைகளைக் கொள்ளை கொண்டது. எனவே எங்களை நாங்கள் மறந்தோம். உன்னை ஓயாது நினைந்தோம். உன் வயமானோம்.

ஒன்று காயனம், மற்றொன்று உத்காயனம். மக்கள் வெகுகாலம் பழகி சங்கீத ஞானத்தை அடைகிறார்கள். மிக முயன்று சங்கீதஞானத்தைப் பெறுகிறார்கள். உணவு உண்ட பின் ஏப்பம் வருகிறதே அது மிக முயன்று வருகிறதில்லை. உணவின் திருப்தியால் வருகிறது. தடுத்தாலும் ஏப்பம் நிற்காது.

யாரிடத்தில் ஆண்டவன் நிமித்தமாக அன்பு வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறதோ அவருள்ளத்தில் அவ்வன்பு சங்கீதமாக மாறுகின்றது. இயல்பாகத் தோன்றுவதால் இதற்கு உத்கானமென்று பெயர்.

நந்தலால்! உனது இதயத்தில் எழுந்த உத்கானத்தினால் நாங்கள் நினைவை யிழந்து உன்னை நாடி ஓடி வந்தோம். ஸ்ரீ ஹரே! உன்னிடத்தில் அன்பிருக்கிறது, ஞானமிருக்கிறது, தியாகமிருக்கிறது. சங்கீதத்தின் ஞானமிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணன் — ஆம் என்னிடத்தில் எல்லாமிருக்கின்றன.

ஆனாலும் இந்நேரத்தில் இங்கு வருவது நியாயமில்லை யென்றான் கேசவன். மேலே சொன்ன குணங்கள் கோபிகளாகிய உங்களிடத்திலேயும் இருக்கின்றன. இருப்பினும் தகாத வேளையில் வருவது உசிதமல்ல.

கோபிகள் — நாரணா! எவ்வாறு காமதேவனிடத்தில் பஞ்சபாணம் இருக்கின்றனவோ அதுபோல உன்னிடத்திலும் பஞ்சபாணம் ஐந்து கணைகள் இருக்கின்றன. அவ்வைந்து பாணங்களால் எங்களைப் புண்படுத்தி விட்டாய். அப்புண்ணுக்கு மருந்து உன்னிடந்தான் இருக்கிறது. நீ தான் வைத்தியநாதப் பெருமாள்.

பதினாறாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 17

இரஹஸி சம்விதம் ஹிருச்சயோதயம்
பிரஹசிதாநநம் பிரேமவீக்ஷணம்
பிரஹதுர : ஸிரயோ வீக்ஷ்ய தாம தே
முஹுரதி ஸ்பிருஹா முஹ்யதேமந: சு. 17.

ரஹசி சம்விதம்—ஏகாந்தத்தில் சந்திக்க விரும்பிப் பிரார்த்தனை செய்து கொண்டு பகவானோடு உரையாட விரும்பினார்கள். உன்னுடைய பேச்சுச் சாதுரியம் எங்கள் மனதைக் கவர்ந்தது. அதனால் நாங்களும் கவரப்பட்டோம்.

ஹிருச்சியோதயம் — தனிஇடத்தில் சந்திக்க விருப்பம் உனக்கும் நேர்ந்தது. உனது சரீரம், நேத்ரபங்கி — சங்கேதம், காத்திர நடுக்கம் முதலிய எல்லாம் கண்ணன் நம்மை அடைய விரும்புகிறான் என்று தெரிந்தது.

பிரஹசிதாநநம் — உனது சிரித்த முகத்தைப் பார்த்ததும் எங்கள் மனம் நின் பால் மையல் கொண்டது. மயங்கினோம். தயங்கி நின்றோம். தாமோதரா! சற்று தயவு செய் தயாபரரா!

பிரேமவீக்ஷணம் — அன்பு நிறைந்த உள்ளத்தால் எங்களை நோக்கினாய். இதனாலும் எங்கள் சித்தம் உன் வசமாயிற்று, எனவே மதிமயங்கி நிற்கிறோம். மாதவா! நின் மதிமுகத்தைத் திரும்பிக்காட்டாய்.

பிரஹதுர: ஸ்ரீய: வீக்ஷ்யதாமதே - உன் எழில் நிறைந்த வதனத்தையும் மார்பையும் கண்டு களித்து நிலைகுலைந்து நிற்கிறோம். மேலே சொன்ன ஐந்தும் ஐந்து பாணங்கள். இவைகள் எங்கள் மனத்தைக் காயப்படுத்தி விட்டன. ஸ்ரீ கிருஷ்ணச் சந்திரனுடைய மார்பு திருமகளுக்கு உறைவிடம். அவனுடைய முகம் நேத்திரத்திற்குப் பானபாத்திரம். பருகும் கிண்ணம்.

முஹரதி ஸ்பிருஹா — இதயத்தில் ஆசை வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அடையப்படாதப் பொருளை

அடைய வேண்டும் என்று காமனை யுண்டாகிறது. எந்தப் பொருள் நமது கைவசம் இருக்கிறதோ அதை மிகுதியாக ஆக்கவேண்டுமென்று எண்ணமுண்டாகிறது. இது லோபம். பொருள் இருக்கிறது, பெருகிக் கொண்டு மிருக்கிறது. ஆனால் சந்தோஷம் வரவில்லை. இது திருஷ்ணை. இருக்கிற பொருளில் குறையவும் நஷ்டமாகவும் கூடாது. இது ஸ்பிருஹா. அதிக ஆசை. உன்னை நினைக்கவும் உன்னோடு உரையாடவும் மனம் விரும்புகின்றது. ஜனார்தன! நீ யில்லாமல் எங்களால் வாழமுடியாது. உயிரோடு இருக்க இயலாதென்பது குறிப்பு.

ரகஸிசம் விதோ ஹிருச்சயோதயம் — தனியிடத்தில் நீ யெங்களிடம் என்ன வார்த்தைகளை உரைத்தாயோ அவைகளை நினைக்கும் போது நினது மார்பில் மலர்மகள் வாசம் செய்யும் போது எங்கள் மனதில் கொதிப்பு உண்டாகிறது. என்? நாங்கள் தீண்டுகிற மார்பில் சக்களத்தி போல் இருக்கிறாளே பூமகள் என்று மனதில் கொந்தளிப்பு உண்டாகிறது. மீண்டும் உன்னை நினைக்கணும் பார்க்கணும் போல இருக்கிறது என்றார்கள்.

நீ அவதாரம் எதற்காக எடுத்தாய் சொல். புவன மனமோகன! விஸ்வ கல்யாணத்திற்காகத் தானே எடுத்தாய். நாங்களும் உலகத்திற்குள்ளே தானே யிருக்கிறோம். எங்களுக்கும் நன்மை செய்வது உனது கடமை தானே. ஏ திரிபுரசுந்தர! உலகமக்களுக்கு இன்பமும் உன் மக்களுக்குத் துன்பமும் தருவதுதானா உனது இயல்பு? புருஷோத்தம சற்றுச் சிந்தித்துப் பார்.

பதினேழாவது சுலோகம் முற்றிற்று.



## சுலோகம் 18

விரஜ வநௌகஸாம் வியக்திரங்கதே
விரஜனஹந்த்ரியலம் விஸ்வமங்கலம்
தியஜ மநாக்சந ஸ்த்வத் ஸ்பிருஹாத்மநாம்
ஸ்வஜந ஹிருத்ருஜாம் யந்நிஷூதநம் சு. 18

இதன்—பொருள்.

அங்க (பியாரே) பிரியனே! நீ யெங்கள் இதய தெய்வம். பிராணனும் நீ தான். உன்னுடைய பிராணனால் எங்களுடைய பிராணன் வாழ்கின்றது. நீயில்லாமல் நாங்கள் எங்ஙனம் வாழமுடியும்? நீரில்லாமல் நீர்மீன்கள் வாழ இயலாதல்லவா? நீயில்லையானால் எங்களுக்கு இருப்பு (சத்தை) இல்லை. விரஜ வநௌகசாம்-ஏமதுசூதன! நினது அவதாரம் விசுவமங்கலம். உலக கல்யாணத்திற்காகவும் உனது திருவிளையாடல் விரஜ வாசிகளுக்கு நன்மை பயக்கும் பொருட்டும் ஆம். பிராணிகள் கஷ்டத்தை நஷ்டமுமாக்கும்.

நிருணும் நிஸ்ரேயஸ அர்த்தாய
வியக்தி பகவதோ நிருப ... ... பாகவதம்.

இராஜன்! பகவானுடைய அபிவியக்தி = அவதாரம், மாந்தர் களுக்கு நலத்தின் பொருட்டேயாம். "உலகம் உய்ய" க. புராணம். உலகம் = ஜீவர்கள். உய்ய = கரையேற. என்று சுகதேவர் கூறுகிறார்.

மக்கள் மனம் மாயையில் விழுந்து தடம்புரண்ட வண்டி போலத்தடுமாடுகின்றது. மாயாப்பிரபஞ்சத்தில் விழுந்தவன் நாமரூபத்தில் அழுந்துகிறான். எதைப் பிடிப்பது எதை விடுவ தென்று தெரியாமல் திகைக்கிறான். இந்நிலையில் தவிக்கும் ஜீவனிடத்தில் கருணாபரனாகிய பகவானுக்குத் தயை வந்தது. விவேகமில்லாத ஜீவர்கள் வெளிப் பொருள்களில் நாட்டங் கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணிய இறைவன் தானும் வெளிப்பட்டான். நாம உருவ வடிவத்தை யெடுத்து அன்பர்கள் முன் வந்து தோன்றிடினே. தோன்றினான். யார்

முன்னே இறைவன் தோன்றினானே அவனைக் கரையேற்று வதற்காகத் தான் அவன் தோன்றுகிறான்.

விரஜ வனௌகசாம் — அலம் விரஜனஹந்திரு - விரஜ பூமியில் மூன்று விதமாக லீலைகள் நடக்கின்றன— 1. விரஜ கோஷ்டலீலை 2. வனலீலை 3. குப்ஜலீலை. குப்ஜலீலை = கூனை நிமிர்க்கும் லீலை. பிருந்தாவனத்தில் வாத்ஸல்யரசம், சக்கியரசம், மாதுரியரச பேதத்தால் மூன்றுவித பக்தர்கள் இருக்கிறார்கள். வாத்ஸல்ய ரசத்தில் — நந்தகோபன், யசோதை உரோஹிணி இவர்கள். விரஜத்திலும் கோஷ்டத் திலும் நடக்கின்ற லீலை, கோபகுமாரர்களோடு நடக்கின்ற லீலை கோஷ்டத்திலும் வனத்திலும் நடக்கின்ற லீலையாகும்.

விஸ்வமங்கலம்—பாலமுகுந்தா! விரஜபூமிக்காகவோ அல்லது விரஜ வாசியோங்காகவோ, வேறு வனவாசிகளுக் காகவோ நீ அவதாரம் எடுத்து வரவில்லை. பின்னை? நீ உலக மக்களை உய்விக்க வேண்டுமென்று அவதாரம் எடுத்திருக் கின்றாய். முரளிதர! ஏ வனவிஹாரி! உனது லீலையை நினை க்கும்போது மானவசமுதாயத்திற்கு க்ஷேமம் உண்டாகிறது.

கோபிகள் அழுது கொண்டு கூறுகிறார்கள். நந்த லால்! நீ நிற்குணத்திலிருந்து சகுணமாகவும், நிராகாரத் திலிருந்து சாகாரமாகவும், அவ்யக்தத்திலிருந்து வியக்த மாகவும் ஆனாய் நீயே. பூர்ணத்தை விட்டுப் பரிச்சின்னமாக வும், நேதி நேதியை விட்டு ஆம் ஆம், இதம் இதம் ரூபமுமா- னாய். கோபாலா!நகரவாசிகள் கல்வி அறிவில் சிறந்தவர்கள். அவர்களது பாதுகாப்பை அவர்களே தேடிக் கொள்வார்கள். அவர்களுக்குச் சம்ரக்ஷணை செய்பவர் பலர்., நாங்கள் கிராம வாசிகள். கல்வி அறிவு இல்லாதவர்கள். எங்களைக் காப்பது நினது கடமை. ஏழை பங்களா! எங்கள் நலத்தின் பொருட்டு நீ அவனியில் வந்தாய். உலகம் உவப்ப = உலகத்தில் உள்ள ஜீவான்மாக்கள் உய்ய வந்த 'வாசுதேவா! நாங்களும் உலகத்திற்குள்ளேதானே இருக்கிறோம் எம்மை இரக்ஷிப்பது நினது கடமைதானே.

ஜிவனுடைய கொடைதன்மைக்கு அளவுண்டு. அவனுடைய சக்தி, சம்பத்தி எல்லாம் அளவுக்கு உள்பட்டவை. அளவிற்கு மீறி தானஞ் செய்தோமானல் ஏழையாகி விடுவோமோ என்னும் பயமுண்டாகும். இறைவனுக்கு அந்த எண்ணமில்லே. ஏனெனின்? அவருடைய சக்தி, சம்பத்தி எல்லாம் அபரிமிதம். அளவிற்கு அப்பால்பட்டது. எனவே தரித்திரனுகி விடுவமோ என்ற எண்ணம் இறைவனுக்கில்லே,

அதனுல் — ''வேண்டுவார் வேண்டுவதே
ஈவான் கண்டாய்'' என்கிறது தேவாரம். இறைவன்

எண்ணிக் கொடுப்பவனல்லன். சகலத்தையும் கொடுத்துத் தன்னேயும் கொடுப்பான் தயாபரன். கிருஷ்ண! எங்களோடு ஏன் கோபத்தைக் காட்டுகிறாய். ''தியஜ மநாக்'' குஞ்ச விஹாரி! எங்களுக்காகச் சிறிதுத் தியாகம் பண்ணு. முராரே! உனக்காக நாங்கள் சகலத் தியாகஞ் செய்து வந்திருக்கும் எங்களுக்காக நீ சற்று தியாகம் பண்ணு.

கோபிகள் இவ்வாறு ஏன் இசைக்கின்ருர்கள்? அன்பனிடத்தில் எதுவேண்டுமானுலும் கேட்கலாம்,சொல்லலாம். நாங்கள் ''துவத் ஸ்பிருஹாத்மநாம்'' ஸ்ரீதர! உன்னேப் பற்றிய ஆசைதான் எங்களுக்கு ஆன்மாவாக இருக்கிறது. வடிவமாக இருக்கிறதென்பது கருத்து. முராரே! உன்னேப் பெறுவது தான் எங்கள் பெருவாழ்வு. நீயில்லேயாயின் நாங்கள் உயிருடன் இருக்கமுடியாது என்றனர்.

எங்களேக் காண வேண்டுமென உனக்கு ஸ்பிருஹா = இச்சை. உன்னேக் காண எங்களுக்கு ஸ்பிருஹா - இச்சை இருக்கின்றது. ஆகையால் நாங்கள் தியாகஞ் செய்தது போல் நீயும் சற்று தியாகஞ் செய் என்றனர். நீ விரும்புவது தான் எங்கள் ஆத்மா என்பதை நன்கு உணர்வோம். ஜீவனுக்கும் ஈசனுக்கும் எண்ணம் ஒன்று தான். ஈசுவரன் ஜீவன்

நம்மை அடையட்டும் என்று எண்ணுகிறான். ஜீவனும் இறைவனை அடைவோமென்று எண்ணுகிறான். எனவே இருவரும் ஒரே எண்ணத்தைத் தான் எண்ணுகிறார்கள்.

ஒரு முறை சைதன்ய மகாபிரபுவும் வல்லப ஆசாரி யரும் ஒரு இடத்தில் கூடினர். வல்லபஆசாரியர்—பக்திக்கு இலக்ஷணம் என்ன என்றார். சைதன்ய மகாபிரபு - எவ்வாறு பகவான் சங்கரன் ஜடையில் கங்கா ஜலத்தின் அகண்ட தாரை விழுந்து கொண்டு இருக்கிறதோ அவ்வாறு சித் தமானது கனலிடப்பட்ட மெழுகென உருகிப் பகவானது திருவடியில் அகண்டமாக விழுவது பக்தியென்றார். வல்ல பாசாரியார் - சைதன்ய மகாபிரபோ! நீர் கூறுவது சரிதான்.

பகவானோடு முப்போதும் கலந்திருப்பதும் பக்திதான், ஏகதேசமாகக் கலந்து கொள்வதும் பக்திதான் என்பது குறிப்பு. நாம் பகவானுக்கு என்ற அபிமானமும் பக்திதான்.

''மை சேவக ரகுபதி பதி மோரே''து. இராமா! நான் சேவகன் = தோழன். ரகுபதி = ஸ்ரீ ராமன் பதி = தலைவன். ஈண்டு ஆண்டவனுக்கு அடிமையாவதே பக்தியென்று கூறப்படுகிறது. பாகவதத்தில் பக்திக்கு மற்றொரு இலக் கணம் - மலையிலிருந்து எழுந்த கங்கை முதலிய நதிகள் அகண்ட தாரையோடு கடலில் கவிழ்வது போலச் சித்த விருத்தி அகண்டமாக ஸ்ரீ கிருஷ்ணன் அடிகமலத்தில் விழு வது பக்தியென்று பகரப்பட்டிருக்கிறது.

''யதாகங்காம்ப:சோ அம்புதௌ'' பாகவதம். விரஜ வாசிகள் பக்தி மற்று ஒருவிதம்—ஸ்ரீ கிருஷ்ணனைச் சந்தோ ஷிக்கச் செய்யும் கருமம் பக்தி யெனப்படும் என்கிறார்கள். நமது மனம், நம்முடைய கண் காது கரம் இவைகளால் பகவானுக்குத் திருப்தி அளிப்பது பக்தி என்பது கோபிகள் கூற்று. சம்சாரத்தில் மனதை வைக்கும் போது மனம் அழுக்கடைகிறது. அழுக்கு அடைந்த மனத்தோடு ஆண்டவ னிடத்தில் செல்லலாகாது. அழுக்கடைந்த ஆடையோடு

அவைக்குச் செல்லலாகாது. அதுபோல் ஆசுபடிந்த மனத்தைக்கொண்டு ஆண்டவனிடத்திற்குச் செல்வது முறையன்று. அழுக்காடையை யொருவன் அணிந்து அவைக்குள் நுழைவானாகில் அவனை அங்குள்ளோர்கள் எள்ளி நகையாடுவார்கள். அம்மாதிரி இவனையும் இறைவன் எள்ளி நகைப்பான். ஆகையால் சுத்தமனத்தோடு பகவானிடஞ் செல்ல வேண்டுமென்பது குறிப்பு.

சுத்தமனதோடு பகவானுக்குச் செய்யும் பூஜை பலனையளிக்கும். சகல வடிவமாக பகவான்தான் நமது முந்நிலையில் நிற்கிறாரென்று காண்க. கையொன்றைச் செய்யவும் கருத்தொன்றெண்ணவும், கண்ணொன்றைப் பார்க்கவும், செவியொன்றைக் கேட்கவுமாய்ச் செய்கின்ற பூஜையை யெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே என்று பகருவது போலவாகும் மற்றைய பூஜைகள். ஆதலின் எப்போதும் அவன் பூஜையை மேற்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும்.

துவத் ஸ்பிருஹாத் நாம் — (கோபிகள்) கோவிந்தா! உன்னை யடையவேண்டும் என்கிற ஒரே ஆசைதான் ஆத்மாவாயிருக்கிறது என்றனர். ஸ்ரீ கிருஷ்ணன் - நல்லது. ஆனால் நீங்கள் விரும்புவது என்ன? கோபிகள்—திஜமநாக் - நாங்கள் விரும்புவதாவது நீ சிறிது தியாகம் பண்ணு. சிறிது தியாகம் செய்யுங்கள் என்று கேட்பது யாசகனுடைய (தந்திரம்) பழக்கம். யாசகன் சிறிது தயவு பண்ணுங்கள், கொஞ்சம் கிருபை செய்யுங்கள், சிறிது உதவி பண்ணுங்கள் என்று சொல்லுவான். ஸ்ரீகிருஷ்ணன்-என்ன தியாகஞ் செய்யவேண்டும்?

'சுவஜந ஹிருத்ருஜாம் யந்நிஷுதநம்'' கோபிகள்— நந்தகுமார்! நீ உனது உறவினர்கள் வியாதியை ஓட்டுபவன். எனவே எங்கள் உள்ளத்தின் நோயையும் போக்கவேண்டும். என்று கூறினர். நாங்களும் உனது உறவினர்கள்தானே? எங்கள் ரோகத்தை நீக்குவதும் நினது கடமை தானே.

எங்கள் மார்பில் உனது மலரடியை வைத்தால் எங்கள் நெஞ்சிலுள்ள பிணிகள் யாவும் தொலைந்து போகும். முராரே! உனது கர கமலத்தை யெங்கள் சிரமீது வை. எங்களுக்கு ஆறுதலையளி, இதோ உங்கள் முன்னே வருகிறேன் என்று கூறு. நாங்கள் பின்னர் அமைதியைப் பெறுவோம், இவ்வாறு மொழிந்ததும் அவர்களுக்கு நாம் யாரிடம் பேசுகிறோம் என்று உணர்வு உதித்தது.

யாரை நினைந்து வெயிலிடப்பட்ட வெண்ணெயைப் போல உருகுகிறோமே அவன் எங்கே? அவன் தான் நம்மை விட்டுப் பிரிந்து வனத்திற்குப் போய் மறைந்து விட்டானே. வனத்தில் மறைந்த மாயவனை என் செய்வது? எங்கே திரிகிறான் என்று யாருக்குத் தெரியும்? கோபிகள் இடத்தில் இவ்வாறு எண்ணங்கள் உதயமாயின. தங்களைப் பற்றிய கவலை முற்றிலும் நீங்கி ஜனார்தனனைப் பற்றிய சிந்தனை நிறைந்தது. கிருஷ்ணன் நம்மை மறந்து வனத்தில் திரிகிறானே, அவன் பாதம் மென்மையும் கோமளமுமாம். இப்பாதத்தைக் கொண்டு வனத்தில் அலைகிற போது அவன் காலில் முள்தைக்காதோ என்னவோ பகவான் தான் துணை.

காதலி தன் சுகத்தை நாடுகிறதில்லை. தன் காதலன் சுகத்தை மட்டும் நாடுவாள். அதுபோல் கண்ணன் சுகத்தை நாடி கோபிகள் வருந்துகிறார்கள். கோபிகள் கூறும்விதம் புதுமையானது, சக்ரபாணே! உன் பிரிவாற்றாமல் நாங்கள் வாடுகிறோம் என்பது தான். எங்கள் மனக்கிலேசத்தை மாற்ற விரைந்து வா மாயவாவென்று மருவி நிற்பது தங்கள் இதய வேதனையை நீக்குவதற்கு. கோவிந்தனை நினைந்து நினைந்து கோவிந்த தியானத்தில் மூழ்கிவிட்டனர்: கோவிந்தமயமாகி விட்டனர் என்பது குறிப்பு.

தியானம் பிரியவஸ்துவில் மனதை நிரந்தரம் வைப்பது. நிரந்தரம்=எப்போதும். கோபிகள் மாயவனை மனதில் எண்ணி இராதாரமண! வனவனமாக ஏன் அலைகிறாய்? தஞ்ச

மில்லாமல் அஞ்சுகிறோமே, கருணைக்கடலே! சற்று கண்பார். இல்லையானாலும் உன்பிரிவை ஜென்ம ஜென்மத்திற்கு நாங்கள் பொருத்துக் கொள்கிறோம். இதற்காக நீ இங்கும் அங்கும் ஓடித்திரிய வேண்டாம்.

இம்மையில் உனது தெரிசனங் கிடைக்காது போயினும் மறுமையிலாவது அவசியம் உன்னை அடைந்தே தீருவோம் என்றனர். எங்களிடத்தில் உனக்கு அன்பு இருக்கிறது. எனினும் வம்பனைப் போல மறைந்து வாழ்கின்றாயே இது சரிதானா என்று சற்று ஊகித்து உணர்.

பதினெட்டாவது சுலோகம் முற்றிற்று.



# சுலோகம் 19

யத்தே சுஜாத சரணும் புருஹம் ஸ்தநேஷு
பிதா: ஸநை: பிரிய ததீமஹி கர்க்க ஸேஷு
தேநாடவிம் அடஸிதத் வியததேந கிம்ஸ்வித்
கூர்பாதிபிர் பிரமதி தீர் பவதாயுஷாம்ந; சு. 19.

இதன்—பொருள்

"சரணும்புருஹம்" என்று சொல்லின் மூலமாகவே பகவத் பாதாரவிந்தம் மென்மையானதென்று தெரிகிறது. அங்ஙனம் இருப்ப மிருதுலம், கோமலம், சீதலம் இம்மாதிரி விசேஷணம் பகவானுடைய அடிக்கமலத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றது. இறைவனுடைய இனியமலரடியை நோக்கும் போது அழகும் இனிமையும் அமைந்திருக்கின்றண. பாதத்-தைப் பரிசிக்கும் பொழுது ப்ஞ்சனவும் வெண்ணெய் எனவும் அறியப்படுகின்றது. எனினும் கோபிகள் சுஜாதசரணும்புஜம் என்று கூறுகின்றனர். உலகிலுள்ள நூற்றுக்கணக்கான கமலங்களில் சிறந்த கமலத்தைத் திருமாலுக்கு ஒப்பிட்டு உரைக்கின்றனர்.

மீண்டும் புவனசுந்தர! எங்கள் மார்பு கர்க்கசிம் — கடினமானது — வன்மையானது. கல் நெஞ்சம். எனினும் ஈரம்—பக்தியில்லாமல் இருப்பினும் உன்பாதம் படுமானல் கல்லும் கரையும், கல்நெஞ்சமும் உருகும். எனவே தாமோதரா! அச்சம் எதற்காக? மெதுவாக நினது மலரடியை எங்கள் இதயத்தில் வை ஜனர்தன! உனது பாதமலர் பட்டதும் எங்கள் தாபம் தணியும், உனக்குப் பரமசுகம் உண்டாகும். பகவானுடைய பாத கமலத்தில் பதினான்கு புவனமும் வசிக்கின்றன.

"பாதோ அஸ்ய சர்வா பூதானி" வேதம் அஸ்ய பரமாத்மாவினது பாதத்தில் உலகமுழுவதும் இருக்கின்றது என்பது பொருள்.

ஸ்ரீ கிருஷ்ணன் — வனிதையர்களே! உங்கள் நெஞ்சம் மென்மையாக இருக்க வேண்டுமானால் விதாதாவினிடம் வேண்டுதல் செய்யுங்கள். விதாதா - நான்முகன். புருஷோத்தம! பிரார்த்தனையும் உன்னிடத்தில் தான் செய்ய வேண்டும். உனதருளால் உந்திக் கமலத்தோன் உயர்ந்திருக்கிறான். உனது கிருபையால் சகலமும் சாத்தியமாகும். சாத்தியம் - நிறைவேறுதல். 'அவனிடத்தில் நாங்கள் யாசிக்க மாட்டோம். அரசன் இருக்கும்போது ஆண்டியிடம் ஏற்பதா? ஆகையால்' உன்பாதம் பட்ட மாத்திரத்தில் பாவம் பறந்து போகும்.

யோகிகள் பகவானுடைய ஸ்ரீ சரணத்தை மனத்தில் தியானிக்கின்றார்கள். சமாதியில் விட்டு விடுகிறார்கள். தியானம் கூடும் இடும் உபாசகர்கள் பகவானை நினைக்கிறார்கள், இதயம் பூஜிக்கிறார்கள், தொழுகிறார்கள். நினைத்த காரியம் முடிந்து விட்டால் மறந்து விடுகிறார்கள்.

கோபிகள் — வாசுதேவா! எங்களுக்கு அந்தர்யாமி சரணம் தேவையில்லை வெளியில் திரியும் விஷ்ணுவின் பாதம் வேண்டும். நாங்கள் மடந்தயர்கள். எங்கள் விருத்தி உள்ளே செல்லாது. வெளியே செல்லும் இயல்பினது. எனவே உன் திருவடி தான் எங்களுக்குத் தேவை. ஸ்ரீநிவாசா! திருபாதத்தைத்தர வேண்டும் என்று மண்டியிட்டு கேட்டிருக்கிறார்கள். கோபி கோ-இந்திரியம். பி-பானம் பண்ணுவது. குடிப்பது என்பது குறிப்பு. இந்திரிய வாயிலாக ஸ்ரீகிருஷ்ணமிருதத்தைப் பானம் பண்ணுபவர்களுக்குக் கோபி யென்று பெயர். அவசியம் பகவான் வெளிப்படுவார். ஆனால் நம்பிக்கை வேண்டும். நம்பின பேர்களைப் பகவான் கைவிட மாட்டார். அன்பு உண்மையாக இருக்கவேண்டும். ஆற்றிலோர் காலும் சேற்றிலோர் காலும் வைப்பது நம்பிக்கை அல்ல.

இன்றைக்குள்ள மக்கள் பகவானை நினைப்பது அரை நிமிஷம், பலனை விரும்புவது கூடை கூடையாக விரும்பு

கின்றனர். விரும்பாமலே பலனை பகவான் தருகிறார், இருப்பினும் சபல ஜீவன் யாசிக்காமல் இருக்கிறதில்லை. இதனால் இவன் திரிசங்குச் சொர்க்கம் போல இங்குமில்லாமலும் அங்குமில்லாமலும் திரிகிறான்.

அன்னை குழந்தைக்கு அமுது ஊட்டுகிறாள். தாய்ப் பால் அருந்தும்போது குழந்தைக்கு ஆனந்தம் உண்டாகிறது. எனினும் தாயாருக்குக் கவலைநேருகிறது. ஏனெனின்? அதிகப்பால் அருந்தி விடக்கூடாது என்று. அங்ஙனம் அருந்துமானால் செமிக்காமல் நோய் வந்து விடக் கூடாதேயென்று அன்னை கருதுகிறாள். இது உண்மைதான். எல்லா குழந்தைகளைவிட நமது குழந்தை நன்றாக இருக்க வேண்டுமென்று நினைப்பது. குழந்தை அழும்போதெல்லாம் மாதா அதற்கு லட்டு கொடுக்கிறாள். ஒருநாள் குழந்தைக்குக் காய்ச்சல் வந்தது. அக்குழந்தை வழக்கம்போல் லட்டை விரும்பி அழத் தொடங்கியது. தாய் லட்டு' கொடுக்கவில்லை. அதனால் அன்னை பேரில் என்னக் குற்றம்? ஒன்றுமில்லையென்பது உறுதி.

அதுபோல் அன்னைக்கு அன்னையாகிய பரமனும் சமயத்தை அநுசரித்து யாருக்கு எப்போது எதைக்கொடுக்க வேண்டுமோ அப்போது அதை அவருக்குக் கொடுப்பான். கண்கெட்டுப் போக யாரும் மையிட மாட்டார்கள். அன்பன் கெட்டுப் போகட்டும் என்று ஆண்டவன் நினைக்கிறதில்லை. அவன் நன்றாக இருக்கட்டும் என்று தான் நினைப்பான்.

கோபிகள் நமது மார்பில் கோபாலன் பாதத்தை வைப்பதால் அவனுக்குச் சுகம் உண்டாகத்தான் செய்யும். எனினும் நமது நெஞ்சம் கல் நெஞ்சம், வன்மையான மார்பில் சரணத்தை வைக்கும் போது அவன் காலில், நோவு ஏற்பட கூடாதே என்று அஞ்சுகிறார்கள்.

''தேநாடவிம் அடசி'' எந்த பாதத்தை எங்கள் நெஞ்சில் வைப்பதற்குக் கூசுகிறாயோ அந்த பாதத்தை அடவி-

கானகத்தில் வைக்கின்ருயே உனக்கு வலி தோன்றவில்லையா? வாசுதேவா! சொல்.

'அசி'யில்லை. பின்னை? அடசி ஓடியாடித் திரிகிறாய். உடல் நலத்திற்காக உயர்ந்தோர்கள் உலாவுவார்கள் அம் மாதிரியாகவாப் போகிறாய்? நீ அடசி = விரைந்து செல்லுகின்றாய்.

கூர்ப்பாதிபி: தத்வியததேநகிம்? கூர்ப்பம் = சிறியகற்கள். நீ செல்லும் வழியில் சிறியகற்கள், முள்ளுகள். கடினமான மணல்கள் இவையெல்லாம் உனது காலில் தைக்க மாட்டாவா? உன்னால் சகிக்க முடியுமா?

கோபிகளுக்குக் பகவானுடைய பாத தலத்தைப் பற்றி முதலிலிருந்தே கவலை ஏற்பட்டது. பக்தன் பகவானது பாத கமலத்தை அனுதினம் சிந்திப்பான். ஞான மார்க்கத்தில் தலை முக்கியம்' அன்புமார்க்கத்தில் தாள் முக்கியம். தாள் = பாதம். ''அடிக்கமலம் சென்றிறைஞ்சி'' என்றும். தொடு கழற் கமலமன்ன தாள்கண்டார் என்றும், உன் திருவடி போற்றி போற்றியென்றும் பல நூல்களில் திருவடியைப் பற்றிச் சிறப்பித்துகூறியிருக்கின்றது.இதனுனும் திருவடிக்கு அதிகமகத்துவம் என்பது தெற்றனத் தெளிவாம்.

இதற்குப் பல காரணங்கள் உள்ளன. பூஜை பாதத்திற்குத்தான் செய்கிருர்கள். பாதபூஜை என்பது உலக வழக்கு. பாதத்தினுல் தான் வனத்திற்குச் சென்ருன். பாதத்தினுல் தான் அங்கிருந்து வருகிறான்.

1. ஸ்ரீகிருஷ்ண! சரணத்தை யெங்கள் மார்பில் வை என்கிருர்கள். 2. பூஜையில் சிறந்த பூஜை பாத பூஜை. கரத்திற்குப் பூஜையில்லை. ஏனெனின்? கரத்தில் (வினை) கருமம் இருக்கிறது. காலில் கதி. கதிபிரகதி. நற்கதி. ''சோம்பித் திரியேல், சுறுசுறுப்பாயிரு'' என்பது ஔவையின் வாக்கு. பாட்டியின் புகழும் பாராட்டத்தக்கது. கதி செல்லுந்தன்மை.

பக்தி மார்க்கத்தில் மோட்சத்தை சென்று தான் அடைய வேண்டும். ஞான மார்க்கத்தில் செல்லுந் தன்மை யில்லை. 3. இறைவனது எல்லா உறுப்புக்களையும் அருச்சிக்க இயலாது.

வாள் கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்? க. இராமாயணம்.

நீண்ட கண்களை யுடைய அயோத்தில் வாழும் அரிவையர்களாலும் அபிராமனது அவயங்களைக் காண இயலவில்லை. எனவே பாதத்தை வழிபடலாம். அது எளிது.

''உபாஸநாஸ்ரிதோ தருமோ ஜாதே பிரஹ்மநி வர்த்தே'' ஜீவன் தெய்வகதியை அடைய விரும்புகிறபோது வழிபாடு செய்ய நினைக்கிறான். நிற்குண பிரஹ்மத்தில் (அருவத்தில்) வழிபாடில்லை. உபாசனை செய்யமுடியாது. உபாசனை = வழிபாடு ''ஜாதே பிரஹ்மநி வர்த்தே'' உருவத்தில் தான் உண்டாகும். அருவத்தில் அல்ல. பகவான் அவதாரஞ் செய்து அன்பன் முன்னிலையில் வரும் போது தான் வழிபடமுடியும். உருவத்தில் பாதம் இருக்கிறது. அதற்கு அர்ச்சனம். வந்தனம், நமஸ்காரம் முதலிய சகலமும் நடக்கின்றன.

பகவானுடைய விராட்டு வடிவத்தில் திருவடிக்குமட்டும் பூஜை நடக்கிறது. விராட்டு – பெரியவடிவம். பகவானது பாதத்தில் பூஜை செய்தால் அவனுக்குச் செய்தமாதிரிதான், தந்தை அனுதினம் வெளியே போய் வருவது வழக்கம். ஒரு நாள் அவரது நான்கு வயது பாலகன் அப்பா! நானும் உன்னுடன் வருவேன் என்றான். தந்தை தடுத்தார், தனயன் கேட்க வில்லை. அவன் பெயர் திருமால். பிடிவாதங் கொண்டவன். மறுநாளும் தந்தை வெளியே கிளம்பும் போது நானும் வருவேன் என்றான். தந்தை - வா என்றார், இருவரும் நடந்து சென்றனர். சிறிது தூரஞ் சென்றதும் அப்பா! என்னால் நடக்க இயலாதென்றான். தந்தை—மகனே! என் கையைப்

பிடித்து செல்லென்ருர். புதல்வன் பிதாவின் விரலைப் பிடித்து நடந்தான். பார்த்தவர்கள் அப் பையன் பிதாவைப் பிடித்துக் கொண்டு போகிறான் என்ருர்கள்.

பிதாவின் ஒரு அங்கத்தைப் பற்றி மைந்தன் செல் கிறான். ஆனால் காண்பவர் அனைவரும் அப்பாவைப் பிடித்துக் கொண்டு போகிறான்என்றுசொல்வதுபோல, பக வானுடைய பாதத்தைப் பற்றினுலும் அவனைப் பற்றுவது என்றுதான் பொருள்.

ஒளிமய பகவானுடைய பூஜை மானசமாகச் செய்யப் படுகிறது. மானச வழிபாடு பாவனுமயம் எனப்படும். பக வான் பிராக்ஞுவடிவமாகவும் இருக்கிறார். பிராக்ஞு வடிவ பகவானுக்குப் பூஜை சமாதி வாயிலாக நடக்கிறது. துரிய வடிவ பகவானுக்குப் பூஜை ஞான மூலமாக உண்டாகிறது. துரியத்தில் வழிபாடில்லை. எனினும் எல்லாம் ஒன்று என அனுபவந்தான் பூஜை. இந்த அனுபவம் தத்துவ ஞானத் தால் தோன்றுகிறது.

'' யத்தே சுஜாத சரணும் புருஹம் ஸ்தநேஷு'' இதில் சரணும்புருஹம் ஒருமை. ஸ்தநேஷு பன்மை. மார்பு அநேகம். பாதம் இருமை. இருப்பினும் ஒருமையில் பிர யோகம் உண்டாகிறது. பிரயோகம் - வழக்கம். இறை வனைப் போல அவனது இரு அடிகளும் வியாபகம். எங்கும் நிறைந்ததென்பது பொருள். '' நின்பாதமலர் பரிபூரணனந் தமே என்றபடி '' ஈரடியாலே மூவுலகளந்து என்பது திருவா சகம். ஒரு அடியைப் பூமியில் அமிழ்த்தி ஓரடியால் மூவுல கத்தை அளந்தார் என்பது கருத்து.

கோபிகள் அனுபவம் வருமாறு. ஒரு பாதத்தை தரையில் வைத்துக்கொண்டு மறு பாதத்தைத் தங்கள் மார் பில் வைத்ததாக நினைக்கிறார்கள். இறைவன் சர்வாத்மா. சர்வாத்மா = எல்லார்க்கும் ஆத்மா. நாம் மட்டும் அவர்

சகல வடிவத்தைப் பிடிக்க எவ்வாறு முடியும்? முடியா தென்பது முடிபு. உடம்பும் உடம்புக்குள் இருக்கும் உறுப் புக்களும் ஜடம். உள்ளிருக்கும் ஜீவன் சேதனம். எனினும் இறைவனது அவதார சரீரம் அவ்வாறன்று. பௌதிக உடம்பு பகவானுக்கன்று. அவனுடைய மேனியில் ஐம்பூதத் தத்துவம், நிலம், நீர் கனல், காற்று, ஆகாய மில்லை.பரமனது சரீரம் சன்மயம் சின்மயம் ஆனந்த மயம். தேக தேஹி பாகம் அவனிடத்தில் இல்லை.

உன்னுடைய எண்ணத்தில் இறைவனுக்கு உடம்பு இருப் பதாகக் காணப்படுகிறது. இறைவனது காயம் ஜடமானல் (உபாசனை) வழிபாடு எவ்வாறு செய்ய முடியும்? ஆகை யால் அத்தேகம் சேதன வடிவம். அவனுடைய உறுப்புக்கள் எல்லாம் செய்யும். பெருமானுடைய யாக்கை நமது யாக்கை போலன்று. அது ஒளிமயம்.

"பொன்னார்மேனியனே" என்பது சுந்தரமூர்த்தி தேவாரம். பொன்னைப்போன்று மிளிர்கின்ற தேகத்தையுடை யவனே என்பது பொருள். இறைவனது எல்லா இந்திரி யங்களும் எல்லா வேலையையும் செய்யும். மாந்தர்கள் அவன் மலரடியைத் தொழுகிறார்கள். அத்தொழுகையை அம்மலரடி கேட்டு இன்புறும்.

தேக தேகி விபாகம் ஜீவனிடத்தில் உண்டாகின்றது. இறைவனிடத்தில் இல்லை. ஜீவன் எப்போது காயத்தைவிட நினைக்கிறானோ அப்போது அவனது தூல உடம்பு இங்கே விழுகின்றது. அவன் வினை வழியாகக் குறிப்பிட்ட உலகத் திற்குச் செல்கின்றான். குறிப்பிட்ட உலகம் சொர்க்கம் அல்லது நரகம் எனப்படும். ஆனால் பகவான் தேகத்தை விட்டு எங்கும் செல்வதில்லை. செல்ல வேண்டிய தேவையு மில்லை. இறைவன் நிஜ உடம்போடு பரந்தாமத்திற்குச் செல் லும் இயல்பினன்.

எந்த கோவிந்தனுடைய அவயவங்கள் ஆனந்த பூரணமோ அந்த ஸ்ரீ ஹரியை அனுதினம் நினைக்கின்றேன் (மனத்துன்னே) என்று ஒரு முனிவர் கூறுகின்றார். மனத்துன்னே - மனத்தின்கண்.

" யச்சரணும் புருஹம் " என்ற வாக்கியத்தில் யத், சர்வநாமம் = பகவானுடைய நாமம். சில பொருள்களை இத் தன்மைத் தென்று இயம்ப இயலாது. இயம்புதல் = சொல்லுதல். சொல்ல ஒண்ணுதே, காட்ட ஒண்ணுதே, நினைக்க வொண்ணுதே யென்றெல்லாம் நூல்களில் உரைக்கப் பெற்றிருக்கின்றன. மாயாப் பிரபஞ்சத்தில் சகலமும் அநிர்வசநீயம். கூற முடியா தென்பது குறிப்பு. மாயாவிகள் செயலை யென்னென்றுரைப்பது? எல்லாம் விழிமயக்கே என்றார் பட்டினத்தார். பெரியோர் வார்த்தையைப் பேணி கேள். இறைவனது இனிய பாதம் கமலத்திற்குச் சமானம். மார்பில் வெப்பம் இருக்குமானுல் தாமரை இலையைத் தண்ணீரில் நனைத்து மார்பில் வைப்பார்கள். ஆச்சாரிய சங்கர சுவாமிகள் அன்னை ஆரியாம்பாள் பூரணுநதிக்கு நீராட சென்றிருந்தாள். நெடு நேரமாகியும் மாதா வீடு திரும்பவில்லை, மகன் மனம் கலங்கி நதிக்கரைக்குச் சென்றார். செல்லும் வழியில் ஒரு ஆல மரத்தைக் கண்டார். அன்னை அயர்ந்து இருந்தாள். அவள் அடிக்கமலத்தில் விழுந்து வணங்கி அவள் தளர்வை அகற்ற தாமரை இலை யொன்றைத் தடக்கையால் பிடுங்கி தண்ணீரில் நனைத்து வீசினுர். தாயின் தளர்வு அகன்றது என்பதாக இதிகாசம் கூறுகிறது.

தாமரை மலர்களில் சிறந்தது. திருமாலுக்கு உவந்தது. பாதார விந்தம், முகார விந்தம் கராரவிந்தம், நயனார விந்தம் என்றெல்லாம் தாமரையைச் சக்ரபாணிக்கு உவமானமாக உரைத்திருக்கிறது. அரவிந்தம் = தாமரை.

கவலை நெருப்புக்குச் சமானம். கவலையை நெஞ்சில் வைப்பதும் காலனைக் கடிதம் போட்டு அழைப்பதும் ஒன்றுதான். கவலை காயத்தை வாட்டும். காயம் = உடம்பு. ஒரு அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அவருடைய அரண்மனையில் ஆடு ஒன்று நின்றது. அவருக்குப் பல அமைச்சர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் பெயர் வீரபலன். அமைச்சரவையைக் கூட்டி அரசன் ஆணையிட்டான் இந்த ஆட்டிற்கு நிரம்ப இரை போடவேண்டும். ஆனால் ஆடு மெலிந்திருக்க வேண்டும். இவ்வாறு யார் செய்து வருவாரோ அவருக்கு ஆயிரம் பொற்காசு என்றான். அதற்கு ஒருவரும் முன் வரவில்லை. திடீரென வீரபலன் வந்தான் வீரபலன் வேதியர் மகன். புத்திமான். அரசனுக்கு வணக்கத்தைச் செய்து விட்டு அனுமதி பெற்று ஆட்டைப் பிடித்துக் கொண்டு அவன் அறைக்குச் சென்றான்.

பகல் முழுவதும் வயிறு நிறைய இரை போடுவான். மாலையில் சிங்கத்தின் முன்னே கொண்டு நிறுத்துவான். இவ்வாறு நாள்தோறும் செய்து வந்தான். எவ்வளவு இரையைத் தின்னபோதிலும் சிங்கத்தை நினைந்து வாடிக் கொண்டே இருந்தது. இதனால் ஆடு மிக மெலிவடைந்தது. விபரத்தைக் கேட்ட வேந்தன் மனம் உவந்து ஆயிரம் பொற்காசை வீரபலனுக்கு அளித்தான்.

அளவற்ற சுகபோகங்களை நுகர்ந்த போதிலும் கவலை ஒன்று இருக்குமானால் ஆடு போல மெலிவடைந்தேயிருப்பான். கவலை கொதிக்கிற விருத்தி. அது இருப்பது நெஞ்சில். கவலை மிகுதியாகும் போது நெஞ்சில் வலி யுண்டாகும். அதை அகற்றுவதற்கு உபாயம் இறைவன் இணையடியை இறைஞ்சுவதுதான்.

பகவானது பாத கமலம் மிக மென்மையானதும் குளிர்ச்சியுடையதும் ஆம். எனவே கோபிகள் கோவிந்தன்

பாதத்தை நெஞ்சில் வைக்க மொழிகிறார்கள். இக்காலத்திலும் காய்ச்சல் மிகுதியாக இருக்குமானல் பனிக்கட்டியை சிரசில் வைக்க சொல்லுகிறார்கள். குளிர்சாதனத்தால் காய்ச்சல் விட்டாலும் கவலை விடுமோ, விடாது என்பது கருத்து. ''கந்தனை நினைந்தால் சிந்தனையொழியும்.

சிந்தனை யொழிய கிருஷ்ணனை நினை என்பது முதுமொழி. ஊசி ஒரு இடத்தில் போடுகிறோம், அது உடம்பு முழுவதும் பரவுகிறது. அது போல மாதவன் மலரடியை மார்பில் வைக்கும்போது அதிலுள்ள சீதளம் யாக்கை முழுவதிலும் பரவுகிறது. கவலைநீங்கில் அரூபி பகவான் நமது கருத்திற்கு வருகிறான். ஒரு பக்தன்– ''ஹேபிரியதம மம திருக்கநுவஸது ஹோ'' ஹிந்தி. பொருள்— ஏ எனது பிரிய நாயக! நீ யென் கண்ணில் வசிக்கின்றாய் என்றான்.

அவனுடன் ஒரு மூர்க்கன் இருந்தான். உடனே யெழுந்தான். ஒருவிரல் கூட நுழையாத கண்ணில் இவ்வளவு பெரிய பரமன், உலகமுதல்வன் எங்ஙனம் வசிக்கமுடியும் என்று வினவினான், பக்தன் பதில்- மதிஇலி! பகவான் கண்ணுக்குள் ஜோதி வடிவமாயிருக்கிறான் என்றான்.

கோபிகள்- சியாமசுந்தர! உனது பாதம் அதிசய கோமலம், சீதளம், சியாமளம், சோகசமனம், ரோகநாசனம் ஆஹ்லாதம், ஆனந்ததாயகம், ரசமயம், சுரபிதம், சுரபிதம் -வாசனை நிறைந்தது' ஆண்டவன் திருவடியில் அன்பனுக்கு மிகுந்த காதல்.

சீதாராம சரணரதி மோரே
அநுதிநபயவு அநுக்கிரஹ தோரே. து. ராமா

(இதன் பொருள்)

சீதாராமனுடைய திருவடியில் ரதி = அன்பு எனக்கு உண்டாகட்டும். அநுதினம் என்பேரில் அனுக்கிரகம் உனக்கு

உண்டாகட்டும் என்பது துளசியின் கருத்து. உன் திருவடி எனக்கு அருள்வாயே என்பதுவும் காண்க.

இறைவனிடத்தில் அன்பு செலுத்தும் போது சிறிது கஷ்டம் வந்ததும் பெரிதாகக் காணப்படுகிறது. உலகத்தில் பொருளைத் தேடும்பொழுது எவ்வளவு துன்பம் வந்தாலும் தெரிகிறதில்லை. இவர்கள் போகத்திற்கு அடிமையாக இருக் கிறார்கள். போகிகளுக்குப் பொருளைத் தேடுவதால் வரும் கஷ்டம் தெரிகிறதில்லை.

வேப்பமரத்தில் தோன்றும் புழுவிற்குக் கசப்பு தோன் றாது. அது போல செல்வத்தில் மிகுந்த வேட்கை யுடைய வர்க்கு இறைவன் தோற்றமாட்டான். அவர்க்குப் பணம் தான் கடவுள்.

''செல்வம் வந்துற்றபோது தெய்வமும் சிறிது பேணார்.'' வில்லி பாரதம். போக வாயிலாக ரோகம் வரும் என்று தெரிந்தாலும் அதிலிருந்து நீங்குகிறதில்லை. தருமத்தில் யாருக்குப் பற்றிருக்குமோ அவர் தருமம், தவம், விரதம்' தீர்த்தாசனம் இவைகள் மூலம் வரும் துன்பத்தைப் பொறுத் துக் கொள்வார். இவைகள் மூலம் வரும் கிலேசம் தோற் றாது. மோக்ஷத்தை விரும்புபவர் மோக்ஷத்தில் வரும் கஷ் டத்தைப் பொறுத்து கொள்வார். ஆக எல்லாவற்றிலும் கஷ்டமில்லாமல் இல்லை. கஷ்டத்தை யெண்ணினால் கதி கூடாது.

பகவான் வனத்தில் அலைகிறார். அங்கு திரிவதால் ஆனந்தம் உண்டாகிறது. மாதவன் மாந்தர் இதயத்தில் திரிய விரும்பவில்லை. வனத்தில் பூதகீ யென்ற பேயைக் கொன்றார். இங்கு மாந்தர் உள்ளத்தில் ஆசை யென்கிற பேய் குடியிருக்கிறது. இதை அகற்றுவது அரிது. ஆசைக்கு அளவே இல்லை. மனிதனுடைய தாகம் தணிகிறதில்லை

ஒன்று இல்லாமல் இருக்கும்போது ஒன்றை விரும்பினான். ஒன்று வந்ததும் பத்தை விரும்புகிறான்.

தசம் விஹாய சதம் வாஞ்சதி. பத்து கிடைத்ததும் நூறை விரும்புகிறான். சதம் விஹாய சஹஸ்ரம் வாஞ்சதி. நூறு கிடைத்ததும் ஆயிரத்தை விரும்புகிறான். சஹஸ்ரம் விஹாய லக்ஷம் வாஞ்சதி - ஆயிரம் கிட்டியதும் லெக்ஷத்தை விரும்புகிறான். லக்ஷம் விஹாய கோடிம் வாஞ்சதி = லெக்ஷம் கிடைத்ததும் கோடியை விரும்புகிறான். இவனது (தாகம்) விருப்பம் குறைந்த பாடில்லை. பெருகிக் கொண்டே போகிறது. இவனுக்கு ஆசை யெப்போது குறையுமோ அப்போது இவன் நலமாக இருப்பான்.

மகாபாரதத்தில் ஒரு இதிகாசம் — பாண்டவருக்கும் கௌரவருக்கும் பதினெட்டு நாள் போர் நடந்தது. துரியோதனனுக்குத் தலைமை தாங்கி நடத்தியவர்கள் நால்வர். அவர்கள் முறையாக பீஷ்மர். துரோணர். கர்ணன். சல்யன். பீஷ்மர் பெரிய போர் வீரர். வலிமை சாலி. தெய்வப்புருஷன். கங்கையின் புதல்வன். பூரண பிரம்மச்சாரி.

இரண்டாவது துரோணர். இவர் வேதியர் குலத்தில் தோன்றியவர். வில்வித்தையில் சிறந்தவர். போர்வீரரில் எவரிலும் இவர் மிகச் சிறந்தவர்.

மூன்றாவது கர்ணன். கதிரவன் புதல்வன். ஐவருக்கும் முந்தியவன்' தனக்கு நிகரென யாரும் இலாதவன். நான்காமவன் சல்லியன்,

பீஷ்மர் பத்துநாள் தலைமை தாங்கி நடத்தினார். பத்தாவது நாள் மாலையில் இவர் மடிந்தார். அதன் பிறகு துரோணரைத் தானே தலைவராக்கினான் துரியோதனன். அவர் ஐந்து நாள் போர் நடத்தி ஐந்தாவது நாள் மாலையில் இவரும் மடிந்தார். மூன்றாவது கர்ணனைத் தலைவனாக்கினான்.

அவன் இரண்டு நாள் போர் நடத்தி இரண்டாவது நாள் மாலையில் கர்ணனும் இறந்தான்.

இத்தகைய பெருமை வாய்ந்த வீரர்களும் தோல்வியைத் தழுவி மாண்டார்கள். பின்னும் துரியோதனன் ஆசை மடியவில்லை. அப்போதும் துர்யோதனன் கூறுவதாவது—சல்யோஜேஷ்யதி பாண்டவான் என்றான். பாண்டவர்களை சல்யமன்னன் வெல்லுவான் என்றான். சல்யன் போர் வீரர்களில் மிக மெலிந்தவன். அவன் ஒருநாள் போர் செய்து மடிந்தான். ஆசையால் அழிந்தவன் துரியோதனன். இதனால்-

''ஆசாபலவதி இராஜன்'' என்று பகவான் வியாசர் கூறினார்.

மனதில் வாழும் வாசுதேவன் —கோபிகாள் உண்மையில் நான் வனத்தில் திரிவது உங்களுக்குக் கிலேசம் என்றால் உயிருடன் எப்படி வாழ்கிறீர்கள்? கோபிகள் — '' பவதாயுஷாம் ந :'' மநமோகன! நான்முகன் உன்னால் கொடுக்கப்பட்ட கஷ்டத்தை நாங்கள் அநுபவிப்பதற்காக எங்கள் ஆயுளைப் பெருக்கி விட்டான். விரைவில் இறந்து விட்டோமானால் கஷ்டத்தை யார் துய்ப்பது? என்று மலரோன் மங்கையராகிய எங்களுக்கு வயதை விருத்தி செய்து விட்டான். மலரோன் = பிரமதேவன். நீசொல்லித்தான் அயன் செய்திருப்பான். உனது ஆசையில் நாங்கள் உயிரோடு இருக்கிறோம் என்றார்கள்.

கோபிகள் - முன்னரே முகுந்தனிடம் மொழிந்தார்கள். என்ன மொழிந்தார்கள் ? '' துயிதிருத அஸவ: '' என்று மொழிந்தார்கள். எங்கள் பிராணன் உன்னிடத்தில் இருக்கிறது. முடிவில் மொழிகிறார்கள் -பவதா ஆயுஷாம்ந: என்று. எமது ஆயுளும் நீ தான். இறைவன் என்ன செய்கிறானோ அதற்கு வேறாக ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. ஈசன் என்ன விரும்புகிறானோ அதற்கு மாறாக நமது விருப்பம் கூடாது.

உண்மையான பக்தன் பகவானது இச்சையில் தனது இச்சையையும், அவரது எண்ணத்தில் தனது எண்ணத்யும் இறைவனது ஞானத்தில் தனதுஞானத்தையும்ஒன்றுபடுத்து கிறான். தன்னை இறைவனுக்கு வேறாகக் கருதாதே. தன் செயலை மறந்து அவன் செயல் என்று எண்ணு. ''எல்லாம் சிவன் செயலே'' என்கிறார் பட்டினத்தார். மேலும் என் செயலாவது யாதொன்று மில்லை. என்பதனுலும் காண்க

நீ முன்னேயிராதே அவனை முன்னே வை. முன்னவன் இறைவன். உலக முதல்வன். ஆவ ஆவ என்பதை விட்டு சிவ சிவ என்று சொல். உண்டவர்க்கு உணவின் பெருமை தெரியும். கண்டவர்க்குக் கடவுள் மகிமை தெரியும். அங்கண நீர் அரிய கங்கை நீரோடு கலந்து மங்கல நீராகிறது' அது போல் ஜீவனை சிவமாக்கும் நெறி இது தான். சித்தத்தைச் சீநிவாசனிடம் வைப்பது.

பார்க்க முடியாது. அவன் பார்ப்பவன், கேட்க முடியாது கேட்பவன், அவன் எல்லாபொறிகளுக்கும் அப்பால்பட்டவன். அவன் – இறைவன் அவைகளுக்கு ஒளி அளிப்பவன். இஃது வேதாந்தம்.

ஞானிகள் இறைவனையுள்ளே நோக்கக் கூறுகிறுர்கள், கோபிகள் வெளியே பார்க்க விரும்புகிறார்கள். பக்தன் உள்ளும் புறமும் தெரிசிக்க விரும்புகிறுன். அணு அணுவில் கடவுளைக் காண விரும்புகிறான் பக்தன். ''அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே'' என்கின்றது அருட்பா, ''பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரி பூரணுனந்தமே'' என்று தாயுமானாரும் சாற்றுகின்றார். ''ஜித்து தேக்கும் தித்து ஸ்யாம மயிஹ என்று சூரதாசும் கூறுகின்றார். எங்கே பார்க்கிறேனோ அங்கே ஸ்யாமமயி =கிருஷ்ணமயம், வடிவம் என்பது சூரதாசர் கருத்து.

கோபலா! நீ யெங்களுக்குக் கஷ்டம் தருகிறாய். இதனுல் எங்களை உறவினர்களாக ஏற்று கொண்டாய். நாங்கள்

உனக்கு சொந்தமாகி விட்டோம், நீ யெங்களுக்குச் சொந்த மாகி விட்டாய். இஃது வேதந்தத்திற்கும் உடன்பாடு. என்னே? உண்மையில் ஜீவன் ஈசுவரவடிவமே. உலகம் பந்தவடிவம். பரமாத்மா சொந்தவடிவம். கிருஷ்ண! நீ யெவ்வளவு கஷ்டம் தந்த போதிலும் நாங்கள் கோபப்படமாட்டோம். பொருத்துக் கொள்வோம்.

ஒரு பொருளை வாங்கும் போது நன்றாகச் சோதித்து தட்டி, கொட்டி வாங்குவார்கள். அம்மாதிரி கேசவ! நீயும் எங்களைப் பலமாதிரியாகச் சோதிக்கின்றாய். சேவகனுக்குக் கோபம் வரக்கூடாது. பணியாற்றும் போது பொறுமை தேவை. ஆணவமும் வரக்கூடாது. ஆணவம் பணியைக் கெடுத்துவிடும். கோபிகளுக்கு ஆணவம் இல்லை. இதை அநுமான் பால் காணலாம்

பக்தனுக்கு ஆணவம் கூடாது மனிதனை ஆணவம் நரகத்தில் தள்ளும் ஆணவத்தால் அழிந்தவர் உலகில் கோடா கோடி. பணியாற்றும் போதும் ஆணவம் வராத வண்ணங்காத்துக் கொள்ள வேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ணன்—பாதம் என்னுடையது, அதைக் கொணடு எங்கும் செல்வேன். உங்கள் மார்பிள் வைக்க மாட்டேன் என்றான். ஒரு நகரத்தில் கூட்டம் நடந்தது.

அக்கூட்டத்தில் பெண்கள் யாரும் வரவில்லை. சபையில் இருந்தவர்களில் ஒருவர் திடீரென எழுந்து மனைவி வார்த் தைகளைக் கேட்பவரனைவரும் எழுந்திருக்கலாம் என்றார் அனைவரும் எழுந்திருந்தனர். ஒருவர் மட்டும் எழுந்திருக்க வில்லை. இருந்த வண்ணமே யிருந்தார். அவரை நோக்கி அனைவரும் நீர் மனைவிசொல்வதைக்கேட்பதில்லையா வென்று வினவினர். அதற்கு அவர்—நான் இல்லத்தை விட்டு வெளி யேறும் போது துணைவியார், நீங்கள் அவைக்குச் சென்றால் பொருத்தமான இடத்தில் உட்கார வேண்டும். இடையில் எழுந்திருக்கக் கூடாதென்று சொன்னாள். அவள் சொன்ன

தைக் காப்பாற்றுகிறேன் என்றான். அவையில் சிரிப்பொலி எழுந்தது. உலகம் முழுவதும் மாயைக்குள் விழுந்து மயங்குகின்றது. ஸ்ரீகிருஷ்ணன்-நான் யாருக்கும் வயப் பட்டவனல்லன். என் மனம் போல் திரிபவன்யான். உங்கள் சொல்லைக் கேட்க இயலாது என்றான். அலைவது சரி. ஆனால் கல்லும் முள்ளும் காலில் தைக்க மாட்டாவா? என்று கோபிகள் வினவினர்.

முகுந்தன்—அயிகோபிகளே! கல்லும், முள்ளும் ஏன் தைக்கின்றன? பிருந்தாவனத்தில் உள்ள ஒவ்வொரு கல்லும் முள்ளும் என்னை நேசிக்கின்றன என்றான். மேலும் எனது அன்பர்கள் ஈண்டு செடி, கொடி. மரம். மடு. நதி. மான் மயில், குயில், கிளி. கல் முள் இவ்வடிவமாக இருந்து எனக்குப் பணிபுரிகின்றனர்.

மரணம் தவிர்க்க முடியாத ஒருநிலை. ஆறிலும் சாவு நூறிலும் சாவு.

''ஆவாரை யாவர் அழிப்பர் அங்நிலையே
சாவாரை யாரே தவிர்ப்பர்'' என்பது

சங்கரச் சரிதா மிருதம். சரிரம் இறந்ததும் தனது (காரணத் தில்) ஐம்பூதத்தில் கலந்து விடுகின்றது. பிருந்தாவனத்தில் நிற்கின்ற தருக்கள் முகத்தை கீழே வைத்துக் கொண்டு நிற்கின்றன. ஏன்? தராபதி ஜனார்தனன் தரையிலிருந்து வருவானானல் அவன் முகக்கமலத்தைத் தெரிசிக்கவேண்டும் என்று. பறைவைகள் எல்லாம் தங்கள் முகத்தை மேலே வைத்துக் கொண்டு இருக்கின்றன. மாயவன் மேகத்திலி ருந்து வருவான் என்று எண்ணின.

கோபிகள் மனோபாவம்-அலா தோழிமார்களே! நாம் என்னடி புண்ணியஞ் செய்திருக்கிறோம்? இந்த பிருந்தா வனபூமி செய்த புண்ணியத்தின் கோடியில் ஒருபாகம் கூட நாம் செய்ய வில்லை. அதனாலன்றோ தாமோதரன் இத்

தரையில் தாரளமாகவும் ஏராளமாகவும் திரிகின்றான். "தன்யம் பிருந்தாவனம்" என்கின்றது பாகவதம்.

"பிரமதி தீ:" கோபிகள் கோவிந்தா! எங்கள் மதி மயக்கம் அடைந்திருக்கிறது. மயக்கம் = மோகம். அதனுல் தெளிவில்லையென்கின்றார்கள் கோபிகள். எங்களால் இன்னது என்று நிர்ணயம் பண்ண முடியவில்லை. என்ன சொல்லுகிறோம் என்று தெரியவில்லை.

சம்சர்கஜா தோஷ குணாபவந்தி — மனிதன் எப்படிப் பழகுகிறானே அப்படி அவனிடத்தில் தோஷமோ குணமோ வருகின்றன என்பது நீதி வாக்கியம் "சேரிடமறிந்து சேர் என்பது ஔவையின் அருள்வாக்கு. பொருள் வெளி. நல் லிணக்கம் அல்லது அல்லலைத் தரும் என்னும் மொழிகளால் நல்ல பழக்கம் வேண்டும் என்பது ஊகித்துணர்க. இன நலம் எல்லாப் புகழும் தரும் இவ்வாக்கியங்களனைத்தும் மனிதன் ஒழுக்கம் உள்ளவர்களோடு ஒழுக வேண்டும் என்பதை வலியுறுத்தி கூறுகின்றன.

மாயவ! எங்களோடு பழக உனக்கு அச்சம் என்? அல்லது வனத்திற்குச் சென்றவன் வழி தெரியாமல் தவிக்கின்றாயா? வழி தெரியாமல் தவிப்பது ஜீவனது தருமமாகும். நீ ஈசுவரன். உனக்கு மறதியேது? மணி வண்ணு! எங்களை மறந்ததனுல் திகைத்து திக்கற்றவன் போல் மயங்கி நிற்கின்றாயா?

"அச்சுதா! பிரீதி ஆத்ம விசேஷக்ஞே" நட்பு யாருடன் வைக்க வேண்டும்? யாரிடத்தில் அன்பும் ஆண் டவனைப் பற்றிய அறிவும் இருக்கின்றனவோ அவரிடத்தில் கேண்மை வைக்க வேண்டும். கேண்மை நட்பு. ஞானி களிடம் தொடர்பு கொள்வது நலம். பெரியவர் நட்பைப் பேணிக்கா, என்றும் பெரியாரைத் துணைக் கொள்ளென்றும் கூறுவதைக் காண்க.

இறைவன் நம்மிடத்தில் காதல் வைக்கட்டும், வைக்காமல் போகட்டும். நாம் அவனிடத்தில் காதல் அவசியம் வைக்க வேண்டும். காதல் பக்தி. இறைவனுக்கும் ஞானிக்கும் எல்லா உயிர்களும் ஒன்றுதான். எல்லாருக்கும் இறைவன் பொது. அவனை எவன் அதிகமாக நேசிக்கிறானோ அவன் நலம் பெறுகிறான். மின்சாரம் எல்லாருடைய இல்லத்திற்குப் பொதுவாக வருகிறது. எனினும் எந்த இல்லத்தில் அதிக வலிமையுள்ள பல்பை மாட்டுகிறோமோ அங்கு பிரகாசம் மிகுதியாக இருக்கிறது. அதுபோல் ஆண்டவனிடத்தில் அதிகப் பற்று வைக்கும் போது அவன் அருள் நமக்கு மிகுதியாகக் கிடைக்கிறது. அன்பு மிகுதியால் ஆருயிரைத் துறக்க வேண்டுவதில்லை. பெரியோரைப் பின்பற்றிச் சென்றால் போதும்.

நல்லாரிணக்கமும், நின்பூஜை நேசமும் வேண்டுமென்று அன்பன் விரும்புகிறான். ஆண்டவனித்தில். நெருங்க நெருங்க நமதுபாவம் நொறுங்க நொறுங்க என்றபடி. ஆற்றங்கரையை அணுக அணுக வெப்பம் நீங்கித் தட்பம் உண்டாகிறது. தட்பம் = குளிர்ச்சி. அதுபோல் இறைவனை நெருங்க நெருங்க நமது துன்பம் என்கிற வெப்பம் நீங்கி இன்பம் என்கிற தட்பம் — குளிர்ச்சி உண்டாகிறது.

அன்பு மார்க்கம் வியாபார மார்க்க மல்ல. அன்பு மார்க்கம் ஆசையற்ற மார்க்கம். மருந்து அருந்தும் போது நோய் குறைகிறது. அதுபோல் பக்தி வளர வளர ஆசை குறையவேண்டும். ஆசையைப் பிணியென்று அருணகிரியார் அருளி யிருக்கிறார் —

"பேராசையெனும் பிணியிற் பிடிபட்டு" என்பது கந்தரனுபூதி.

இறைவன் இரச வடிவினன். இரச வடிவ இறைவனைப் பெற்று தானும் ஆனந்த வடிவமாகி விடுகிறான். கோபிகள் ஆனந்த வடிவ பகவானிடத்தில் மூழ்கி யிருக்கிறார்கள். இரசமய பகவானது பிரிவாற்றாமையால் தங்களை தாம் மறந்து நிலை குலைந்து மனம் உடைந்து பேசாமல் மவுனமாகி மதியிழந்து இருக்கின்றனர்.

முடிபு — சுகபிரஹ்மம் கூறுகின்றார்.

இதி கோப்ய: பிரகாயந்த்ய:
பிரலபந்த்யஸ்ச சித்ரதா.

ருருது: சுஸ்வரம் ராஜன்
கிருஷ்ண தர்ஸந லாலஸா:

கோபிகள் எல்லா முயற்சியுஞ் செய்து சாந்தமானதும் சுகதேவர் சொல்லத் தொடங்கினர் — இராஜன்! (பரிக்ஷித்) நான் கோபிகளது கானம் முழுவதும் எழுதவில்லை. கோபிகள் பல்லாயிரம். ஒவ்வொரு கோபிகள் மனதில் கடல் அலைகள் போல பலகோடி எண்ணங்கள் எழுகின்றன அவையனைத்தையும் ஏட்டில் எழுதுவது சாத்தியமில்லை.

இதி சப்தம் பிரகாரவசனம் என்பது இலக்கணம். கோபிகள் கூறிய கானத்திற்கு அளவில்லை யென்பதைக் குறிப்பதற்காக இதி யென்னும் சொல்லை உபயோகம் செய்யப்படுகிறது. பகவானுக்காக மிகுதியான கானம். மானம் இழந்து பாடுகிறார்கள். இக்கானம் உலகில் உள்ள கானம் அனைத்திலும் சிறந்தது. இக்கானத்தினால் ஜடம் சேதனமாயிற்று, சேதனம் ஜடமாயிற்று. தன்னை மறந்து பாடியதால் இதில் அலங்காரம், இசை, தாளம், அநுநயம் அனைத்தும் அமையப்பெற்றன. இவை யெல்லாம் தானாகவே வந்து சார்ந்தன.

சித்ரதாபிரகாயந்த்ய :– கோபிகள் விசித்திரமாகக் கானம் செய்தனர். ஆசு, விஸ்தாரம், சித்திரம், மதுரம் எனக் கவிகள், கவிதைகள், கானங்கள் நான்குவிதம் கூறுகின்றனர். இவைகளில் கோபிகள் பாடிய கானம் மிக வியக்கத் தக்கது. பயனில்லாத சொல்லுக்கு விலாப மென்று பெயர். இவர்கள் பாடலில் அர்த்தம் புஷ்ப்பிதமாக இல்லாமல் புஷ்டியாக இருக்கிறது. பொருளில்லாத வாணியும், சாரமில்லாத உணவும் தள்ளத்தக்கவை. வாணி = வாக்கு.

அவர்கள் பிரிவாற்றாமல் சிலநேரம் சிரித்துக்கொண்டும் பாடுவார்கள். சில நேரம் அழுதுகொண்டும் பாடுவார்கள். எனினும் சுவரம் மதுரமாகவும் மிக இனிமையாகவும் இருக்கும். அவர் அழுகை அச்சுதனுக்குத் தொழுகையாக இருந்தது. சுஸ்வரம் - நல்ல ஸ்வரம். கோப்ய:, இவர்கள் கோபிகள். தன்னையும், தமது தலைவனையும், தனது நட்பையும் மறைத்து வைப்பவர்கள். இங்ஙனம் இருந்தும் இப்போது இவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை நினைந்து அழுகிறார்கள், தொழுகிறார்கள். ஆனந்தம் பொங்கித் தாண்டவம் ஆடுகிறார்கள். அவர்களால் அடக்கி வைத்துக் கொள்ள இயலவில்லை. இந்நிலையைக் கண்ட கண்ணன் —

நாஹம் வசாமி வைகுண்டே
யோகிநாம் ஹிருதயே நச
மத் பக்தா யத்ர காயந்தி
தத்ர திஷ்டாமி நாரத என்று நாரதற்குக் கூறினர்.

நாரதா! நான் நிலையாக வைகுண்டத்திலேயோ யோகிகள் இதயத்திலேயோ வசிக்கிறதில்லை. பின்னே? எனதுஅம்பர்கள் எங்கு குழுமி பாடுகின்றார்களோ அங்கு வசித்திருக்கின்றேன் என்றார்.ஸ்ரீகிருஷ்ண சொபாவம் என்னவென்றால் யாரொருவர் ஆடிப்பாடி அன்புடன் அழைக்கிறாரோ அவர்

முன்னே ஓடி வருவார். மேலும் கேசவனது குணம், நாமம் சீலம் பெருமை முதலிய சிறந்த குணங்களைச் செப்புவார் முன்னே சிரித்த முகத்தோடு சீக்கிரம் வருவான். எனவே கோபிகளும் பகவானது குணங்களை உரத்தக் குரலில் பாடு கின்றார்கள். அழுகிறது எதற்காக? அச்சுதனுக்கு தயை வரட்டு மென்று அழுகிறார்கள். " அழுதால் அவனைப் பெறலாமே " என்பதாலும் காண்க. பக்தியில் அழுகையும் ஒரு சாதனந்தான். " கசிந்து கண்ணீர் மல்கி " என்கின் றது தேவாரம். இவ்வளவும் ஏன் செய்கிறார்கள்?

" கிருஷ்ண தர்ஸந லாலஸா:- கோபிகள் யாருக்கும் மகளுமில்லை, யாருக்கும் மனைவியுமில்லை, யாருக்கும் தாயு மில்லை, கேவல கிருஷ்ண மயமாகி விட்டார்கள். கண்ணனை எண்ணி எண்ணி அவன் மயமானார்கள். இது வேதாந்தத் திற்கும் சம்மதம். இந் நிலையைக் கண்ட கார்முகில் வண்ணன், யமுனை நதியின் கரை. பௌர்ணமி தினம். நடு நிசி. பதினாறு கலையோடு சோமன் தனது எழில் ஆகாசத் தில் அள்ளி வீசுகிறான். யமுனை கல கல என ஓடிக்கொண் டிருக்கிறது. அந்நேரத்தில் பகவான் தோன்றுகிறார்.

தாஸாம் ஆவிர் அபூத் ஸௌரி :
ஸ்மயமான முகாம்புஜ :
பீதாம்பர தர ஸ்ரக்வி
ஸாக்ஷான் மன்மத மன்மத:

ஸௌரி :- இது சுக முனிவரால் வேடிக்கையாக உரைக்கப் படுகிறது. பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் சூரசேனவம்சத்தில் தோன்றினர். இதனால் ஸௌரி என்று கூறப்படுகிறார். வசுதேவருடைய தந்தையின் நாமம் சூரர். இதனாலும் கேசவனுக்கு ஸௌரியென்று பெயர். இந்நாமம் மற்றொரு பொருளையும் தருகிறது. சூரன் - வீரன். பகவான் கோபிக ளோடு இவ்வளவு வீரத்துவத்தைக் காட்ட வேண்டியதில்லை. அவர்கள் வனிதையர்கள். இவரோ ஈசுவரன். எனினும் காட்டினர்.

தாசாம் ஆவீர் அபூத்— ஸ்ரீ கிருஷ்ணன் வெகுதூரத்தி லிருந்து நடந்து வரவில்லை. அவர் அவர்களுடைய நடுவிலி ருந்து தோன்றினுர். ஸ்மயமான முகாம்புஜ:-புன்சிரிப்போடு —நகைத்த வண்ணம் பிரகடமானுர். வெளிப்பட்டாரென்பது பொருள். கவலையுற்றிருக்கும் மாந்தர் முன்னிலையில் வாட்டத்தோடு தோன்றினுல் அவர்களுக்கு அதிக கவலை யுண்டாகும். அதற்காக அச்சுதன் சிரித்த வண்ணம் வந்து தோன்றினுர். மடந்தையர்களே! என்னைக் காணும் என்று வருந்துகின்றீர்களே'

ஸ்மயமான முகாம்புஜ:-பகவான் எப்போதும் பிரசன் னமாக இருப்பார். ''பிரசந்நாந நம் நீலகண்டம் தயாலம்'' உபநிஷத், இறைவனது இனியமுகம் எப்போதும் மலர்ந்து இருக்கும். பகவான் சங்கரன் கழுத்தில் நீலநிறமிருப்பதால் நீலகண்டம் எனப்பட்டார். கிருபையுடையவர் எனவே தயாளு என்பது சுருதிப் பொருள். கண்ணன் முகம் கமலம் போல் மலர்ந்த வண்ணமாகவே யிருக்கும்.

நிரம்பப்பேர்கள் சிரிக்கிறதில்லை. அவர்களுக்குச் சிரிக்கத் தெரியாது போலும். எப்போது பார்த்தாலும் முகத்தை எண்ணெய்கலயம் போல் வைத்திருப்பார்கள். நகை வேண் டியதில்லை. புன்னகை தான் வேண்டும். நகை-அணிகலம். புன்னகை சிரிப்பு. சிரிப்பு ஆரோக்கியத்தை அளிக்கும். ஆணுனலும் பெண்ணுனலும் சிரிக்கத் தெரிய வேண்டும்.

பகவான் கூறுகிறார் பெண்மணிகளே! உங்கள் மார்பில் என் மலரடியை வைப்பதால் என் கால் நோவ வில்லை என்றார். மங்கையர்கள் மிகமகிழ்ச்சி யடைந்து குலுக் கென்றென்று சிரித்து கோவிந்தனை தழுவினுர்கள்.

அரிவையர்க்கு அபிமானம் வந்தது. அச்சுதன் மறைந்தான். மானமும் மதமும் மாதவனுக்கு விரும்பத் தக்கதல்ல. மனிதன் எப்பொழுது தன்னையும் சம்சாரத்தை

யும் பார்க்க விரும்புகிறானோ அப்போது பகவான் தெரி கிறதில்லை. பகவான் நம்மைப் பார்க்க மாட்டேன் என்கி றானே எனச்சிலர் கூறுகிறார்கள். அதுதவறு. அவர் நம்மை எப்போதும் பார்த்துக் கொண்டு தானிருக்கிறார். அவர் பார்ப்பதால் நமக்கு ஒரு புண்ணியமும் இல்லை. நாம் அவரைப் பார்த்தால் தான் நமக்குப் புண்ணியம். கண்ணைக் கொண்டு பணத்தைப் பார்ப்பது போல கருத்தைக் கொண்டு பகவானைப் பார். "பார்த்தரியேன் என்கிறான் ஒருவன்'

பகவானுடைய திருஷ்டி ஒரு போதும் மறைகிற தில்லை. திருஷ்டாவின் திருஷ்டி ஒரு போதும் மறைகிறதில்லை யென்று மறை கூறுகின்றது. திருஷ்டா=பகவான். திருஷ்டி பார்வை. நம்து கண்ணை மறைக்கலாம் கதிரவனை மறைக்க முடியுமா? முடியா தென்பது முடிபு.

மனிதன் குழந்தையாகி விட்டான். மாதா குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு நெய்யும் பருப்பும் கலந்த உணவையுருட்டி ஊட்டுகிருள். அக்குழந்தை அதை விரும் பாமல் முன்னே திரிந்து கொண்டிருந்த பூனைகுட்டியையும், நாய்குட்டியையும் விரும்புகின்றது.

அன்னையின் மடியிலிருக்கிற அரிய சுகமும் நெய் பருப்புக் கலந்த உணவிலிருக்கிற உரிய சுகமும் நாய் பூனை குட்டிகளில் இல்லை. இருப்பினும் குழந்தைகள் அதை விரும்புகின்றன. அதுபோல் பகவான் நம்மை தனது மடி யில் வைத்து எப்போதும் இன்பத்தை யூட்டுகிறான். நாம் அவனை மறந்து விட்டு உலகத்தை விரும்புகிறோம். இதை மனிதன் உன்னிப் பார்க்கிறதில்லை.

"வாடினும் வறுமை கூரினும் நினது வார் கழல் என்றும் மறவேனே" என்று அருணகிரியார் அருளுகிறார். தேடினுல் பொருள் கிடைக்கும். வஞ்சகமில் லாமல் பகவானுக்காக உழைக்க வேண்டும். வாய் வலிக்கும் வரை பாடவேண்டும். "பாடும் பணியே பணியா யருள்வாய்"

அநுபூதி. கோபிகள் வலிமையிருக்கும் வரை பாடினார்கள், ஆடினுர்கள். அழுதார்கள், தொழுதார்கள். அயர்ந்து தரையில் விழுந்தார்கள். ஜீவனும் ஈசுவரனும் நண்பர்கள். தோழர்கள். ''நண்பனே யெங்கள் கோவே

நாதனே ஆதி மூர்த்தி'' என்பது தேவாரம்.

பொருள்வெளி. இவர் இருவரும் அ ஞ தி — பழமையான நண்பர்கள். கண்மீச்சி விளையாடுகிறார்கள். கண்மீச்சி— கண்ணைப் பொத்தி விளையாடுவது. மகாபிரளயத்தில் ஜீவன் மாயையின் மடியில் விழுந்து மறைந்திருக்கிறான். ஈசன் ஜீவான்மாக்களை மாயையென்னும் கடலில் மூழ்கித்தேடி பிடித்து அவரவர் வினையின் அனுசாரம் சிருஷ்டியில் உடலை சம்சாரத்தில் ஈ ந் து வி ட் டு த் தா ன் சம்சாரக் கடலில் மறைந்து விட்டான். இனி நாம் அவனைத் தேடவேண்டும். இஃது கண்மீச்சி விளையாட்டு.படைப்பும் விளையாட்டுத் தான். ''அலகிலா விளையாட்டுடையாரவர்'' க. இராமாயணம். அலகிலா = எண்ணமுடியாத.திருவிளையாடல் என்கின்றது. தீந்தமிழ். இனி உலகத்தில் அவரை நாம் தேட வேண்டும். தேடத்தாம் வந்தோம். ஆனுல் வந்தவரவை மறந்தோம். மாயாப் பிரபஞ்சத்தில் வீழ்ந்தோம். மாதவனை அல்லது மாதேவனை இழந்தோம். இவ்வுலகம் ஒரு நந்தனவனம் நந்தனவனம் = பூம்சோலை. இவ் அழகிய பூம்சோலையில் ஐவகை இரசங்கள்—(சப்தம். பர்சம், ரூபம். இரசம். கந்தம்) இருக்கின்றன. இவைகளைத் துய்ப்பதில் ஈடுபட்ட பல ஜீவ ஆன்மாக்கள் இறைவனைத் தேடுவதை ம ற ந் து விட்டனர், எழில் நிறைந்த பூஞ்சோலையைக் கண்டுகளிக்கிறார்கள். அதை உண்டு பண்ணியவனைப் பார்க்கிறதில்லை.

'நதம் பஸ்யதி கஸ்சந'' வேதாந்தம். (வையம் என்னும் அழகிய பூஞ்சோலையைப் பார்க்கின்றனர்) ஆனுல் அதை ஆக்கிய பிரஹ்மத்தை யா ரு ம் அறிகிறதில்லை. பிரஹ்மம் = பரமாத்மா. சாமான் வாங்க அங்காடிக்குச்

சென்றவன் சாமான் வாங்கிக் கொண்டு வீடு திரும்பாமல் அங்காடியில் திரிவது நல்லதல்ல ''அங்காடி நாய் போல அலைந்தனையே நெஞ்சமே யென்கின்றார். பட்டினத்தார். அங்காடி - உலகம். வீடு - மோட்சம்.

சிலர் பகவானை யடைவதற்காகத் தவம். ஜெபம். தியானம், யக்ஞம் இவைகளில் ஈடுபட்டிருக்கின்றனர்'

''யக்ஞேந தாநேந தபஸா அநாசகேந', சுருதி. இவர்கள் கரும தருமங்களைச் செய்பவர்கள். இன்னும் சிலர் வெளியில் இறைவனைத் தேடியும் காணோம் என்றெண்ணி கண்களை மூடி மௌனியாயிருக்கத் தொடங்கினர். இவர்கள் யோகிகள்.

இறைவனைக் காணுமலே கண்டேனென்று வேதாந்திகள் கூறத் தொடங்கினர். கண்டேனென்று சொல்வதால் இறைவன் எண்ணினுன் இனி மறைவதால் என்ன பயனென்று முன்னே வந்தான்.

அன்பன் ஆண்டவனைத் தேட ஆரம்பித்தான். ஆனுல் கிடைக்கவில்லை. அழத் தொடங்கினுன்: காரியம்முடியும்வரை பலலீலைகளை நடத்தினுன், சுவயம் நடித்தான். முடிவில் கீழே விழுந்து விட்டான். பகவான் பார்த்தார் இனி நாம் சும்மா இருந்தோமானுல் லீலை லீலையாக இல்லாமல் உண்மையாகி விடுமென்று எண்ணி விரைந்து வந்து தூக்கினுர். மார்போடு அணைத்தார். குழந்தை விடாப்பிடியாக அழுகிற போது அன்னை முன்னே வந்து நிற்கிறாள். அன்பன் கண்ணீர் வடிக்கும் போது ஆண்டவன் வந்து அதைத் துடைக்கிறான்.

எப்பொழுது ஜீவன் நான் என்பதை விட்டு விடுகிறானோ அப்பொழுது ஈசுவரன் நான் என்று முன்னே வருகிறான். நானென்னும் ஆணவத்தில் இறைவன் வருகிறதில்லை. அபிமானம் ஆணவ வடிவம். இறைவன் ஞான வடிவம்.

இருளும் ஒளியும் போல. திரௌபதி தன் வலிமையிழந்து கோவிந்தனைக் கூவியழைத்தாள்,அப்போது ஹரி விரைந்தார். இவள் மானத்தை இழந்தாள் அவர் அதைக் காப்பாற்றினர்

மானத்தை மார்பில் வைத்துக்கொண்டு ஆண்டவனை யடைய விரும்புவதும், பெரும் கல்லை அடிவயிற்றில் கட்டி மலைமிசை ஏறுவதும் ஒன்றுதான். இவையிரண்டும் முடியா தென்பது முடிபு. தற்புகழ்ச்சி கூடாது. ''தன்னை வியந்தான் விரைந்து கெடும்'' திருக்குறள். தன்னை வியந்தவன் — புகழ்ந்து பேசியவன் விரைந்து கெடுவான் — கெட்டுப் போவான் என்பது குறிப்பு.

''ருருது:சுஸ்வரம்'' கோபிகள் அழுகையிலும் சங்கீதம் அமைந்திருந்தது. சங்கீத வித்வானிடத்தில் படியாமலே அவர்களுக்கு கானவித்தை இயல்பாக வந்தது. வாசுதேவன் திருவருள் என்று இதை நினைக்க வேண்டும். எல்லா வலிமையும் இழந்து என் செய்வோம் இறைவா என்று ஏங்கி நிற்கும் போது பகவான் வராது போனல் உலகம் என்ன சொல்லும் என்றுஎண்ணி ''பிரகட ஹோகிமைஜானா'' துளசிராமாயணம் கடைந்த வெண்ணெய் வெளிப்படுவது போல் வெளிப்பட்டார்.

'தாஸாம் ஆவீர் அபூத்''

அவர்கள் முன் தோன்றினர். கம்சனது காராகிரஹம்-சிறையில் தோன்றினரே, நான்கு கரத்தோடு அருஜுன் முன் தோன்றினாரே, தாய் யசோதையின் மடியில் குழந்தை வடிவமாகத் தோன்றினரே கம்சனது அரங்கில் வீரனுகத் தோன்றினரே அவர் தான் கோபிகள் முன்னிலையில் தோன்றினர். ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு விதமாகத் தோன்றினர். இவர்கள் முன் கீரிடாநாயகனுகத் தோன்றினர். இதுதான் ஈண்டு விசேடம். ஈண்டு = இங்கே.

பீதாம்பர தர:- இவ்வாக்கியம் பாவத்தை வெளிப் படுத்துகின்றது. ஸ்ர்க்வி — இது வடிவத்தை யுணர்த்து கின்றது. சாக்ஷாத் மன்மத மன்மத:, என்ற வாக்கியம் கேசவன் அழகை எடுத்துக் காட்டுகின்றது. கச்சப, மத்ஸ்ய வராஹ. ந ர சி ம் ஹ அவதாரங்களில் அழகைக் காட்ட வேண்டியதில்லை. கிருஷ்ண அவதாரத்தில் எழில் முழுவதை யும் கோபிகள் முந்நிலையில் அறிவிக்க வேண்டியிருக்கிறது. அறிவிப்பது - தெரிவிப்பது. சுருதியும் கூறுகின்றது—

சக்ஷுஷ சக்ஷுர் மநஸோ மந:'' என்று. கேனோப நிஷத். கண்ணைப் பறிப்பதும் மனதைப் ப றி ப் ப து ம், பிராணனைப் பறிப்பதும், அழகுக் கெல்லாம் நிலையமாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய சவுந்தரியம். கோபிகள் கண்ணையும் கருத்தையும் பறித்துக் கொண்டு வனிதையர் முன்னே வாசுதேவன் தோன்றினான் என்று சுகமுனிவர் கூறினர்.



கோபி

கீதம்

முற்றிற்று.



# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 22 | படியாத | படிக்காத |
| 29 | 11 | யனுகும் | அனுகும் |
| 30 | 5 | இ . ள் | இதன் பொருள் |
| 31 | 11 | முஹஹ் | முஹ ஹ |
| 33 | 3 | அதிகரிக்கு | அதிகாரிக்கு |
| ,, | 5 | மாந்தர்களுக்கும் | மாந்தர்களுக்கு |
| 36 | 5 | அணுக்கிரகம் | அனுக்கிரகம் |
| ,, | 22 | மேய்த்து | மேய்த்து |
| ,, | 22 | திருகிறேன் | திரிகிறேன் |
| 38 | 23 | தோண்றினாய் | தோன்றினாய் |
| 42 | 11 | வைவது | வைது |
| 44 | 20 | உலகஷேமத்தின் | உலகக்ஷேமத்தின் |
| 73 | 23 | தூக்குகிறவனுக்கு | தூக்குகிறவனும் |
| 108 | 18 | மேட்கிறபோது | கேட்கிறபோது |
| 109 | 16 | நாவை | நவை |
| 120 | 2 | மானசிகம் | மானசம் |
| 123 | 2 | சிலவாயிருக்கிறது | செலவாயிருக்கிறது |
| 124 | 2 | பண்ண்னால் | பண்ணினால் |
| ,, | 15 | பேவார் | போவார் |
| ,, | 26 | வல்லபாச்சாயார் | வல்லபாசாரியார் |
| 128 | 17 | குமிழ்சிச்ரிப்பு | குமிழ்ச்சிரிப்பு |
| 147 | 3 | வனத்திற்குக்போகாமல் | வனத்திற்குப் போகாமல் |
| 148 | 6 | பொஸ்தாமரை | பொற்றாமரை |
| 172 | 25 | வந்து வந்து | வந்து விழுந்தான் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 176 | 10 | சகோதரி சுபத்திரை பரந்தாபனுக்கு பத்தினி | சுபத்திரை பரந்தாமனுக்கு சகோதரி, பார்த்தனுக்குப் பத்தினி. |
| 179 | 10 | மோட்சனம் | மோட்சணம் |
| 183 | 11 | பிரேமக் | பிரேம் |
| 184 | 23 | கரம்பந்தன | கரமபந்தன: |
| 192 | 23 | ஸ்ரீ நிருஷ்ணன் | ஸ்ரீகிருஷ்ணன் |
| 194 | 24 | இராம்லிங்க | இராமலிங்க |
| 195 | 2 | இழநீர் | இளநீர் |
| 196 | 14 | கோபானுடைய | கோபாலனுடைய |
| 200 | 18 | மாராக | மாறாக |
| 201 | 2 | அவ்வுலகம் | இவ்வுலகில் |
| 204 | 25 | அடதியயத் | அடதியத் |
| 211 | 8 | நான்முகஸீடத்தில் அயனுக்குத் தெரியாதா | அயனுக்குத் தெரியாதா |
| 218 | 5 | திரும்ப்பிபோனால் | திரும்பிப்போனால் |
| 224 | 14 | ஒடுங்குகின்குன | ஒடுங்குகின்றன |
| 230 | 27 | பங்களா | பங்காளா |
| 237 | 13 | இடும் | விடும் |
| 239 | 14 | கோபிகளுக்குக் பகவானுடைய | கோபிகளுக்குப் பகவானுடைய |
| 250 | 2 | வேதந்ததிற்கும் | வேதாந்தத்திற்கும் |
| 262 | 9 | சக்ஷஷசக்ஷுர் | சக்ஷுஷ: சக்ஷுர் |

உ

## மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலய வெளியீட்டின் புத்தக விபரங்கள்.

| | | |
|---|---|---|
| 1) | பிரஹ்மானந்த புக்திரத்னகரம் | ரூ. 60-00 |
| 2) | ஞானவாசிட்டம் | ரூ. 40-00 |
| 3) | பக்தி ஞானமிர்தம் | ரூ. 5-00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம் | ரூ. 5-00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம் | ரூ. 15-00 |
| 6) | ,, இரண்டாவது அத்யாயம் | ரூ. 15-00 |
| 7) | பிரமசூத்திரம் மூன்றாவது அத்யாயம் | ரூ. 20-00 |
| 8) | ,, நான்காவது அத்யாயம் | ரூ. 15-00 |
| 9) | குருபரக்கண்ணி | ரூ. 2-00 |
| 10) | வேதாந்த ரத்னம் | ரூ. 4-00 |
| 11) | சங்கர சரிதாமிர்தம் | ரூ. 5-00 |
| 12) | பஞ்சாக்கினிவித்தையும் பக்திப் பாடல்களும் | ரூ. 4-00 |
| 13) | நன்மொழிக்களஞ்சியம் ஐநூறு | ரூ. 5-00 |
| 14) | சற்குருபாத வாழ்த்தும் வேதாந்த மஞ்சரியும் கீதையின் பெருமையும் | ரூ. 5-00 |
| 15) | திருவிளக்கு பூஜையின் விதி | ரூ. 2-00 |